# கல்கி

வைரவிழா ஆண்டு

KALKI 3.3.2002
ரூ. 6.00

## கடவுளின் அவதாரம்?

வேலூர்
சிறப்பிதழ்

அதிக
பக்கங்கள்

எனக்கு இடுப்பு வலி **இருந்தது**

இடுப்பு வலி, அது பழைய கதை.
ஏன்னா, நான் ஜண்டு பாம் தடவறேன்.
இது உடனே எனக்கு ஆறுதல் தருது.
ஜலதோஷம், தலைவலி இரண்டையும்
ஜண்டு பாம் உடனே போக்கிடுது.




பாம் ஒன்று. செயல் மூன்று.

www.zanduayurveda.com

SAATCHI & SAATCHI-SA/2002 M TA

# காதல் கதைதான் மக்களுக்குப் பிடிக்குமா?

**கா**தல்... காதல்... காதல் போயின் மறுபடியும் காதல்.. என்று தமிழ் சினிமா காதலித்துக் கொண்டிருக்க, ஒரு தத்துப் பெண்ணைப் பிரதான பாத்திரமாக வைத்து, 'கன்னத்தில் முத்த மிட்டால்' படத்தை எடுத் திருக்கிறார் மணிரத்னம். ஈழப் பிரச்னையை தொட்டுச் செல்கின்ற இந்தப் படத்துக்கு வரவேற்பு. டைரக்டர் மணிரத்னத்தை அவரது ஆழ்வார்பேட்டை அலுவலகத்தில் சந்தித்தோம்.

**கேள்வி** : இப்படியொரு படத்தை எடுக்க எப்படி உங்களுக்குத் துணிச்சல் வந்தது?

**மணிரத்னம்** : காதல் கதையைச் சொன்னால்தான் மக்களுக்குப் பிடிக்கும்; காதல் சப்ஜெக்டைத்தான் பார்ப்பார்கள் என்பதை நான் முழுமையாக ஏற்றுக் கொள்ள மாட்டேன். அது நாமாக நினைத்துக் கொள்வது. எந்த ஒரு கதை என்றாலும், சொல்லுகிற விதத்தில் புதுமையும், எளிமையும் இருந்தால், நிச்சயம் ஏற்றுக் கொள்வார்கள். ஒரு படம் பண்ணுகிறபோது, நான் இரண்டே இரண்டு விஷயங்களைத்தான் பார்ப்பேன். படத்தின் கதையைத் தீர்மானிப்பதில் தொடங்கி, ரிலீஸ் வரை சுமார் ஒரு வருடம் ஆகிறது. இந்த ஒரு வருட காலமும், எடுத்துக்






கொள்ளும் சப்ஜெக்ட்டில் நமக்கு ஆர்வமும், சுறுசுறுப்பும் தொய்வில்லாமல் இருக்குமா? அடுத்து, சொல்ல விரும்பும் விஷயத்தைக் கோர்வையாக, நல்லவிதமாய் நம்மால் சொல்ல முடி யுமா? இந்த இரண்டுக்கும் திருப்திகரமான பதில் இருந்தால், அந்தப் படத்தை நான் எடுப்பேன். அதுதான் எனக்கு அளவுகோல்!

**கேள்வி** : ஈழத்தமிழர் பிரச்னையைக் கதைக் களமாகத் தேர்ந்தெடுத்ததற்கு என்ன காரணம்?

**மணிரத்னம்** : நம்மைச் சுற்றி ஏராளமான பிரச்னைகள் இருக்கின்றன. அதில் எதைப் பற்றி வேண்டுமானாலும் படம் எடுக்கலாம். ஆனால், எந்த ஒன்றையும் எடுப்பதற்கு, பொருத்தமான ஒரு கதை, பார்வை அவசியம். இலங்கை தமிழர்ப் பிரச்னையைக் கையாளு வதற்கு ஏற்ற ஒரு கோணம், பார்வை எனக்கு இப்போதுதான் கிடைத்தது. பிரச்னையை எப்படி அணுகுவது என நான் யோசித்துக் கொண்டிருந்த போது, 'டைம்' பத்திரிகையில் ஒரு கட்டுரை படித்தேன். தத்து எடுத்துக் கொள்ளப்பட்ட ஒரு பெண் குழந்தை தன்னு டைய பெற்ற தாயைத் தேடிக் கொண்டு போய்ச் சந்திக்கிற அனுபவம்தான் அந்தக் கட்டுரை. அதைப் படித்ததும் எனக்குப் பொறி தட்டியது. அந்தக் கோணத்தை எடுத்துக் கொண்டு, இலங்கைத் தமிழர் பிரச்னையைப் படமாக்கலாம் என்று தோன்றியது.

**கேள்வி** : ஒரு சிறுமியின் பார்வையில் கதை சொல்ல முடிவெடுத்த பின் அந்தக் கதாபாத்தி ரத்துக்குப் பார்த்திபனின் மகள் கீர்த்தனாவைத் தேர்ந்தெடுத்தது எப்படி?

**மணிரத்னம்** : இந்தப் படத்தின் மொத்த கதையுமே அந்தக் குழந்தை மேல்தான் அமைந்திருக்கிறது. எனவே, அந்த கேரக்ட ருக்குப் பொருத்தமாக குழந்தை கிடைத்தால்தான் கதை நிற்கும். ஆகவே, டெஸ்ட்டின் போது படத்திலிருந்து ஒரு சீனைக் கொடுத்து, நடித்துக் காட்டச் சொன்னோம். மூன்றாவதாகவோ, நான்காவதாகவோ, நாங்கள் டெஸ்ட் பண்ணிய குழந்தை கீர்த்தனா. படத்தில் முதல் காட்சி யாக வருமே, அந்த சுய அறிமுக சீனை நடித் துக் காட்டிய கணமே, கீர்த்தனாதான் அந்தக் கேரக்டருக்கு என்று முடிவு செய்து விட்டோம். அந்த கேரக்டருக்கு கீர்த்தனா கிடைத்தது என் அதிர்ஷ்டம்.

**கேள்வி**: இதுபோன்ற ஒரு சிக்கலான விஷயத்தைக் கையாள்கிறபோது, பிரச்னை ஏதாவது...?

**மணிரத்னம்**: எந்த ஒரு காரியம் பண்ணு கிறபோதும், முதலில் நமக்கு அதில் ஆழமான பிடிப்பு இருக்க வேண்டும்; நேர்மை தவறாமல் செயல்பட வேண்டும் என்கிற எண்ணம் இருக்க வேண்டும். அப்படியிருந்தால், தைரிய மாக எந்தக் காரியத்திலும் இறங்கலாம். இந்தப் படத்தைப் பொறுத்தவரை நான் எடுத்துக் கொண்டது, கடந்த பல வருடங்களாக மக்கள் அனுபவிக்கும் சோகம்தான். படத்தில் வரும் சிறுமி அமுதா, அவர்களது சோகங்களின் ஒட்டுமொத்த பிரதிநிதித்துவ பிரதிபலிப்பு. சொந்த மண்ணை விட்டு, அகதிகளாய் வெளி யேறி, அந்த மண்ணை, அங்கே நிலவும் அவலங் களை, அங்கேயே விட்டு விட்டுப் பிரிந்து வந்த சொந்த பந்தங்களை, நினைத்துப் பார்க்கிற போது ஏற்படும் சோகம், மனக்காயம், ஆதங்கம் இதைத்தான் நான் சொல்லியிருக்கிறேன். அதை, ஆத்மார்த்தமாகச் சொல்கிற போது, எதற்கும் பயப்பட வேண்டியதில்லையே!

**கேள்வி** : படத்தில் தத்தெடுக்கப்பட்ட பெண் குழந்தையின் ஒன்பதாவது பிறந்த நாளன்று, அவளது பெற்ற தாய் பற்றிய உண்மை கூறப்படுகிறது. உண்மையில் ஒன்பது வயது சிறுமிக்கு, அதை ஏற்கிற மனப்பக்குவம் இருக்குமா?

**மணிரத்னம்** : மனோதத்துவ நிபுணர்கள் ஒன்பது வயதே ரொம்ப லேட் என்கிறார்கள். ஆறேழு வயதிலேயே உண்மையைச் சொல்லி விட வேண்டுமாம். பெரியவர்களாக, தானாகத் தெரிந்து கொள்வது என்பதெல்லாம் பழைய தியரி.

**கேள்வி** : ஈழத் தமிழர்கள் மத்தியிலிருந்து, இந்தப் படத்துக்கு வந்துள்ள ரியாக்ஷன் என்ன?

**மணிரத்னம்** : ராமேஸ்வரத்தில் படப் பிடிப்பின்போதே உணர்ச்சிபூர்வமான







ரியாக்ஷன்களை நான் பார்த்தேன். அகதிகள் முகாம்களிலிருந்தே பலரை அழைத்துச் சில காட்சிகளுக்குப் பயன்படுத்தினோம். அவர்கள், ராமேஸ்வரத்தில் படகு வந்து நிற்கும் இடத்துக்குப் போன உடனேயே அவரவர்கள் அகதிகளாய்த் தப்பி ஓடி வந்து இறங்கிய சோக தருணங்களை நினைத்து எமோஷனல் ஆகி விட்டார்கள். கடலில் அலைபாயும் படகில் வருகிற காட்சியின் போது, பலர் குமுறி அழுது விட்டார்கள். அதைவிட முக்கியமான இன்னொன்று, படத்தில் இடம்பெறும் ஈழத்தமிழ் வசனங்களை, சென்னையில் வசிக்கும் ஈழத் தமிழர்களைக் கொண்டே பின்னணி குரல் கொடுக்க வைத்தோம். அப்போது, காட்சிகளைப் பார்த்து, கண்ணீர் பெருக்கெடுக்க, வசனம் பேச முடியாமல் அவர்கள் தடுமாறிய சமயங்கள் ஏராளம். சினிமா காட்சியைப் பார்த்துவிட்டு, மனம் உடைந்து போனார்கள் என்றால் எந்த அளவுக்கு அவர்களைப் பாதித்திருக்கின்றன என்று புரிந்து கொள்ளலாம்.

**கேள்வி :** சினிமா டைரக்டர் என்பதை மறந்து, ஒரு மனிதர் என்கிற கோணத்தில் இலங்கைப் பிரச்னைக்கு என்ன தீர்வு என நீங்கள் நினைக்கிறீர்கள்?

**மணிரத்னம் :** இருபதாண்டுகளுக்கும் மேற்பட்ட பிரச்னைக்கு ஒரு தனிநபர், ஒரு சினிமா மூலம் தீர்வுகண்டு விட முடியாது. ஏற்கெனவே, ஒரு தலைமுறையினர் தங்களைத் தொலைத்து விட்டார்கள். கல்வி, சமூகம் என எல்லா வளர்ச்சிகளும் தடைபட்டு விட்டன என்பது பெருத்த சோகம். படத்தில் வரும் கதா பாத்திரங்களைப் போலவே, நிச்சயம் ஒருநாள் பிரச்னை தீரும் என நானும் நம்புகிறேன். அதிர்ஷ்டவசமாக, அதற்கான அரசியல்ரீதியான அணுகுமுறைகள் சமீபகாலமாக தென்படுவது சந்தோஷமளிக்கிறது.

**கேள்வி :** ரோஜா, பம்பாய், உயிரே போன்ற படங்களில் அகில இந்திய அளவில் முக்கியத்துவம் வாய்ந்த பிரச்னைகளை எடுத்துக் கொண்ட போது, அகில இந்திய அளவில் அங்கீகாரம் கிடைத்தது. இது தமிழர் பிரச்னையாயிற்றே! அதுபோன்ற பரவலான வரவேற்பு கிடைக்காதல்லவா?

**மணிரத்னம் :** ரோஜா படம் எடுத்த போது, அகில இந்தியப் படம் என்றெல்லாம் நான் நினைக்கவில்லை. அதுபோலத்தான், இந்தப் படத்தையும் இங்கே ஓடுமா? அங்கே ஓடுமா என்றெல்லாம் யோசித்துக் கொண்டிருக்காமல், இதுகுறித்து ஒரு படம் பண்ண வேண்டும் என்ற ஒரே காரணத்துக்காக படமெடுத்திருக்கிறேன்.

**கேள்வி :** படத்தில் உங்களுக்கு மிகவும் பிடித்த காட்சி எது?

**மணிரத்னம் :** வேறு ஒருவருடைய படத்தைப் பார்த்து விட்டு இன்ன காட்சி எனக்கு மிகவும் பிடித்தது என்று என்னால் சொல்ல முடியும். ஆனால் என் படத்தில் என்னால் அப்படிச் சொல்ல முடியாது. காரணம், ஒரு சிறு காட்சி என்றாலும் கூட, எனக்குப் பிடித்தாற்போல அமைகிற வரை, நான் திரும்பத் திரும்ப எடுப்பேன். படத்தில் இது தப்பு என்று தெரிந்தால், உடனே அதை சரிசெய்து விடுவேன்!

**கேள்வி :** வழக்கம் போல, இந்தப் படத்திலும் மழை சீன் (கிளைமாக்ஸ்) வைத்திருக்கிறீர்களே! உங்களுக்கு மழை மீது ஏன் அத்தனை காதல்?

**மணிரத்னம் :** வழக்கமாய் மழை சீன் வைப்பதற்குப் பிரத்யேகக் காரணம் ஏதுமில்லை. காலம் காலமாக தண்ணீர்ப் பஞ்சம் நிலவும் சென்னையில் வளர்ந்தவன் நான்! அதனாலோ என்னவோ! ஆனால் இந்தப் படத்தில், கிளைமாக்ஸில் நடக்கும் தாய் – மகள் சந்திப்புக்கு, வசனம், பாடல், பின்னணி இசை போன்றவற்றை விட மழை அதிக வலு சேர்க்கும் என நினைத்தேன். நான் குறிப்பிட்ட 'டைம்' பத்திரிகை கட்டுரை கூட அந்தப் பெண்ணும், தாயும் சந்தித்த சமயம், நாங்கள் அனைவரும் அழுதோம்; வானமும் சேர்ந்து அழுதது என்று தான் முடிந்தது. படத்திலும் அப்படியே காட்சியை அமைத்திருப்பதால், அதற்கு ஒரு கவிதைநயம் கிடைத்திருப்பதாக நினைக்கிறேன்.

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**
வண்ணப்படங்கள் : **யோகா**

Newsweek

THE BIBLE AND THE QUR'AN

# பைபிளும் குரானும்

"பைபிளும் குரானும் ஒரே செய்தியைத்தான் சொல்கின்றன; இரண்டுமே கடவுளின் தூதர்களைப் பற்றியும் மீட்சியைப் பற்றியும் நரகத்தைப் பற்றியும்தான் பேசுகின்றன. இப்படி இருக்கையில் மதத்தின் பெயரால் போராட்டம் ஏன்?" என்று ஆரம்பித்து, 'நியூஸ்வீக்' இதழில் குரானையும் பைபிளையும் ஒப்பிட்டு ஒரு கட்டுரை வெளியாகி இருக்கிறது.

அந்தக் கட்டுரையிலிருந்து...






*பைபிளைப் போலவே, குரானிலும் தெய்வீக அதிகாரம் வலியுறுத்தப்படுகிறது. ஆனால் தெய்வீக அருள் பெற்ற மனிதர்கள்தான் பைபிளை எழுதினார்கள்*

*மேற்கண்ட கட்டுரை பற்றி மார்க்க அறிஞர் மவுலவி ஜைனுலாபுதீனிடமும் வலம்புரிஜானிடமும் கேட்டோம்.*

## மதரீதியான போராட்டம் அல்ல!

பைபிளிலும், திருக்குரானிலும் சொல்லப்பட்டிருக்கும் விஷயங்களில் அடிப்படையாகவே பல வேறுபாடுகள் உண்டு.

கடவுளுக்கு மனைவி, மக்கள் இல்லை. இது இஸ்லாத்தின் அடிப்படை. ஆனால் கிறித்துவம், ஏசுவை கடவுளின் குமாரர் என்கிறது.

கிறித்துவம் பிதா-சுதன்-பரிசுத்த ஆவி என்ற திரித்துவத்தைச் சொல்கிறது. ஆனால் இஸ்லாம் ஏகத்துவத்தைச் சொல்கிறது.

மனிதன் பாவியாகவே பிறக்கிறான் என்று பைபிள் சொல்கிறது; ஆனால் ஒரு பாவமும் அற்றவனாகப் பிறக்கிறான் என்று இஸ்லாம் சொல்கிறது.

எல்லோருடைய பாவங்களையும் சுமந்து கொள்வதற்காக ஏசு தன்னைத்தானே சிலுவையில் பலியாக்கிக் கொண்டார் என்று கிறித்துவம் சொல்கிறது. ஒருவரது பாபத்தை மற்றவர் சுமக்கவே முடியாது என்று இஸ்லாம் சொல்கிறது.

பாபம் செய்து விட்டால் மதகுருமார்களிடம் confession செய்வதன் மூலம் பாபநிவர்த்தி அடையலாம் என்று கிறித்துவம் சொல்கிறது. ஆனால் இஸ்லாமோ கடவுளிடம் நேரடியாகப் பாப மன்னிப்பு பெற வேண்டும் என்று சொல்கிறது.

சொர்க்கம், நரகம் பற்றி இரண்டு வேதங்களில் பேசப்பட்டாலும், அதை அடைவதற்கான வழிகளில் இரண்டும் வித்தியாசப்படுகின்றன. ஒருவன் செய்யும் நன்மை, தீமைக்கேற்ப, சொர்க்கமா, நரகமா என்பதைக் கடவுள் தீர்மானிப்பார் என்று மிகத் தெளிவாகவே குரானில் சொல்லப்பட்டிருக்கிறது.

பைபிளிலும், குரானிலும் கிட்டத்தட்ட ஒத்த பெயருடைய பலரைப் பற்றிச் செய்திகள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆனால் அவர்களை அறிமுகப்படுத்தும் விதத்தில் வித்தியாசப்படுகின்றன. உதாரணமாக தாவீது (குரானில் தாவூது) லோத்து (குரானில் லூத்து) ஆகியோரைப் பற்றி பைபிளில் தவறான முறையில் சொல்

# பேசுவது ஒன்றுதானா?




என்று யூதர்களும் கிறிஸ்தவர்களும், கருதுகிறபோது, அல்லாவின் நிரந்தரமான வார்த்தைகளாகவே குரானை முஸ்லிம்கள் நினைக்கிறார்கள். குரான் என்றால் ஒப்பித்தல் என்று அர்த்தம். ஆக, கடவுளின் சொற்களை வெளிப்படுத்த முகம்மது ஒரு கருவியாக இருந்திருக்கிறார்; அவராக அவற்றை உருவாக்கவில்லை. மேலும், முகம்மதுவிடம் கடவுள் பேசிய மொழி அரபி ஆதலால், குரானின் மொழிபெயர்ப்புகள், கடவுளின் அசல் உரைகளுக்கு விளக்க உரைகளாகவே கருதப்படுகின்றன.

பைபிளைப் படிக்கிறவர்கள், ஆபிரகாம், மோஸஸ், டேவிட், ஜான் த பாப்டிஸ்ட், ஜீஸஸ் - ஏன், கன்னிமேரி ஆகிய பெயர்களைக் குரானிலும் பார்க்கலாம். ஆனால் இவர்களைப் பற்றியச் செய்திகள் பைபிளில் இருப்பதற்கு முற்றிலும் →

லப்பட்டிருக்கின்றன. குரான் இதை மறுக்கிறது.

இரு மதங்களுக்கிடையே போராட்டம் என்பது முற்றிலும் தவறாகும். அமெரிக்கா இஸ்ரேலுக்கு ஆதரவு அளிப்பதும், ஆப்கான் மீது தாக்குதல் நடத்தியதும், கிறித்துவ மார்க்கத்தைப் பரப்புவதற்காகவோ நிலை நிறுத்துவதற்கோ அல்ல. உண்மையில் யூதர்கள்தான் கிறித்துவர்களுக்கு முதல் எதிரி. ஏசுவைக் கொன்றவர்கள் மட்டுமல்ல; அவர் வாழ்ந்த காலத்தில் இழி சொற்களால் ஏசியவர்களும் யூதர்களே! எண்ணெய் வளம் மிக்க மத்திய கிழக்கில் தமது ஆதிக்கத்தை நிலைநாட்டவே இஸ்ரேலை உபயோகப்படுத்தி முஸ்லீம் நாடுகளை மிரட்டி வருகிறது அமெரிக்கா. ஒஸாமா பின்லாடனைப் பிடிப்பதற்காக ஆப்கான் மீது படையெடுத்து அப்பாவிகளைக் கொன்றது கிறித்துவ மார்க்கத்தின் நோக்கமாக இருக்கவே முடியாது. ஆப்கான் மீது தன் ஆதிக்கத்தை நிலைநாட்டவே இந்தப் படையெடுப்பு.

திருக்குரானில் இரண்டுவிதமான கட்டளைகள் உள்ளன. தனி மனிதர்கள் பின்பற்ற வேண்டியவை; அரசுகள் பின்பற்ற வேண்டியவை என்று இரு வகைகள். துரதிர்ஷ்டவசமாக குரானில் உள்ள போர் குறித்த கட்டளைகளை, முஸ்லிம் அல்லாதவர்கள் - அதிலும் இஸ்லாத்தை வெறுப்பவர்கள், இஸ்லாத்துக்குத் தவறான வடிவம் தர பயன்படுத்திக்கொள்கிறார்கள். குரானில் "வெட்டுங்கள்; கொல்லுங்கள்" என்ற வசனங்கள் உண்டு. ஆனால் இவற்றைத் தனியாகப் பார்க்கக் கூடாது. இந்த வசனங்களுக்கு முன் உள்ள வசனங்களைப் பார்த்தால் யுத்த களத்தில் செயல்படுத்த வேண்டிய கட்டளைகள் என்பது புரியும். (உ.ம்: இரண்டாவது அத்தியாயம் 190, 191) முஸ்லிம்களிலும் அரைகுறையாகப் புரிந்து கொள்ளும் சிலர் மக்களைத் தூண்டி ஆள் சேர்ப்பதற்காக இத்தகைய வசனங்களைப் பயன்படுத்திக் கொள்கிறார்கள். இரண்டுமே தவறாகும். →



—மவுலவி ஜைனுலாபுதீன்

மாறுபட்டவை. குரானில், தேவதூதர்கள் எல்லாருமே முஸ்லிம்கள். உதாரணமாக, ஆபிரகாம் (இப்ராஹிம்), முதல் முஸ்லிம் ஆகக் கருதப்படுகிறார். ஏனென்றால் அவர் தமது தகப்பனாரின் மதத்தை ஏற்காமல் அல்லாவைச் சரண் அடைந்தார்; அவருடைய பெயரும் பைபிளில் குறிப்பிடப்படவில்லை. இஸ்லாமிய புனிதத் தலமான மெக்காவில் அவர் காபா கட்டிய குறிப்பும் இல்லை. குரானில் பேசப்படும் மூஸா, பைபிளில் வரும் மோஸஸ் போல இருக்கிறார். பெற்றோருக்குப் பணிந்து நடக்க வேண்டும் என்பது திரும்பத் திரும்பச் சொல்லப்படுகிறது. குரானில் வரும் ஈஸா, பைபிளில் வரும் ஜீஸஸ் போன்றே சித்திரிக்கப்பட்டிருக்கிறார். மெக்காவில் முகமதுவை முதலில் மக்கள் நிராகரித்து



அலட்சியம் பண்ணியது போலவே அவரையும் வெறுத்திருக்கிறார்கள். ஆனால்

குரானை தவறாகப் பயன்படுத்துவோரில் லேடனும் ஒருவர் என்றால், அவரை அவ்வாறு பயிற்றுவித்து, மத உணர்வைத் தூண்டி, அன்றைக்கு ஆப்கானை ஆக்ரமித்த ரஷ்யாவுக்கு எதிராகப் போராட ஆயுதங்கள் கொடுத்து அனுப்பி வைத்து, இந்த நிலைக்கு அவரை ஆளாக்கிய முதல் குற்றவாளி அமெரிக்காதான். வினை விதைத்தவன் கதைதான்.

## இடைவெளிகளை நிரப்புகிறது குரான்! - வலம்புரிஜான்

கிறித்துவர்களும், முஸ்லீம்களும் ஒரே வம்சாவளியில் வந்தவர்கள்தான் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் அடிப்படையில் பல வேறுபாடுகள் இருக்கின்றன. புதிய ஏற்பாடு அருளப்பட்ட பின் 700 ஆண்டுகளுக்குப் பிறகு இறைவனால் உலகுக்கு சொல்லப்பட்டது குரான். புதிய ஏற்பாட்டில் உள்ள இடைவெளிகளை நிரப்புகிறது குரான். இஸ்லாம் தோன்றுவதற்கு முன்பும் உலகில் முஸ்லீம்கள் இருந்தார்கள். அவர்களை மூமீன்கள் என்று சொல்லுவார்கள். 1,25,000 இறைத் தூதர்களை முன்பே இறைவன் உலகுக்கு அனுப்பி வைத்தான் என்று சொல்லப்படுகிறது. அந்த இறைத் தூதர்கள் செல்லாத மக்கள் தொகுதியே கிடையாது. பிற சமயங்களிலிருந்து வந்த தூதுவர்களைக் கூட நல்லிணக்கம் கருதி ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று மறைமுகமாகச் சொல்கிறது இஸ்லாம். ஏதென்ஸ் நகரில் சாக்ரடீஸ் இறந்த இடத்தில் கூட தர்க்கா கட்டியிருக்கிறார்கள்.

'இறைவன் ஒருவனே', இது இஸ்லாத்தின் முக்கியமான அடிப்படை. ஆனால் பைபிளில் "அவர் (கர்த்தர் - கடவுள்) பிதா, நான் (ஏக) குமாரர்" என்று சொல்லப்பட்டிருக்கும். ஒருமுறை சஹாபாக்களுடன் இருக்கும் போது சட்டை இல்லாமல் இருப்பார் நபி. சட்டையைப் போட்டுக் கொள்ளுங்கள்" என்று அவர்கள் சொல்லும் போது, "ஹிந்துஸ்தானத்திலிருந்து ஏகத்துவ தென்றல் (ஒரே கடவுள் கொள்கை) வீசுகிறது" என்றாராம் நபிபெருமான். "இறைவன் பெறுகிறவனும் அல்ல; பெறப்படுகிறவனும் அல்ல என்று தெளிவாகச் சொல்கிறது குரான். கிறித்துவம் வலியுறுத்தும் திரித்துவத்தை அறவே மறுக்கிறது குரான்.

'பாவம்-புண்ணியம்', 'சொர்க்கம்-நரகம்' போன்றவற்றிலும் வித்தியாசமான கருத்துக்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. குரானில் அல்-பகரா (அல்-நல்ல; பகரா- எருது) என்ற அத்தியாயத்தில் 62வது வசனம் - நீங்கள் முஸ்லீம்களாகவும், யூதர்களாகவும், கிறித்துவர்களாகவும், சகாபீன்களாகவும் இருந்தாலும், ஒரே இறைவனை நம்பி கியாமத்து நாளை (தீர்ப்பு நாளை) எதிர்பார்த்து நல்ல அமல்களைச் செய்தால் உங்கள் அல்லா உங்களை வெட்கமடையச் செய்ய மாட்டார்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. மதங்களைத் தாண்டி மனிதகுலத்துக்கு விடப்பட்ட செய்தி இது. ஆனால் குரான் அனைவரையும் முஸ்லிமாகச் சொல்லவில்லை.

ஏசுவின் அற்புதங்களைப் பெயர் சொல்கிற அளவுக்கு குரானில் சொல்லப்படவில்லை. ஒருமுறை நபி அவர்களின் தோழர்கள் அவரிடம் "ஈசா

ஏசு கடவுளின் குழந்தை என்ற கிறிஸ்துவர்களின் கூற்றை குரான் ஏற்கவில்லை. சிலுவையில் ஏசு அறையப்பட்டதைக் கூட மேலோட்டமாகத்தான் சொல்லுகிறது. ஆனால் குரானின்படி ஏசுபிரான் மர்மமான முறையில் இறக்கவில்லை; அல்லா அவரை சொர்க்கத்துக்கு அழைத்துச் செல்கிறார்!

அரசியல்ரீதியாக, மேற்கத்திய நாடுகளின் தற்போதைய நிலை குரானுக்கு எதிரானது அல்ல. ஆனால் குரானை எப்படித் தவறாகச் சிலர் அர்த்தம் கற்பிக்கிறார்கள் என்பதுதான். குரான் ஒரு ஒன்றுபட்ட முஸ்லிம் சமுதாயத்தைப் பற்றிச் சொல்லுகிறது. ஆனால் சரித்திரத்தைப் பார்த்தால், மதரீதியான அதிகாரத்துக்கும், இஸ்லாமிய அரசுகளுக்கும், தொடர்ந்த போராட்டம் இருந்து வருவது தெரியும். ஒரு காலத்தில் குரானின் அடிப்படையில் நடுவர்கள் தீர்ப்பளித்து வந்தார்கள். இன்றைய இஸ்லாமிய நாடுகளைப் பொறுத்தவரை, அதிகாரபூர்வமான மதத் தலைமையின் கருத்துக்களுக்கு முழுதுமான மதிப்பும், அங்கீகாரமும் கிடைப்பதில்லை.

எல்லா நாடுகளிலும் உள்ள மதவாதிகளைப் போலவே, முஸ்லிம்களும் தமது விதண்டாவாதங்களுக்கு எல்லாம் குரானை ஆதாரம் காட்ட ஆரம்பித்து விடுகிறார்கள்; தங்களுக்குச் சாதகமாக இவற்றைக் கூற ஆரம்பித்து விடுகிறார்கள். ஒசாமா பின்லாடன் அவர்களில் ஒருவர்!

- இப்படி முடிகிறது அந்தக் கட்டுரை.

- சித்தார்த்

---

அற்புதங்கள் செய்தாரே... நீங்கள் எதுவும் செய்வதில்லையே?" என்ற போது, "இறைவன் என் மூலம் அருளிய திருக்குரானே ஓர் அற்புதம்தானே" என்றார். பைபிள், குரான் இரண்டிலும் வட்டி வாங்குவது, வட்டிக்குப் பணம் வாங்குவது ஆகியவை கண்டிக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் பின்னர் வந்த மார்க்ஸை விட மிகக் கடுமையாக அதைக் கண்டித்தவர் நபி. விபசாரத்தைப் பற்றி ஏசு, நபி ஆகியோர் கண்ணோட்டமும் வேறுபடுகிறது. "ஒரு பெண்ணைத் தவறான பார்வையோடு பார்த்தாலே அது உள்ளத்தில் விபசாரம் செய்வதாகப் பொருள்படும்" என்கிறார் ஏசு. ஆனால் நபியோ, "நீங்கள் ஆடைகளை அணிகிற போது கவனமாக இருங்கள். அலங்கோலமாக ஆடை அணிவது, விபசாரத்தின் முதல் படி" என்கிறார்.



மதச்சடங்குகள், திருமணம் ஆண்கள் - பெண்கள் உறவு முறை பற்றி இரு வேதங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது என்பது தவறு. பைபிளில் எதுவும் சொல்லப்படவில்லை. கிறித்துவர்கள் கடைபிடிப்பது பின்னர் திருச்சபையால் (சர்ச்) போடப்பட்டுள்ள கட்டளைகள்தான். ஆனால் இவை அனைத்தும் குரானில் சொல்லப்பட்டிருக்கிறது. தவிர பெண்களுக்கான சொத்துரிமையும் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

இருமதங்களுக்கிடையே மோதல் என்பது சரியல்ல. ஏசு, பாலஸ்தீனியர்களின் விடுதலைக்காகப் பாடுபட்டவர். எனவே அவர்களைக் கொடுமைப்படுத்திய ரோமாபுரி மன்னர்களை கழுகுகள் என்று வர்ணித்தார். யூதர்கள் அவரைக் கொன்றார்கள். கிறித்துவர்கள் என்று சொல்லிக் கொள்கிற அமெரிக்கர்கள், யூதர்களுக்காக இஸ்ரேல் என்ற அரசை உருவாக்கி அதே பாலஸ்தீனியர்களை ஒடுக்கி வருவதுதான் சரித்திர விபரீதம்.

குரானை தங்கள் விதண்டாவாதத்துக்குப் பயன்படுத்துபவர்கள் சில மதவாதிகள்தான். ஆப்கானிஸ்தான் மீது தாக்குதல், லேடனை வேட்டையாடுதல் போன்றவற்றில் மதரீதியாக ஒரு முக்கியத்துவமும் கிடையாது. ஏகாதிபத்திய மனப்பான்மையின் வெளிப்பாடுகள்தான் அவை. குரானில் சொல்லப்பட்டிருக்கும் பல விஷயங்கள் இன்றும் கூட காலத்தைக் கடந்து நிற்கின்றன. ஆனால் பைபிளில் அனைவரையும் கவர்வது அதன் கவித்துவமான நடை.

சந்திப்பு : ஸ்ரீநிவாஸன்

படங்கள் : ராஜன்

# BIS அங்கீகாரம் பெற்ற ஒரே நகை மாளிகை சேலத்தில் ANS மட்டுமே








ஸ்வர்ணபுரி ஷோரூம்



## ANS JEWELRY
## ANS ஜுவல்லரி

**Swarnapuri Showroom**
284 Omalur Main Road
Swarnapuri, Salem 636004

**ஸ்வர்ணபுரி ஷோரூம்**
284 ஓமலூர் மெயின் ரோடு
ஸ்வர்ணபுரி, சேலம் 636004

Tel (0427) 440703, 440704
Fax (0427) 442946

**Bazaar Showroom**
184 Bazaar Street
Salem 636001

**கடை வீதி ஷோரூம்**
184 கடை வீதி
சேலம் 636001

Tel (0427) 264221, 265180
Fax (0427) 267516




BUREAU OF INDIAN STANDARDS



**ஹால்மார்க்டு கோல்டு**
உங்கள் நம்பிக்கைக்குகந்த கோல்டு

World Gold Council

**PART OF YOUR CELEBRATIONS. SINCE 1928.**



• பேர்ல் (உள்படம் அவரின் மனைவி)

# கொடூரத்தின் உச்சம்!

"ஏண்டா இப்படிக் கழுத்தறுக்கறே?" என்ற சாதாரணமான வாக்கியத்தைச் சொல்லக் கூட கொஞ்ச காலத்துக்குத் தயக்கம் ஏற்படும். அந்த அளவுக்குக் கொடூரமான முறையில் அமெரிக்கப் பத்திரிகையாளர் டேனியல் பேர்ல் கொலை செய்யப்பட்டிருக்கிறார்.

பேர்ல் யாருடனோ பேசிக்கொண்டிருக்க, சடாரென்று அவரது தலைமுடி பின்புறமாக இழுக்கப்பட்டு அவரது கழுத்து கத்தியால் குத்தப்பட்டிருக்கிறது. ஒளிநாடாவில் மூன்று நிமிடங்களுக்குப் பதிவு செய்யப்பட்டிருக்கிறது இந்த ஜீவ மரண போராட்டம்.

இந்தக் கொலையில் பெரிதும் மூக்குடைபட்டிருப்பவர் முஷாரஃப்தான். சமீபத்தில் வாஷிங்டன் சென்றிருந்தபோது கூட, 'பேர்ல் நலமாகவே இருக்கிறார்' என்றும், 'அவர் சீக்கிரமே விடுவிக்கப்படுவார்' என்றும் உறுதியளித்தார். இத்தனைக்கும் அந்தச் சமயத்தில் கைது செய்யப்பட்டிருந்த ஓமர் ஷேக் என்ற தீவிரவாதி பேர்ல் கொல்லப்பட்டதாக நீதிமன்றத்திலேயே கூறியிருந்தான். ஆனால் 'அவை நீதிமன்ற உறுதிமொழியை எடுத்துக் கொள்வதற்கு முன்பே கூறியவை. அவற்றை எங்கள் சுருக்கெழுத்தாளர்கள் கூட பதிவு செய்யவில்லை' என்றெல்லாம் நொண்டிக்காரணம் கூறி ஒதுக்கினர் பாகிஸ்தான் அதிகாரிகள்.

இந்த விஷயத்தில் ஒருவிதத்தில் இந்தியாவும் சம்பந்தப்படுகிறது. ஓமர் ஷேக் நீதிமன்றத்தில் குறிப்பிட்ட 'ஹைதர்' என்ற நபர் உண்மையில் மன்சூர் ஹஸ்னைன் என்பவர்தானாம். இந்த மன்சூர், காத்மாண்டுவிலிருந்து கிளம்பிய இந்திய விமானக் கடத்தலில் தொடர்புள்ளவன்.

ஜெய்ஷ்-ஈ-முகமது என்ற தீவிரவாத கும்பல்தான் பேர்லை படுகொலை செய்திருக்கும் என்று சொல்லப்படுகிறது. கழுத்தைக் கிழித்து அதன் பிறகு தலையைக் கொய்வது என்பது அவர்களது பாணிதான். ஏற்கெனவே 1995ல் காஷ்மீரிலிருந்து கடத்திய நார்வே நாட்டு சுற்றுலாப் பயணி ஹான்ஸ் ஒஸ்ட்ரோவையும், 1999ல் கடத்தப்பட்ட இந்தியன் ஏர்லைன்ஸ் பயணி ரூபன் கத்யாலையும் இதுபோலத்தான் கொன்றிருக்கிறது அந்தத் தீவிரவாத அமைப்பு.

டேனியல் பேர்ல் எதற்காகக் கொல்லப்பட்டார்? 'வால் ஸ்ட்ரீட்' என்ற பத்திரிகையின் செய்திப் பிரிவைச் சேர்ந்த அவர், ரிச்சர்ட் ரெய்ட் என்ற வெடிகுண்டு ஸ்பெஷலிஸ்டுடன் பாகிஸ்தானுக்கும் ஆப்கானிஸ்தானுக்குமுள்ள தொடர்பு பற்றி ஆராய முயன்றார். தீவிரவாதிகளைப் பற்றி நன்கு அறிந்த ஒரு மதத்தலைவர் தகவல் அளிப்பதாக பேர்லிடம் கூற, ஆவலாகச் சென்ற போதுதான் கடத்தப்பட்டிருக்கிறார்.

அவர் மேற்கொண்ட பத்திரிகைத் தொழில் மட்டுமல்ல, அவரது பிறப்பும் வளர்ப்பும் கூட அவருக்கு எதிராகச் செயல்பட்டிருக்கிறது. அவர் ஓர் அமெரிக்க யூதராக இருந்ததுதான் அவரது முடிவுக்கு ஒரு முக்கியக் காரணம் என்று கூறுபவர்கள் இருக்கிறார்கள். "யூத இனத்தைச் சேர்ந்த ஒருவன் முஸ்லீம்களுக்கெதிராகச் செயல்படும் போது அவனைச் சும்மா விடுவோமா?" என்று நறநறத்திருக்கிறான் பகத் உசேன் – கடத்தல் தொடர்பான மூவரில் ஒருவன் என்று நம்பப்படுபவன்.

பயங்கரவாதம் புதிய பரிமாணங்களை எடுத்து வருவதைப் பார்க்கும்போது கண்டனம் செய்ய வேண்டுமென்கிற ஆக்ரோஷமும், அது அடங்க வேண்டுமே என்ற கவலையும் தோன்றுகிறது. மற்றபடி ஒரு பத்திரிகையாளர் மற்றும் மனிதர் என்கிற வகையில் பேர்லின் ஆத்மா சாந்தியடைய பிரார்த்திப்பதைத் தவிர நம்மால் வேறென்ன செய்ய முடியும்?

– ஜி.எஸ்.எஸ்.

அருட்பெருஞ்ஜோதி! அருட்பெருஞ்ஜோதி!!
தனிப்பெருங்கருணை! அருட்பெருஞ்ஜோதி!!

**சலுகை, சலுகை மேல் சலுகை, இலவச நூல்கள், தவணை முறை ஆகிய அனைத்தும் உண்டு.**

தமிழ்ப்புத்தக வரலாற்றில் வர்த்தமானன் பதிப்பகத்தின் மாபெரும் புரட்சி !

மாபெரும் முன்வெளியீட்டுத் திட்டம்

திருவருட்பிரகாச வள்ளலார்
இராமலிங்க அடிகளார்
அருளிய

# திருவருட்பா

மூலமும் உரையும்
4000 பக்கங்களுக்கு மேல் 8 தொகுதிகள்
**விலை ரூ.1250 சலுகை விலை ரூ.750**

| | |
|---|---|
| திருவருட்பா (8 தொகுதிகள்) .......................... | ரூ. 1250.00 |
| வடலூர் சுத்த சன்மார்க்க நிலையத் தலைவர், **அருட்செல்வர் டாக்டர். நா. மகாலிங்கம்** அவர்கள் வழங்கும் உதவித்தொகை ............ | ரூ. 300.00 |
| | ரூ. 950.00 |
| முன்வெளியீட்டுச் சலுகை .......................... | ரூ. 200.00 |
| **சலுகை விலை** | **ரூ. 750.00** |

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரும் சைவ சமயத்துக்கு ஆற்றிய அளப்பரும்தொண்டினை நாடு அறியும். அத்தகைய அருளாளர் வழியிலேவந்தவர், அருட்பிரகாச வள்ளலார். 'வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபினில் யான் ஒருவன் அன்றோ!' என வள்ளலார் உரைப்பது கருதத்தக்கது.

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி

என்பது அவர் அருளிய மந்திர மொழியாகும்.

வள்ளலார் இரக்கமே உருவானவர். வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வள்ளலார் உள்ளம் வாடியதும் இதனால் தான்! இந்த இரக்க உணர்வை இராமலிங்க அடிகளார் பல பாடல்களில் பாடியிருக்கிறார். எடுத்துக் காட்டாக இதோ ஒரு பாடலின் பகுதி :

'வாடிய பயிரைக் கண்டபோ தெல்லாம்
வாடினேன் ; பசியினால் இளைத்தே
வீடுதோ றிரந்தும் பசியறா தயர்ந்த
வெற்றரைக் கண்டுளம் பதைத்தேன்!'

வள்ளலார், குற்றமே இல்லாத சித்தராக - மெய்ஞ்ஞானியாக - தவயோகியாக - ஜீவன் முக்தராகத் திகழ்ந்தவர்.

**அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் அவர்களின்
80ஆம் ஆண்டு பிறந்த நாள் சிறப்பு வெளியீடு**

மனித வாழ்வில் ஒரு தவறும், ஒரு குறையும், ஒரு குற்றமும் நேரக் கூடாது என்பது வள்ளலார் உணர்த்தும் வாழ்வு நெறி.

அடிகள் அருட் கவிஞர் அதற்கு அவர் அருளிய திருஅருட்பா சான்று. அடிகள் அருள் ஞானி என்பதற்கு அவர் பெற்ற திருஅருட்பிரகாச வள்ளலார் என்ற பெயரே சான்று! வள்ளலார் பேசுவது இறைவன் பேசுவதாகவே ஆகிறது. நான் உரைக்கும் வார்த்தை எல்லாம் நாயகன் தன் வார்த்தை என்று கூறுவது திரு அருட்பாவுக்கு மிகப் பொருத்தமாகும்.



**நெப்போலியனின் படை வீரன் ஒவ்வொருவனும் தன்னுடைய தோளில் தொங்கும் பையில் சேனாதி பதிக்குரிய சின்னத்தை வைத் திருந்தான் என்று சொல்வதுண்டு. அதன் பொருள் என்னவென்றால், அவனுக்கும் ஒரு நாள் சேனாதிபதி பதவியை வகிக்கும் வாய்ப்புக் கிடைக்கும் என்பது தான் ! அது போல நாம் அனைவரும் மரணமிலாப் பெரு வாழ்வைப் பெறத் திருவருட்பாவினைக் கையில் ஏந்துவோமாக!**

இந்நூல்களைத் தபாலில் பெற : சலுகை விலையான ரூ. 750/- இல் ரூ.350/- (M.O. / D.D.) மட்டும் அனுப்பிப் பதிவு செய்து கொள்க! (DD யினை Varthamanan Pathippagam என்ற பெயரில் சென்னையில் மாற்றத்தக்கதாக அனுப்புக).

**நூல்கள் அனுப்புவது எப்போது?** பணம் வந்த வரிசைப்படி இம்மாதம் 21ஆம் (21.03.2002) தேதியிலிருந்து நூல்கள் (இலவச நூல்கள் உட்பட) V.P.P. பார்சல் மூலம் இரண்டு கட்டுகளாக அனுப்பப்படும். மீதித் தொகை ரூ.400/- தபால் செலவு மற்றும் கட்டுச் செலவு (2 கட்டுகளுக்கும்) ரூ.100/- சேர்த்து ரூ.500/- செலுத்திப் பெற்றுக் கொள்க.

**நேரில் பணம் செலுத்த விரும்புவோர் கவனிக்க :** தவணை முறையிலோ (அ) ஒரே தவணையிலோ எமது அலுவலகத்தில் பணம் செலுத்தி முறையான ரசீது பெறலாம். ரசீதினில் குறிப்பிடும் தேதியில் நூல்களை நேரிலேயே பெற்றுக் கொள்ளலாம். நேரம் : காலை 10.00 மணி முதல் மாலை 8.00 மணி வரை உணவு இடைவேளையின்றி. ஞாயிறு வார விடுமுறை. ❀ M.O. / D.D. மூலம் பணம் அனுப்புவர்களுக்குத் தபால் மூலம் தான் நூல்கள் அனுப்பப்படும். நேரில் தரப்படமாட்டாது. ❀ Cheque ஏற்கப்படமாட்டாது.

இலவச நூல்கள் (ரூ.150 மதிப்புடையவை)
1. ஜோதி வழியில் வள்ளலார்
2. திருவருட்பா திருவமுதத் திரட்டு
இந்தச் சலுகைகள் (இலவச நூல்கள் உட்பட) அனைத்தும் 20.03.2002க்குள் பணம் அனுப்பிப் பதிவு செய்வோர்க்கு மட்டுமே உண்டு.

பணம் அனுப்ப வேண்டிய முகவரி :

**VARTHAMANAN PATHIPPAGAM**
15, Sarojini Street,
T. Nagar, Chennai - 17.
(Near Usman Road Gitanjali Hotel)








2002 மார்ச் 3
விஷு மாசி 19
மலர் : 60
இதழ் : 31

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




# பெருகும் கொள்ளைகள்; தூங்கும் காவல்துறை!

ஐ.ஏ.எஸ். அதிகாரி, அரசு ஊழியர், மத்தியதர குடியிருப்புவாசி, பெட்டிக்கடை உரிமையாளர் என்று பாகுபாடின்றி அனைவரும் கொள்ளைக் கும்பல்களால் தாக்கப்பட்டு, பொருளிழந்து நிற்கின்றனர். இவர்கள் எல்லோருமே சென்னைவாசிகள்.

அண்ணா நகரில் ஐ.ஏ.எஸ். அதிகாரி வீட்டில் நடந்த கொள்ளையும் சரி, அசோக்நகர் குடியிருப்பில் கதவுகளைக் கடப்பாறைகளால் பெயர்த்து நிகழ்த்திய திருட்டுகளும் சரி, திட்டமிட்டு அரங்கேற்றியவை என்பதைச் செய்திகள் தெளிவாக உணர்த்துகின்றன.

மத்திய அரசு ஊழியர் ஏகாம்பரம் கொலை வழக்கில் பிடிபட்ட குற்றவாளிகளோ, தாங்கள் எவ்வாறு கொலையைத் திட்டமிட்டு நிகழ்த்தினர் என்பதைச் செயல்முறை விளக்கமாகவே நிகழ்த்திக் காட்டியுள்ளனர்!

இந்த 'லெக்சர் டெமான்ஸ்ட்ரேஷனு'க்கு ஏற்பாடு செய்து தடபுடல்படுத்தியிருப்பது காவல் துறைதான்! அதைச் செய்தியாக்கி, புகைப்படத்துடன் நாளிதழ்களில் வெளியிடும் அநாகரிக வைபவமும் நடைபெற்றிருக்கிறது!

காவல்துறை துப்பு துலக்குவதற்கோ வழக்கு ஜோடிப்பதற்கோ இத்தகைய செயல்முறை விளக்கம் அவசியம் என்று கருதுமானால், அது மிகவும் பரிதாபமான நிலைக்குத் தாழ்ந்திருப்ப




தாகவே நாம் முடிவுக்கு வரவேண்டியிருக்கிறது.

இரவு நேரத்தில் காவல் புரியும் போலீஸ் ஊழியர்களுக்குப் பிரத்யேக மோட்டார் சைக்கிள்கள், காவல் துறையை நவீனப்படுத்த பல கோடிகள் ஒதுக்கீடு, என்று அவ்வப்போது செய்திகள் வெளியாகின்றனவேயொழிய, காவல் பணி மேம்படவும் இல்லை; நகரின் பாதுகாப்பு பலப்படவும் இல்லை. குற்றங்களைக் கண்டுபிடிப்பதற்கான அணுகுமுறை முன்னேறவுமில்லை.

மாறாக, மின் ஊழியர் என்று கூறிக் கொண்டு குடியிருப்புப் பகுதியில் புகுந்து பட்டப்பகலில் திருடுவது போன்ற நூதன கொள்ளைகள் பெருகிவருகின்றன.

அ.தி.மு.க. ஆட்சி அமைத்தது முதலாகவே, தமிழகத்தில் நிர்வாகம் உரிய வேகத்தில், உரிய முக்கியத்துவத்துடன் நடைபெறவில்லை. சட்டச் சிக்கல்களில் அகப்பட்டுக் கொண்ட ஜெயலலிதா, தமது பதவியைத் தக்கவைத்துக் கொள்ளும் முயற்சிகளிலேயே முழுமூச்சுடன் ஈடுபட்டிருந்தார். அவர் முதல்வர் பதவியிலிருந்து விலகிய பிறகோ நிர்வாகம் ஸ்தம்பித்தே போய்விட்டது!

நிதி நிர்வாகம், அரசு நிர்வாகம் மட்டுமின்றி மாநிலத்தின் பாதுகாப்பும் பாதிக்கப்பட்டிருப்பதற்கு இதுவே காரணம்.

முதல்வராக அரசின் தலைமைப் பொறுப்பில் இருப்பவர் பெயரளவில்தான் அதிகாரமுடையவர்; உண்மையில் ஜெயலலிதாவின் சம்மதமோ ஆணையோ இன்றி அவர் எதுவும் செய்ய முடியாது என்கிற நிலை. இதை உணர்ந்த அரசு அமைப்புகளும் ஊழியர்களும் பணி ஆர்வத்தையும் உத்வேகத்தையும் இழந்து விட்டனர். அரசு இயந்திரம் தொய்ந்து போய் செயலற்றதாகி விட்டது.

இதன் விளைவுதான் காவல் துறையின் தளர்ச்சியும் அதன் பயனான கொலை கொள்ளை அதிகரிப்பும்.

வலுவான மெஜாரிடி பெற்ற ஓர் ஆட்சியில் இத்தகைய பின்னடைவுகள் நிகழக் கூடாது. ஆனால், பெரும்பான்மை பெற்றும் நல்லாட்சி வழங்க இயலாத அரசாக அ.தி.மு.க. அரசு இருந்து




வருகிறது.

இனி இந்த நிலைமை தொடரவிட வேண்டாம். இவ்விதழ் வெளியாகிற போது ஆண்டிப்பட்டி இடைத் தேர்தலில் ஜெயலலிதா வெற்றி பெற்றிருப்பார்; விரைவில் முதல்வர் பதவியும் ஏற்றுச் செயல்படுவார் என்று எதிர்பார்க்கலாம்.

உள்துறையைத் தமது பொறுப்பில் வைத்துக் கொண்டு, முதல்வர் தமிழக காவல் துறையைச் செப்பனிட்டு முடுக்கி விட்டு, சட்டம் - ஒழுங்கை மேம்படுத்தட்டும்.

வீரப்பனைப் பிடிப்பதில் மட்டும் கவனம் செலுத்தினால் போதாது...

• போக்குவரத்து விதி மீறல்களால் விளையும் விபத்துக்கள் குறைய வேண்டும்.

• மலிவு விலை மது அறிமுகமான பிறகும் குடிசைத் தொழிலாக மாறித் தழைக்கும் கள்ளச் சாராய உற்பத்திக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட வேண்டும்.

• சில்லறை திருட்டுகள், பகல் கொள்ளைகள், பணத்துக்காக உயிர்ப் பறிப்பு போன்ற பயங்கரங்கள் கட்டுப்படுத்தப்பட வேண்டும்.

• இவையெல்லாம் நடக்க வேண்டுமானால் காவல் துறையிலிருந்து லஞ்ச - ஊழல் ஒழிக்கப்பட வேண்டும். அத்துறை தூய்மைபெற வேண்டுமாயின் அரசு பொறுப்பில் இருப்போர் நல்லுதாரணம் காட்டுவோராக விளங்க வேண்டும்.

கடந்த கால ஜெயலலிதா ஆட்சிக்கு அந்த நற்பெயர் இல்லை.

இம்முறையேனும் ஜெயலலிதா சரித்திரத்தை மாற்றி எழுதட்டும். பாதுகாப்பான, வளமான, முன்னுதாரணமான மாநிலமாக தமிழகத்தை உயர்த்தட்டும்.

மக்களின் மதிப்பும் ஆதரவும் பெற்ற முதல்வரால் முடியாதது இல்லை. நேர்மையைக் கடைபிடித்து, திறமையுள்ள அதிகாரிகளை இனம் கண்டு, அவர்கள் சொல்வதற்குச் செவிமடுத்து முடிவெடுத்தால் போதும்.

# தேன்கூடு

## தூக்கிப் போடும் கம்ப்யூட்டர்!



அட்டையில் செய்யப்பட்ட இந்த செல்ஃபோன் மூலம் ஒரு மணி நேரத்துக்குப் பேச முடியும். அதன் பின் தூக்கிப் போட வேண்டியதுதான்! பத்து டாலர் விலையில் அமெரிக்காவில், இதனை வடிவமைத்து விற்பனைக்குக் கொண்டு வந்துள்ள இந்த அம்மணியின் (படத்திலிருப்பவர்) அடுத்த தயாரிப்பு, அட்டையிலான டிஸ்போஸபிள் கம்ப்யூட்டராம்!

**— பாரீஸ் பார்த்தசாரதி.**

## பழைமையும் புதுமையும்

மலேசியாவின் 'மலாக்கா' மாநிலம் டூரிஸ்ட்டுகளைக் கவருவதில் சாமர்த்தியமாகச் செயல்படுகிறது. பெரிய கட்டடங்கள் சூப்பர் மார்க்கெட்டுகள் போன்ற வளர்ச்சி ஒருபுறம். எனினும் சுற்றுலாப் பயணிகளைக் கவர்வதில் பழைமையைப் பயன்படுத்துவதிலும் வல்லவர்கள். படத்தைப் பாருங்கள். ரிக்ஷா வண்டி என்ன அருமையான வேலைப்பாடுகள் செய்யப்பட்டு உள்ளது! இதில் அமர்ந்து செல்வதில் சுற்றுலா பயணிகளுக்குப் பெரும் மோகம். இரட்டை மாட்டு வண்டி எனினும் என்ன அலங்காரம்!

**— வல்லிமகன்,**
**மலேசியா.**

## முயற்சி திருவினையாக்கும்

வெனிசுலா நாட்டின் வறண்ட ஆற்றுப்படுகையில் பலர் வைரக்கற்களைத் தேடி எடுக்க முயற்சி செய்தனர். அதில் மூன்று பேர் கூட்டாக எல்லா கூழாங்கற்களையும் எடுத்துப் பார்த்து, வைரக்கற்கள் ஒன்றும் கிடைக்காததால், மனமுடைந்து போய் விட்டனர். மற்றவர்களுக்கெல்லாம் வைரக் கற்கள் கிடைத்திருந்தன.



ஒரு நாள் அம்மூவரில் ஒருவரான ராஃபேல் சொலானோ, 'தாம் இனி அவர்களுடன் சேர்ந்து வைரக் கற்களைத் தேடும் முயற்சியை மேற்கொள்ளப் போவதில்லை' எனச் சொல்லி விட்டார்.

''இப்படிச் செய்து கொண்டிருப்பதில் பயனில்லை. பாருங்கள், என் கையில் வைத்திருக்கும் இக் கூழாங்கல் நான் ஆற்றுப்படுகையிலிருந்து



• மலேசியா

எடுத்த 9,99,999வது கூழாங்கல். ஒரு வைரக்கல்கூட இதுவரை கிடைக்கவில்லை.''

''சரி, இன்னொரு கல்லை எடுத்துப் பாருங்கள், பத்து லட்சம் கற்களை எடுத்துப் பார்த்த மாதிரி இருக்கட்டும்'' என்றார் அவரது நண்பர் வாட்டத்துடன்.

சொலானோ குனிந்து, கோழி முட்டையளவுக்குப் பத்து லட்சமாவது கல்லை எடுத்து, அதன் மீதுள்ள மண் படலத்தை அகற்றினார்...

ஆகா, அது ஒரு வைரக்கல்!

அந்தப்பகுதியில் கண்டெடுத்த வைரக்கற்களிலேயே அது பெரியது! வைர வியாபாரிகள் அதற்கு 'விடுதலைச் சிற்பி' எனப் பெயரிட்டனர். அது சொலானோவுக்கு 2,00,000 டாலரைப் பெற்றுத் தந்தது!

— ஆதித்யன்



## ராங் நம்பர்!

யோவ், சாவு கிராக்கி... இது அந்த ரூட்ல போகாதுய்யா, கீழே எறங்கு.. என்று தவறான பேருந்தில் ஏறியவரைத் திட்டி இறக்கிவிடும் பஸ் கண்டக்டர்களை அறிவோம்.

ஆனால், இது மாதிரி தவறான விமானத்தில் ஒருவர் ஏறி விட்டால்?

மும்பையிலிருந்து 'பரோடா' செல்லும் விமானத்தில் ஒருவர் அமர்ந்திருந்தார். ப்ளேன் புறப்பட சில வினாடிகளே இருந்த



போது, ஏர் ஹோஸ்டஸ், "பரோடா செல்லும் பயணிகளை வரவேற்கிறோம்" என்றபோதுதான் பெங்களூர் செல்ல வேண்டிய அந்தப் பயணிக்குப் பகீர் என்றிருந்து. உடனே, ஏர் ஹோஸ்டஸிடம் கூறி, அவசர அவசரமாக ப்ளேனிலிருந்து இறங்கினார். பிறகுதான் தெரிய வந்தது. பயணிகளுக்கு 'கௌண்ட்டரி'ல் போர்டிங் அட்டை வழங்கியபோது தவறான அட்டை அந்தப் பயணிக்கு வழங்கப்பட்டது என்பது.

— அகமதாபாத் பாண்டு

## குதிரை சவாரியா?

உலக நாடுகள் சிலவற்றில் சில நூற்றாண்டுகளுக்குமுன் இயற்றப்பட்ட சில விநோத சட்டங்கள் இன்னும் அமுலில் உள்ளன.

- வாஷிங்டன் நகரத்திலுள்ள பகுதி ஒன்றில், அழகில்லா குதிரையில் சவாரி செய்வது குற்றம்!
- டென்வரில் உங்கள் வீட்டு 'வாக்குவம் க்ளீன'ரை அண்டை அயலாருக்கு இரவல் கொடுக்கக் கூடாது!
- ஜார்ஜியா மாகாணத்திலுள்ள 'ஜோன்ஸ்பரோ' என்ற ஊரில் 'oh, boy' என்று கூறுவது தண்டனைக்குரியது!
- இங்கிலாந்தில் பெண்கள் பொது இடத்தில் 'சாக்லேட்' சாப்பிடுவதை யாரேனும் தடுத்தால் அவர்கள் மீது சட்டம் பாயும்!
- பிரான்ஸ் நாட்டின் சில பகுதிகளில் ரயில் பயணத்தின் போது முத்தமிட்டுக் கொள்வது சட்டப்படி குற்றம்!

தொகுப்பு : ஆர். மார்கண்டன்

# KALKI SHOPPING PAGE







# கடவுளின் அவதாரம்?

• பாஸ்கர்

"எனக்குக் கடவுள் நம்பிக்கை உண்டு. அந்த நம்பிக்கை மீதான கேள்விகளும் தொடர்ந்துகிட்டே தான் இருக்கு. சடங்கு, சம்பிரதாயங் கள், அவற்றுக்குச் சக்தி உண்டா? இது மாதிரியான எந்தக் கேள்விக்கும் இதுவரை என்கிட்டே பதிலில்லை. இருந்தாலும் நம்ம சமூக அமைப்பு நம்பிக்கைகளால் ஆனது. சட்டத் துக்குப் பயப்படாதவன் கூட கட வுளுக்குப் பயப்படறான். இதுதான் தொடருக்கு அடித்தளம்" என்கிறார் சி.ஜே. பாஸ்கர். சித்தியின் வெற்றியை விஞ்ச வேண்டிய கட்டாயத்திலிருக் கும் 'அண்ணாமலை' இயக்குனர்.

"இந்த நேரத்துல திருக்கழுகுன்றம் கோயில் குளம் பற்றி ஒரு மேட்டர் படிச்சேன். அந்தக் குளத்துல குறிப் பிட்ட ஒரு நாள் ஒரு சங்கு தோன்றும்னு சொல்றாங்க. இது என் மனசுக்குள்ளே உழன்றது. இது உண்மையா? பொய்யா? சங்கு அப்படித் தோன்றினால் என்னாகும்? இதை யோசிச்சேன். இதை அடிப்படையா வச்சி இரண்டு குடும்பங்களுக்குள்ள நடக்கிற பிரச்னைதான் கதை!

***அப்படீன்னா பக்தி சப்ஜெக்டா?***

"இல்லை. கோயில், கடவுள் பற்றிய நம்பிக்கைங்கறது நமக்கான அடையாளங்கள் மட்டுமல்ல, அது ஒரு சொத்து. 'சாமியே வந்து குழந்தையா பிறந்திருக்கு'னு கிராமங்கள்ல சொல்வாங்க. அப்படியான ஒரு கேரக்டர்தான் அண்ணாமலை. நான்கு தலைமுறையா பெண் குழந்தை இல்லாத குடும்பத்துல வேண்டு



தலுக்குப் பிறகு பெண் குழந்தை பிறக்குது. கடவுளின் அவதாரமா நம்பப்படுகிற அந்தக் கேரக்டர்தான் ராதிகா. இளவயது நீனா பெரியவங்களானதும் ராதிகாவா வருவாங்க. அவங்களுக்குச் சில சக்திகள் இருப்பதாக நம்பறாங்க. கடைசி வரைக்கும் அது உண்மையா? பொய்யா? என்ற கேள்வி தொடர்ந்துட்டேதான் இருக்கும்.

"ராதிகா இரண்டு கேரக்டர் பண்றாங்க. ஒண்ணு பாட்டி கேரக்டர். வெளியே இருந்து கதை சொல்ற கேரக்டர். திடீர்னு பசங்களைக் கூப்பிட்டுக் கதை சொல்லும். குறிப்பிட்ட ஒரு நாள் நிஜக்கதைச் சொல்லப் போறேன்னு ஆரம்பிக்கும்போது, பாட்டி சொல்ற காட்சிகள் சுவரோவியங்களா இருக்கும். இந்த ஓவியங்களுக்கும் பாட்டிக்கும் என்ன உறவுங்கறது பின்னால தெரியும். இந்தக் கேரக்டர் பரபரப்பாப் பேசப்படும். பாருங்களேன்.

"அப்புறம் சூதாடி சித்தன்ங்கற ஒரு கேரக்டர். கதை நடக்கற எல்லா சம்பவங்கள்லயும் இவன் இருப்பான். தனக்குத்தானே கட்டம் கட்டிச் சோழி பரப்பி ஆடற கேரக்டர். விழற சோழிகளுக்கு ஏற்ப அவனா பலன் சொல்லிட்டு இருப்பான். அவன் சொல்ற பலன் கதையில திருப்பங்களைக் கொண்டு வரும்.

"அடுத்து சங்கரி ஆச்சி. ஜாலியா இருக்கிற பார்ட்டி தான் இந்தப் பாட்டி! எல்லா பிரச்னைகளையும் சுலபமா கையாளுகிற கேரக்டர். இந்தப் பாட்டியோட ஸ்டைல் எல்லோரையும் கவர்ந்திழுக்கும். சித்தியில் வாசு விக்ரம் பேசப்பட்ட மாதிரி இந்த கேரக்டரும் பேசப்படும்னு எதிர்பார்க்கிறேன்."

***'சித்தி'யில் நடித்த முகங்களே இதிலும்...?***

முழுசா அப்படிச் சொல்ல முடியாது. ராதிகா இருக்காங்க. சிவகுமார் பண்றார். ஆனால் கணவன் மனைவியா சித்தியில வந்தவங்க, இதுல அண்ணன் தங்கையா வர்றாங்க. நீனா வளர்ந்து ராதிகாவா தோன்றுனதுக்குப் பிறகு சிவகுமாரும் ராதிகாவும் ஒருத்தரை ஒருத்தர் பாத்துக்கறதே இல்லை. அது ஏன்ங்கறது சஸ்பென்ஸ். தொடர் முடியும்போது இப்படியொரு அண்ணன் நமக்கு இல்லையேன்னு ஒவ்வொரு பெண்ணும் ஏங்கறது உறுதி."

***திராவிட இயக்கப் பாரம்பரியத்துல வந்தவங்க ராதிகா. அவங்களை கடவுளின் அவதாரமா..***

"இல்லை. 'சித்தி'யில வர்ற சாரதா (ராதிகாதான்) பாத்திரத்தை எடுத்திங்கன்னா அதுல அவங்க குடும்பத்துல உள்ளவங்க எல்லாரும் தெய்வ நம்பிக்கையோட இருப்பாங்க. ஆனா சடங்கு சம்பிரதாயங்கள்ல ஈடுபடாமல் வேறு மாதிரியான ஒரு கேரக்டரைத்தான் ராதிகா மேடம் பண்ணியிருப்பாங்க. அண்ணாமலையில எப்படீன்னா, தொடர்ல வர்ற கேரக்டர்களும் பார்வையாளர்களும் அவங்களைக் கடவுளின் அவதாரமா நம்பறாங்க. எல்லோரும் வச்சிருக்கிற அந்த நம்பிக்கை உண்மையா? பொய்யா?ங்கறதுலதான் கதை இருக்கு. இருந்தாலும் இதுல அண்ணாமலைங்கற ஒரு கேரக்டரைத்தான் நான் பார்க்கிறேன். தனிப்பட்ட விஷயத்துக்கும் இதுக்கும் முடிச்சுப் போட வேண்டாங்கறதுதான் என் கருத்து."

— ஏக்ஜி

# Surabi International (P) Ltd

**UNMATCHED HOSPITALITY IN VELLORE**

## ☆☆☆ Deluxe Hotel, Opening shortly

- 45 Rooms Centralized A/C
- Two Conference Hall (30 to 300) pax
- Multi Cuisine Restaurants
  Red Indian (Non.Veg)
  South Indian (Veg)
- Spacious Car Parking
- Bar - Permit room
- Family Suites & Travel Desk
- Satelite Television
- 24 hrs running Hot & Cold Water
- All major Credit cards Accepted




## HOTEL SURABI INTERNATIONAL

No.33, Officers Line, Vellore - 632 001
Tel: 233576 Fax 232376

# 100 % திருப்தி

**நியாயமான விலையில் அற்புதமான வீட்டு மனைகள்**

(CMDA அப்ரூவ்டு மனைகள்)



## சக்தி கார்டன்ஸ்

(பூந்தமல்லி பை-பாஸ் NH-4)
(சவிதா பல் மருத்துவக் கல்லூரி சமீபம்)

**சென்னை - 600 056**

• கிண்டி, கோடம்பாக்கம், கோயம்பேட்டிலிருந்தும் வசதியான 100அடி ரோடு • சென்னையின் எல்லை பகுதிகளிலிருந்தும் பஸ் வசதி • உத்தேசிக்கப்பட்டுள்ள பூந்தமல்லி ரயில் நிலையம் ஒரு கூடுதல் வசதி • சுவையான குடிநீருடன் அருகில் வீடுகளுடன் தேசிய நெடுஞ்சாலையை ஒட்டி அமைந்துள்ள இந்த மனையை உடனே வாங்குவீர் • உடனே வீடு கட்டவோ அல்லது முதலீடு செய்வதற்கோ சரியான தேர்வு • சுத்தமான பத்திரம் / நம்பகமான நிர்வாகம்.

★ சுந்தரம் ஹோம் பைனான்ஸ் லிட் மூலமாக நிதி உதவியும் உண்டு.
**Free site visit. With pick-up facility from home/office.**

Ph : 4357721/31 Fax.4353183 . Cell : 98400-44018 E-mail: blbestmail@vsnl.net http://business.vsnl.com/blbestates




## BLB Estates (P) Ltd.

S-3, "Ramana Flats" 27, Rathna Nagar, Off Anna Salai,
(Behind Apollo Cancer Hospital), Teynampet, Chennai - 18.

நன் மதிப்பில் முதலீடு

# பூமியைத் தாக்குமா புதிர்க் கற்கள்?

ஜனவரி முதல் வாரத்தில் ஒரு விண்வெளிச் செய்தி வெளியானது. பூமியில் விழுந்தால் ஒரு தேசத்தையே அழித்து விடக் கூடிய ஆற்றலோடு விண்கல் ஒன்று பூமியை வெகு அருகில் கடந்து போனது என்பதுதான் அச்செய்தி.

இந்த விண்வெளிப் பாறைக்கு '2001 ஒய்பி - 5' என்று பெயரிடப்பட்டது. 220 மீட்டர் - 490 மீட்டர் குறுக்களவுடையதான இந்தப் பாறை, 'மயிரிழையில்' பூமியைத் தாக்காமல் கடந்து போனதாய்ச் சொன்னார்கள்.

விண்வெளி மொழியில் இந்த விஸ்கர் (மயிரிழை) என்பது மிகக் குறைவான இடைவெளி. ஆனால், இந்தப் பாறை பூமிக்கு 'வெகு அருகில்' வந்தபோது ஆறு லட்சம் கி.மீ தொலைவிலிருந்தது; பூமி - சந்திரன் தொலைவைப் போல் ஒன்றரை மடங்குத் தொலைவு.



இப்போதெல்லாம் இந்தப் 'பாறை'களின் வருகையை முன்னாலேயே கண்டறிந்துவிட முடிகிறது. கலிபோர்னியாவிலுள்ள பாலோமர் மலையின் மீது பிரத்தியேகமாக ஒரு தொலைநோக்கியை நிறுவிக் கண் காணித்துக் கொண்டிருக்கிறார்கள். இதற்கு NEAT (Near Earth Asteroid Tracking) என்று பெயர். பூமிக்கு அருகே வரும் விண்கற்களைக் கண்காணிக்கும் தொலைநோக்கி என்று பொருள். இந்தப் பாறையின் வருகையையும் போன ஆண்டு டிசம்பர் தொடக்கத்திலேயே கவனித்து விட்டார்கள்.

பல லட்சம், கோடிகளுள் ஒரு பாறை இப்படி பூமியைப் 'பார்க்க' வரலாம். அதையும் வழியிலேயே உடைத்து விடக்கூடிய அளவு மனித குலத்தின் அறிவியல் ஆற்றல் முன்னேறிவிட்டது.

'ஆனால் விண்கல் பூமியைத் தாக்க வருகிறது!' போன்ற அச்சுறுத்தும் செய்திகள் அடிபடவே செய்கின்றன. இப்போது ஒரு சுவாரஸ்யமான விஷயமாக நினைத்து அவற்றைப் படிக்கலாம்!

பத்து ஆண்டுகளுக்கு முன்னால் நம்முடைய நாடாளுமன்றக் கூட்டத் தொடர் ஒன்றிலேயே மாநிலங்களவையில் இந்த மாதிரி பூமியின் மீது மோதப் போகிற வால்நட்சத்திரத்தைப் பற்றி கேள்வி கேட்கப்பட்டது. பி.கே. ஹரிபிரசாத் என்ற உறுப்பினர் கேட்ட கேள்விக்கு அப்போதைய அறிவியல் தொழில் நுட்பத் துறை அமைச்சராக இருந்த பி.ஆர். குமாரமங்கலம் பதில் சொன்னார். "இப்போதைக்கு அப்படி ஒரு வால் நட்சத்திரம் வந்து மோதும் நிகழ்வு உறுதியாகவில்லை" என்பது அந்தப் பதில்!

2116, ஆகஸ்ட் 16ஆம் தேதி வாக்கில் ஒரு வால் நட்சத்திரம் பூமியின்மீது வந்து மோதப் போகிறது என்றும் அதன் விளைவாக, உலகிலுள்ள ஜீவன்கள் அனைத்தும் அழிந்துவிடும் என்றும் ஓர் ஆஸ்திரேலிய வானியல் அறிஞர் வெளியிட்ட செய்தியின் அடிப்படையில் எழுந்த கேள்வி அது.

1968 ஆம் ஆண்டு ஜூன் மாதம் பூமிக்கு அறுபது லட்சம் கிலோமீட்டர் தொலைவில் 'இகாரஸ்' என்னும் விண்கல் பாறை வந்த போதும் 'இப்படித் தான் உலகம் அழியப் போகிறது என்று வதந்தி கிளம்பியது.

ஆனால் அந்த ஜூன் 15 ஆம் தேதி, வானியலார் கண்களால், அது வும் தொலை நோக்கி வழியே, இகாரஸ் பூமியைக் கடந்து போவதைக் காண முடிந்தது!

1937 ஆம் ஆண்டில் 'ஹெர்மஸ்' என்னும் விண் பாறை, பூமியிலிருந்து எட்டு லட்சம் கி.மீ தொலைவில் கடந்து போனபோதும், நியூயார்க் நகரமே அழியப் போகிறது என்று சொன்னார்கள். இப்படியெல்லாம் அழிவு நேரக் கூடிய வாய்ப்பே இல்லை!

— சுப்ர. பாலன்

# உரசலை

ஆராவமுது வாத்தியாரின் பெண் அமிர்த சரஸ்வதி, நேற்று முன்தினம், அதாவது வெள்ளிக் கிழமையிலிருந்து காணாமல் போய் விட்டாள் என்கிற சங்கதியை வேதபுரீஸ்வரனிடம் வந்து மணிகண்டன் சொன்னான். சைக்கிளில் வந்து சொன்னான். சொல்லும்போது அவனுக்கு இரைத்தது. நியாயமாகச் சைக்கிளுக்குத்தான் இரைக்க வேண்டும். அதுதானே தரையில் உருண்டு கொண்டே வந்தது?

மணிகண்டன் இதைச் சொன்னபோது அவன் குரலில் அல்லது மனசில், இனம் விளங்காத சந்தோஷ ரேகை, வேதபுரீஸ்வரனுக்குத் தென்பட்டது. சரஸ் என்கிற அமிர்தசரஸ்வதி காணாமல் போனதற்கு, மணிகண்டன் சந்தோஷப்பட முகாந்திரம் இல்லை. முகாந்திரம் இல்லை என்று சொல்லி விடவும் முடியாது. சரஸ் என்று நாங்கள் எங்களுக்குள் அழைத்துக் கொள்ளும் அமிர்தா, ரொம்பவும் லட்சணமான பெண்ணாகவும், புத்திசாலியாகவும் அறியப்பட்டவள். வேதபுரீஸ்வரனுக்குத் தெரிந்து ஏழெட்டு பேர் அவளை நினைத்து மருகியது, யதார்த்தம்.

'உனக்கு எப்படித் தெரியும். எப்போ தெரியும்' என்று வேதம், மணியைக் கேட்டான்.

''இதையெல்லாம், அச்சுப் போட்டு யாராகிலும் விநியோகிப் பார்களா, என்ன? மனிதர்களே, துண்டறிக்கைகளாக



மாறி, ஒருத்தருக்கொருத்தர் விஷயத்தைப் பரப்பிக் கொள்ள மாட்டார்களா? வெளுத்துச் சாயம் போய், நிறம் இழந்து துவள்கிற வாழ்க்கையில், சுவாரஸ்யப்படுத்திக் கொள்ள, வேறு என்னதான் மாற்று இருக்கு?" என்பது மணியின் கருத்தாக இருந்தது.

மணியின் சைக்கிளையே வாங்கிக் கொண்டு, வேதம் வாத்தியார் வீட்டுக்குப் புறப்பட்டான். வாத்தியாரின் ஓடு போட்ட காரை வீடு, கமலியாற்றங்கரையில் கிழக்கு பார்த்து இருந்தது. போகும்போது, சைக்கிளில் பிரேக் இல்லாதது தெரிந்தது. காய்கறிக் கூடையுடன் வந்த கிழவி, மயிரிழையில் தப்பித்தாள்.

சரஸ்வதி ஏன் வீட்டை விட்டுப் போக வேண்டும்? ஒன்று அவளுக்கு வீட்டை விட்டுப் போக வேண்டும் என்று தோன்றியிருக்கும். போனாள். ஆனால், இது அப்படியொன்றும் இலகுவான, கடைக்குப் போய் வெற்றிலை பாக்கு வாங்கி வருவது போலச் சின்ன விஷயம் இல்லை. அவனுக்கு முன்னால், ஒரு பெரிய கேள்வி. அவள் யாருடன் போனாள்? அவ்வாறு ஒருத்தனுடன் அவள் போகிறாள் என்றால், அவன் யார்? அமிர்தாவை அவன் எங்கு சந்தித்தான்? எப்படி அவர்கள் உறவு வளர்ந்தது? அப்படி அவள், யாரோ ஒருத்தனுடன் ஓடித்தான் போக வேண்டி இருந்தால், அந்த ஒருத்தன் நானாக ஏன் இல்லாமல் போயிற்று?

போகும் வழியில் கிருஷ்ணன் கடையில் இறங்கினான். சைக்கிளைத் தெரு ஓரப் புளிய மரத்தில் சாத்திவிட்டு, கிருஷ்ணனிடம் காபிக்குச் சொன்னான். பெஞ்சில் உட்கார்ந்து தெருவைப் பார்த்தான். விடிந்து விட்டிருந்தது. குளித்துத் திரும்பிக் கொண்டிருந்தனர் இரு பெண்கள். ஈரப் புடைவை உடம்பில் அழுந்தி, ரஸ்தா மண் ஒட்டிய வெள்ளைப் பாதங்களிலிருந்து 'சபக் சபக்' என்று சப்தம் வர, அவர்கள் நடந்து சென்றார்கள்.

அமிர்தம் கூடக் கமலியாற்றங்கரையில் குளிப்பாள். பெரும்பாலும், இருள் புலரும் முன்பு. மனித நடமாட்டம் தொடங்கும் முன்பு. ஆறு, விழித்து எழும் முன்பு. படித்துறையை ஒட்டிய புதர் மறைவாக, சப்தம் எழுப்பாமல், ஏதோ ரகசியச் சடங்கு போலக் குளியலை அவள் நிகழ்த்துவாள். புதருக்கு அந்தண்டை மறைவிலிருந்து, மூச்சு விடும் சப்தமும் குறைந்து, மறைந்து கொண்டு வேதம் பார்த்திருக்கிறான். அந்த இருட்டிலும், ஓர் அங்குல உடம்பும் தெரியாமல், அவள் ஸ்நானத்தை நிறைவேற்றினாள் என்பதுதான் விசேஷம். மஞ்சள் ஸ்நானப் பவுடரின் சுகந்த மணம் காற்றில் பரவியதல்லால், வேறு எதுவும் அவன் புலன் அறியவில்லை.

"என்ன வேதம், இத்தனை காலமே, ஆற்றங்கரைப் பக்கம்?" என்றான் வழுக்கைத் தலைக் கிருஷ்ணன்.

"வாத்தியார் வீட்டுக்கு?"

"ஆமா, வாத்தியார் நேத்து ராத்திரி, முந்தாநாள் ராத்திரி, மெயின் ரோட்டுக்கும் ஆற்றங்கரைக்கும் நடந்துகிட்டிருந்தாரே, என்ன சங்கதி?"

"தெரியலையே..."

காப்பி, ருசிக்கவில்லை. எழுந்து சைக்கிளி



டம் வந்தான். ஒரு நாய்; சாவதானமாகச் சைக்கிளின் மேல் உபாதையைச் சொரிந்து முடித்து, திருப்தியுடன் இவனை நட்பு தோன்றப் பார்த்தது. குனிந்து ஒரு கல்லை எடுத்து, அதைப் பார்த்து அடித்தான். அது, கத்திக் கொண்டு ஒரு காலை நொண்டியபடி ஓடியது. வேதம், மிகவும் திருப்தி அடைந்தான். நொண்டியபடியும், அழுது கொண்டும் ஓடும் அந்த நாய், அமிர்தத்தை அழைத்துக் கொண்டு ஓடிப் போயிருக்கும் அந்த முகம் தெரியாத அவனாக இவனுக்குத் தோன்றியது.

வாத்தியார், குளித்து, நெற்றி நிறையத் திருநீர் துலங்க, துவைத்த அரைக்கை பனியன் வேஷ்டியுடன் சாய்வு நாற்காலியில் இருந்தபடி படித்துக் கொண்டிருந்தார். கம்பி போட்ட வாசலில் வெளி தெரிந்தது. வானம்; நீல மூட்டைகள்.

'அய்யா' என்று வேதம் அவர் முதுகுக்குப் பின் நின்று கொண்டு சொன்னான்.

படித்த புத்தகத்தை விரல் வைத்து மூடிய ஆராவமுது வாத்தியார், "முன்னால வாடா, வேதம்" என்றார். வேதம், அவர் முன் வந்து நின்றான்.

"என்ன சங்கதி?"

"ஐயா... நம்ம அமிர்தா..."

"உம்" என்றுவிட்டு, வாசல் வழி வானத்தைப் பார்த்தார். வானம், சூரிய ரச்மியால் நிறைந்திருந்தது.

"இப்ப வீட்டுல இல்லை. தகவல் தெரியலை."

"போலீஸ்ல சொல்லிட்டீங்களா?"

"என்னத்துக்குச் சொல்லணும்? அவ குழந்தை இல்லை. வயசு இருபத்தாறு ஆவுது. அவளை யாரும் கடத்தலை. எங்கோ போயிருக்கா. வர நினைச்சா வருவாள். நாமே இதைப் பெரிசுபடுத்த வேணாமே."

அவர் இடப்பக்கச் சுவரில், நடுவீட்டில்

---

"நாளைக்கு பீச்சுக்கு வரமாட்டியா ரமேஷ்?"

"அது எப்படி உனக்குத் தெரியும்?"

"நீதான் சுண்டல்காரன்கிட்ட நாளைக்கு காசு தரேன்னு சொன்னியே!"

— சீர்காழி வி. ரேவதி

---

மாட்டியிருந்த புகைப்படச் சட்டத்தைப் பார்த்தார். படத்தில், இருபது வயசு அமிர்தாவும், அவள் பட்டாளத்துக் கணவனும் கல்யாணக் கருக்கழியாமல் காட்சி அளித்தார்கள். கல்யாணத்துக்கு மறுநாள், மொட்டை மாடியில் வைத்து எடுக்கப்பட்ட படம் அது. கணவன் சிவராமன், கோட் அணிந்து இருந்தான். அமிர்தா, சாதாரணமாக, நகை அணியாமல், காட்டன் சேலையில் இருந்தாள். புகைப்படத்தில் அவள் சிரித்தாளா? அப்படித் தெரியவில்லை. 'இலங்கையைத் தாண்டுடா' என்றதும், குச்சியைத் தாண்டும் பழக்கிய குரங்கைப் பார்த்தால், எவருக்கும் வருகிற இளம் சிரிப்பு அவள் முகத்தில். கல்யாணத்தின் போது எடுக்கப்படும் பெண்களின் ஃபோட்டோக்களில், பெரும்பாலும் மிரட்சி தெரிவதாக வாத்தியார் நினைப்பதுண்டு. அமிர்தாவுக்கு மிரட்சி இல்லை.

"காப்பி போட்டுக் கொண்டு வாயேன். எனக்கும் உனக்கும்" என்றார் வாத்தியார்.

அமிர்தா இருக்கும் போது, இந்த வேலைகளை அவள் செய்தாள். சமயங்களில், வாத்தியாரே செய்வார். அவர் ஒரு சிறந்த சமையல் கலைஞர். மாமி, அமிர்தாவுக்குக் கல்யாணம் ஆன கையோடு, சிவலோக பதவி வகிக்கக் கிளம்பிப் போய் விட்டாள். பட்டாளத்துக் கணவன் ஒரு மாதம் வீட்டில் இருந்தான்.

வேதம், இரண்டு டம்ளர்களில் காப்பி போட்டுக் கொண்டு வந்தான். ஒன்றை அவரிடம் கொடுத்து விட்டு, மற்ற டம்ளரை, வாத்தியார் கண் பார்வை படாத இடத்தில் நின்று கொண்டு சாப்பிட்டான்.

"ஐயா... பட்டாளத்தார்கிட்டேயிருந்து ஏதாவது தகவல்?"

வாத்தியார் தலையசைத்தார். டம்ளரைத் தரையில் வைத்தார்.

"இல்லை. ஆறு வருஷமா வராத தகவல். இப்போ மட்டும் என்ன?"

வந்து அழைத்துப் போகிறேன் என்று விட்டுச் சென்றான் சிவராமன். வரவில்லை. பல கடிதங்களை அப்பாவும் பெண்ணும் எழுதினார்கள். பதில் இல்லை. அவன் கொடுத்த முகவரிக்கு வாத்தியாரே போனார். சிவராமன், படையில் இருந்தும், பணியில் இருந்துமே நீக்கப்பட்டதாகத் தெரிந்தது. யாரோ, வடநாட்டுப் பெண்ணுடன் குடும்பம் நடத்திக் கொண்டு, வடக்கே வாழ்வதாகச் சொன்னார்கள். வாத்தியார் வீடு திரும்பும்போது, அமிர்தா, எதையோ தொலைத்துவிட்டுத் தேடிக் கொண்டிருப்பதாகத் தெரிந்தாள். கட்டில், மேசைகளின் கீழே பெருக்கி வாரிக் கொண்டிருந்தாள். சங்கடத்துடன், மாப்பிள்ளையைப் பார்க்க முடியாத விஷயத்தை முடிந்த மட்டும் சொன்னார்.

"இந்தத் திருகாணி பெரிய தொல்லைப்பா. அடிக்கடி கீழே விழுந்து உயிரை வாங்குது" என்றபடி அவள் திருகாணியைத் தேடிக் கொண்டிருந்தாள். அப்புறம் கிடைத்தது. 'அப்பாடா' என்று மகிழ்ச்சியடைந்தாள், அவள். அப்பா, மௌனமாகத் திரும்பினார்...

வாத்தியார் வேதத்திடம், "வேலை இருந்தால் புறப்படேன்" என்று விடைகொடுத்தார்.

"இன்னிக்கு ஞாயிற்றுக்கிழமைதானே. வீட்டுக்குப் போய்க் குளிச்சுட்டு, வரும் போது உங்களுக்குக் காய்கறி வாங்கியாந்து டறேன். மதியம் சமையலுக்கு..."

"கத்திரிப் பிஞ்சும், குண்டு பாவக்காவும் வாங்கிக்கோ... மேசை டிராயரில் சில்லறை எடுத்துக்கோ"

பணத்தை எடுத்துக் கொண்டு கிளம்பினான் வேதம். சக்கரங்கள் சீராக உருண்டு கொண்டிருந்தன. யாராக இருக்கும் அந்த ஆள்? வாத்தியாரைத் தேடி, மணியக்கார மகாலிங்கையர் வருவார். எழுபது வயசு. வேறு கிழங்கள் எப்போவாவது வருவதுண்டு. கிழங்கள் மதுரைவீரக் காரியங்களைச் செய்யாது. அப்படியும் சொல்வதற்கில்லை. கிழங்கள் பொல்லாததுகள். ஆனால், மகாலிங்கையர், பாவம். தான் ஆண் என்பதையே மறந்து போனவர் அவர். அப்புறம், வாத்தியாரிடம் படித்த மைக்கேல் அடிக்கடி, பழம், பூ, இனிப்புகளுடன் வருவான். ஏதோ ஒரு பெரிய கம்பெனியில் இருந்தான். ஆவ்.. தண்ணீர் இறைக்கும் மிஷின் சம்பந்தமான கம்பெனி. காரில் வருவான். சிவப்பு நிறக் கார். எப்போதும் 'டை' கட்டி வருவான். வேதத்துக்கு என்ன காரணத்தாலோ மிஷின், கார், அதிலும் சிவப்பு நிறம், டை முதலான அணிகலன்கள் யாவற்றின் மேலும் வெறுப்பு அரும்பி இருந்தது. அவனாகவும் இருக்கலாம்? ஏன் இருக்கக் கூடாது? அவ்வப்போது கவிதைகள் எழுதுகிற மணிகண்டன் சொன்னான்.

இலேசாகப் புருவத்தை உயர்த்தியபடி, சாக்ரடீஸ் போன்ற பாவத்துடன் அவன் சொன்னான்.

'பெண்கள், மற்றும் கொடிகள், பக்கத்தில் இருக்கிற பொருள்களைத் தழுவிக் கொள்வார்கள்.'

தினம், பேப்பர் போடும் பக்கிரி, பால் ஊற்றும் ஆனந்தக் கோனார், காய்கறிக்கார கோவிந்தசாமி நாயக்கர், வண்டிக்கார வேலு, நிலம் சம்பந்தமாக வருகிற குத்தகை கோபால் நாயுடு, அடிக்கடி 'டீச்சர், டீச்சர்' என்றபடி வீட்டுக்கு வருகிற மாணவன் வடிவேலு, இவர்களில் யார்? மறந்தாச்சே. தினம் தபால் கொண்டு வரும் போஸ்ட்மேன் வல்சராஜ், மாட்டுத் தரகர், உர விற்பனை உத்தராபதி இவர்களில் யார்? யாரை அந்தப் பூங்கொடி தழுவிக் கொண்டாள்?

இன்றைக்குக் காலையில் ஜன்னல் ஓரம் வந்து நின்றபோது, அந்தச் சிட்டுக்களைப் பார்த்தேன். செம்பருத்திச் செடியில் அமர்ந்திருந்த சிட்டு. சின்னஞ்சிறு பிராணி. பார்த்தவுடன் கருணை சுரக்க வைக்கும் கைப்பிடி அளவு உடம்பு. துவரைக் கண்கள். ஒட்டு மாங்காய் மூக்கு. நான், சிட்டாகவே மாறிப் போனேன். சிட்டே! உன் இறக்கைகளை எனக்குத் தருவாயா? எனக்குப் பறக்க வேணும் என்கிற ஆசை. தருவாயா? எனக்கு, அந்தக் கமலியாற்றங்கரையைத் தாண்டி, பனியால் மூடின மலைகளைத் தாண்டிப் பறக்க வேண்டும். அங்கே, வெள்ளியை உருக்கின மாதிரி, ஒரு ஓடை இருக்கிறதாமே. அங்கு, சிவப்பும் மஞ்சளுமாய்ப் பூத்துச் சொரியும் மரங்களைக் கொண்ட ஒரு தோப்பே இருக்கிறதாமே? மலை உச்சியில், ஒரு கோயில் இருக்கிறதாமே. இங்கிருந்து எவ்வளவு தூரம் அது? அங்கே ஒரு பெண் சிலை, ஒரு கையைத் தூக்கியபடி, ஏதோ நியாயம் கேட்கும் உருவில் இருக்கிறதாமே. அவளைப் பார்த்து நான் பேச வேண்டும்.

தேவை, உன் சிறகுகள் மாத்திரமே. இந்த அறை எனக்கு அலுத்துப் போய் விட்டது. வரலாற்றுக் காலத்துக்கு முந்தைய, இந்தக் கட்டிலில், எத்தனைக் காலம்தான் நான் படுப்பது? ஒரே சப்தம். கட்டில் கால்கள் பொருத்தப்பட்ட இடத்தில், என்னவோ நெகிழ்ச்சி ஏற்பட்டிருக்கிறது. அதை ஒழுங்கு பண்ண வேண்டும். இந்தக் கட்டில், என் நினைவுகளின் பழைய அடுக்குகளைக் கலைத்துப் போடுகிறது. இதில்தான், நான் கிழிபட்டேன். திரைச்சீலையின் குறுக்காக ஒரு கத்தி மேல் இருந்து கீழ் வரை கிழித்தது போல!

கசந்த நினைவுகளைத் தருகிற இந்தக் கட்டில்களே இல்லாத ஒரு மலை உச்சிக்கு நான் பறந்து போக வேண்டும். இந்த அறை முயக்க நாற்றத்தால், நாற்றம் கொண்டுள்ளது. தீ நாற்றம். ஆண்டாள் அனுபவித்த அந்தக் கற்பூர நாற்றம் அல்ல, சிட்டே. இது காமச்சிதை. நெருப்பில் எரியும் உடம்புகளின் நாற்றம், நான் கூட ஆண்டாள் அக்காவைப் போலவே கனவு கண்டு இருக்கிறேன், பறவையே! அந்தக் கூடல் தினம், அந்த ஸ்தான பாக்கியம், அந்த சம்போக உற்சவம் பற்றி நான் கனவு கண்டிருக்கிறேன். என் பூரித்தெழுந்த ஸ்தனங்களை, ஒரு குழந்தை ஸ்பரிசம் பட்சிக்க வேணும். எங்கிருந்தோ,

> "என்னதான் ஆன்மிக இதழாக இருந்தாலும் இத்தனை பெரிய ஐயனார் அருவாளை இலவச இணைப்பா கொடுத்தா எப்படி?"
>
> — எஸ். மோகன்

எங்கு என்று தெரியாத இடத்திலிருந்து கிருஷ்ணகானம் தவழ வேண்டும். எங்கள் வீட்டு முற்றத்தில் ஓடுவது கமலியாறா? இல்லை. அது யமுனை. நான் அதில்தான் படிகிறேன். கட்டை விரல் முதலில். அப்புறம், என் பாதங்கள். அப்புறம் முட்டிகள். தொடைகள், இடை, வயிறு, மார்பகம், கழுத்து, இதழ்கள், கண்கள், நெற்றி, என் கூந்தல்... ஒவ்வொன்றாக யமுனை நதியில் படிந்து படிந்து நான் நீராட வேணும்... ஆனால்... ஆனால்... என் பரிபாலனம் அப்படி இல்லை.

சின்ன வயதில், அப்பாவின் விரலைப் பிடித்துக் கொண்டு கமலியாற்றுக்கு நான் போவதுண்டு.

"அப்பா... ஆத்துக்கு அந்தண்டை என்ன இருக்கு?"

"மலை. குதிரை மலை."

"உலகம் எங்கே முடியறது?"

"கடலில்."

"கடலில் ராட்சஸ இருப்பானாமே?"

"ஏழு கடல் தாண்டி, ஏழாவது கடலில், ஒரு குகையில், ஒரு ராட்சஸன் இருக்கிறான். அவன் உயிர், ஒரு வண்டில் இருக்கும். அந்த வண்டை, ஆயிரம் தலை நாகம் காத்துக் கொண்டிருக்கும்."

என் கனவுகளில் ராட்சஸன் வந்தான். ஓர் இரவு, என்னுடன் என் பக்கத்தில் அவன் படுத்துக் கொண்டான். அவன் மேனியில் இருந்து சிதை வாசனை. எரியும் சிதை. பொசியும் உடலின் வாசனை. என்னை என் விருப்பத்துக்கு எதிராக அவன் ஆலிங்கனம் செய்தான். என் ஆடைகளை விலக்கினான். என் சதையை, என் எலும்பை அவன் பட்சித்தான். அந்த ராட்சஸன், அநேகமாக மாதம் இரண்டு மூன்று தடவை வந்தான். என்னை வேண்டாத காகிதம் மாதிரிச் சுக்கல், சுக்கலாகக் கிழிப்பான்.

எனக்குச் சாம்பிராணி பிடிக்கும். எனக்கு ரோஜா வாசனை வீசும் பத்தி பிடிக்கும். மல்லிகை மருக்கொழுந்தும் கூட. எனக்குச் சந்தனம் பிடிக்கும் எனக்கு ஜவ்வாது பிடிக்கும். விபூதி வாசனை பிடிக்கும். என் புடைவைகளின் பச்சைக் கற்பூர வாசனை பிடிக்கும். வாசனைப் பாக்கு பிடிக்கும். தாம்பூலம் பிடிக்கும். சந்தன சோப்புப் பிடிக்கும். உலகத்தின் எல்லா நல்ல வாசனைகளும் பிடிக்கும்.

என் அறையில் இருந்து இப்போதெல்லாம் தீ நாற்றம். சகிக்க முடியவில்லை. அந்த ராட்சஸனின் வாசனை. கல்யாணத்தன்று சிவராமனுடன் நான் சயனிக்க நேர்ந்தது. அரை விழிப்பில், நான் சிவராமனைப் பார்த்தேன். சிவராமன் அல்ல. ராட்சஸன், அதே சிதை. அதே வாசனை.

நான் பறந்து போக வேண்டும், சிட்டே. எனக்கு உன் சிறகுகளைக் கடனாகத் தருவாயா...?

சிட்டு, என் பேச்சைக் கேட்க நேரம் இல்லாமல் பறந்து போய் விட்டது.

நான், அந்த மலை உச்சிக்கு என்று போகப் போகிறேன்?

(தொடரும்)

# ஜோதியில் மறைந்த



"பூடம் தெரியாமல் சாமியாடுவது" என்ற சொலவடை ஒன்று உண்டு. இந்த வேலையை பாரதிய ஜனதா கட்சியின் தேசிய தலைவர் ஜனா கிருஷ்ணமூர்த்தி சமீபத்தில் அருமையாகச் செய்தார். ஆடிய இடம் - புதுடெல்லியில் நடைபெற்ற திரு நாவுக்கரசின் எம்.ஜி.ஆர். அண்ணா தி.மு.க. - பாரதிய ஜனதா கட்சியுடன் ஜோதியில் ஐக்கியமான நிகழ்ச்சி. பிரதமரும் கலந்து கொண்ட அந்த நிகழ்ச்சியின்போது பேசிய ஜனா, சப்தமில்லாமல் ஒரு மூட்டையை அவிழ்த்துவிட்டார். ஜோதியில் கலக்கும் பரவசத்தில் இருந்த பக்த கோடிகள் அனைவருக்கும் அவர் அவிழ்த்துவிட்ட வெடியின் பராக்கிரமம் புரிந்திருக்க நியாயமில்லை. அப்படி ஒரு பரவசம்! அப்படி அவர் என்ன தான் சொன்னார்?

அறிஞர் அண்ணாவும் பிரதமர் வாஜ்பாயும் ஒன்றாக ராஜ்யசபையில் உறுப்பினர்களாக இருந்த நேரம். ஒரு விவாதத்தின் போது அண்ணாவுக்கு முன்பாக வாஜ்பாய் இந்தியில் மிகவும் நீண்ட உரை ஒன்றை ஆற்றினார். வாஜ்பாய் பேசி முடித்ததும் அண்ணாவின் முறை. அண்ணா மிகவும் பரவசப்பட்டு "வாஜ்பாய் பேசும் இந்த இந்தி ஆட்சி மொழியாக்கப்பட்டால் நாங்கள் அதைக் கண்டிப்பாக எதிர்க்க மாட்டோம்" என்று உறுதியளித்தார் என்று கூற, இணைப்பு விழா அரங்கில் இருந்த அத்தனை பேரின் முகங்களிலும் மகாபரவசம்! கரவொலி அடங்க நெடுநேரம் ஆயிற்று. அண்ணாவின் இந்தப் பேச்சுக்கு ராஜ்ய சபையில் எழுத்து வடிவிலான ஆதாரம் இருக்கிறது என்றும் ஜனா சொன்னார்.

தமது முறை வந்தபோது பிரதமரும் அதை ஆமோதித்தார். இந்தியை இணைப்பு மொழியாக்க வேண்டியதன் அவசரத் தேவையை ஆங்கிலத்தில் விளக்கி, ஜனா கிருஷ்ணமூர்த்தியின் பேச்சை வெகுவாக ஆமோதித்தார். அண்ணா அப்படிப் பேசியது தமக்கும் நினைவில் உள்ளது என்று கூறினார்.

ஒரு கூட்டணியின் நிர்ப்பந்தத்திலும் ஆட்சியில் பங்கு வகிக்கும் தாட்சண்யத்திலும் எதையெல்லாம் கண்டு கொள்ளாமல் இருக்க வேண்டியிருக்கிறது பாருங்கள். இணைப்பு வைபவம் நடந்த மறு நாளே இந்தப் பேச்சை அநேக தினசரிகள் வெளியிட்டு விட்டன. ஆனாலும் இப்பேச்சு எந்த விதத்திலும் சர்ச்சையையும் சிறிதளவுகூட கிளப்ப

# சர்ச்சை!



வில்லை என்பதுதான் ஆச்சரியம்.

அ.தி.மு.கவை விடுங்கள். அவர்கள் திராவிட வேர்களை அறுத்துக்கொண்டு நீண்ட வருஷங்கள் ஆகிவிட்டன. ஆண்டிப்பட்டி மூலம் தலைவியை முதல்வராக்க முயன்று கொண்டிருக்கும் இவ்வேளையில் இந்தி என்ன, ஸ்வாஹிலியை ஆட்சி மொழியாகக் கொண்டு வந்தாலும் அவர்கள் கவலைப்படப் போவதில்லை. அண்ணா என்ன சொன்னார் என்ற கவலையும் அவர்களுக்கு இல்லை.

இந்த நேரத்தில், பா.ஜ.க.வுடன் தி.மு.க. கூட்டு இல்லாமல் அந்த அணியில் அ.தி.மு.க. மட்டும் இருந்திருந்தால், தி.மு.க. தலைவர்கள் ஜனாவின் இந்தப் பேச்சுக்கு எப்படியெல்லாம் சாமி ஆடியிருப்பார்கள். தேசிய ஜனநாயக கூட்டணியில் இல்லாது போயிருந்தால் இந்த சர்ச்சையை வைத்து வைகோவும் கிழித்துத் தோரணம் கட்டி இருக்க மாட்டாரா? ஜனாவின் பேச்சுக்கான ஆதாரம்



## வடக்கு வாசல்

எங்காவது இருக்கிறதா என்று யாரும் தேடிப் பார்த்த மாதிரி தெரியவில்லை. அண்ணா அப்படிப் பேசியிருப்பாரா என்ற கேள்வியையும் யாரும் எழுப்பவில்லை. ஆக, ஜனா அவிழ்த்து விட்ட வெடி இன்றைய அரசியல் மற்றும் சந்தர்ப்பவாத நிர்ப்பந்தங்களில் எந்தவித எதிர்க் கேள்விகளும் இல்லாமல் அப்படியே அமுங்கிப் போய்விட்டது.

### படத்தைத் திருடிவிட்டாய்!

**ச**மீப காலங்களாக, டீ.வி. சேனல்கள் சினிமாத்துறை மற்றும் சினிமா அரங்கு உரிமையாளர்களைப் பாடாய்ப்படுத்தி வருகிறது என்ற கூச்சல் தமிழகத்தில் எங்கும் பரவலாகக் கேட்கிறது. இப்போது இந்தப் பிரச்னை டெல்லி வரை சப்தமில்லாமல் வந்து போயிருக்கிறது. டெல்லியில் வழக்கமாக சில தமிழ் அமைப்புகள் சென்னையிலிருந்து படப்பெட்டியை வாங்கி தலைநகரின் தமிழ் பேசும் நல்லுலகத்துக்குச் சினிமா சேவை செய்து வருகின்றன. டெல்லி தமிழ் இளைஞர் பண்பாட்டுக் கழகம், தென்னிந்திய கலாசார மற்றும் பண்பாட்டு மையம் மற்றும் டெல்லி தமிழ்த் திரைப்படக் கழகம் போன்ற அமைப்புகள் கூட்டாகச் சேர்ந்து படச் சுருளை சென்னையிலிருந்து தருவித்து ஏதாவது ஒரு திரையரங்கை வாடகைக்கு எடுத்து மாதம் ஒரு முறையோ அல்லது இரு முறைகளோ திரைப்படங்களை வெளியிடுவது வழக்கம். இந்த மாதத்துக்கான திரைப் படமாக 'மனதைத் திருடிவிட்டாய்' படத்தைத் திரையிடுவதற்காக ஏகப்பட்ட விளம்பரங்களும் செய்து அனுமதிச் சீட்டுகளை அங்கங்கு விற்கவும் ஆரம்பித்தனர். இதற்கிடையே, சன் டீ.வி. முந்திக்கொண்டு, சென்ற சனிக்கிழமையன்று அவசரமாக இத் திரைப்படத்தை ஒளி பரப்பிவிட்டது. டெல்லியில் ஞாயிற்றுக்கிழமை திரையிடுவதாக விளம்பரங்கள். சன் டீ.வி.யில் இப்படம் வந்துவிட்டதால் யாரும் இப்படத்துக்கு வரமாட்டார்கள் என்று படச் சுருளை மீண்டும் பவ்யமாகச் சுருட்டி சென்னைக்கே திருப்பி அனுப்பிவிட்டனர் அமைப்பாளர்கள்! அடப் பாவமே!

- டெல்லியிலிருந்து
ராகவன் தம்பி.



காஞ்சி காமகோடி பீடாதிபதி அருள்மிகு ஸ்ரீலஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் அருள்மிகு ஸ்ரீலஸ்ரீ சங்கர விஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் ஆசியோடும் நல்லாசியுடன்

## ஏனாத்தூர், காஞ்சிபுரத்தில்

# தனி வீடுகள்

# ரூ.1,80,000/- முதல்



**புதிய காஞ்சி ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் நகர்**

Govt. (DTCP No.24/2000) Approved

- முதியோர்களுக்கு முன்னுரிமை
- சிறந்த கட்டிட பொறியாளர்களால் கட்டப்பட்டு வருகிறது

**வீட்டு மனைகளும் விற்பனைக்கு உள்ளது.**

## ஜன கல்யாண்

88, (Old.232) R.K. மட் ரோடு, (மைலாப்பூர் டாங்க் எதிரில்) சென்னை-600 004.
Ph: 4618793, 8251183

பாப, 2A, காமாட்சி அம்பாள் தெற்கு மாடவீதி, காஞ்சிபுரம்,
Ph: 954112-220093

**வீடுகள், மனைகள் வாங்க கடன் வசதி செய்து தரப்படும்.**

---

**வீட்டில் இருந்தபடியே**

# தபால் மூலம்

**படிக்கலாம்.**

கல்வித் தகுதி
**S.S.L.C**
**PASS / FAIL**
ஆண்கள், பெண்கள்

வரும் நவம்பரில் தமிழ்நாடு அரசுத் தொழில் நுட்பத் (ஓவியம்) தேர்வு (FREE HAND DRAWING HIGHER GRADE) எழுதி நீங்களும் **ஓவிய ஆசிரியர்** ஆகலாம்.

**விவரப்புத்தகம் இலவசம்**

**நேர்முகப் பயிற்சியும் உண்டு.**

# ஓவிய ஆசிரியர் பயிற்சி



## AJANTHA SCHOOL OF ARTS




(GOVT. REGD. NO : 1075/89/MS/RD)
M.M.6, MUTHU NAGAR,
POONAMALLEE, CHENNAI - 56
PHONE : 6490363.

# புடவை கட்டிவிட்டேன்!



'பூவெல்லாம் உன் வாசம்' படத்தில் ஒரே ஒரு பாடலுக்கு டான்ஸ் ஆடிய யுக்தாமுகி இந்தியில் இரண்டு படங்களில் நடித்து விட்டார். மூன்றாவது படமும் ரெடி!

சென்னை 'கன்ட்ரி கிளப்' அமைப்பின் கிளையைத் திறக்க சமீபத்தில் சென்னை வந்த யுக்தா, "மாடலிங்கைவிட நடிப்பு கஷ்டம்" என்று ஆரம்பித்தார்.

"மாடலிங்கில், வசனம் பேசுகிற வேலையெல்லாம் கிடையாதே! ஆனாலும் நடிப்பு பிடித்திருக்கிறது. காமிரா முன்னால் நின்றதும் நினைத்தவுடன் சிரிக்கவும் அழவும் முடிகிறது!" என்று சிரித்தவரிடம், "மிஸ் வோர்ல்டு' ஆனதற்குப் பிறகு, உங்கள் வாழ்க்கை எந்த அளவுக்கு மாறியிருக்கிறது?" என்றோம்.

"ரொம்பவே மாறியிருக்கிறது. மிஸ் வோர்ல்டு போட்டியில் கலந்து கொண்ட பல நாட்டுப் பெண்களும், நான் எடுத்துச் சென்ற நெற்றிப் பொட்டு, வளையல், மூக்குத்தி ஆகியவற்றை இந்திய சிநேகிதியின் அன்புப் பரிசாக எடுத்துக் கொண்டு போனார்கள். ஒருநாள் நடு இரவில் மிஸ். லெபனான் அழகி என் அறைக்கு வந்து, "எனக்கு உங்கள் ஊர் புடைவையைக் கட்டிவிடு" என்றார். நானும் கட்டி விட்டேன். கண்ணாடி முன்னால் நின்று, தன்னைத்தானே பார்த்துக் கொண்டு, "இப்படியே நான் இந்தியாவுக்குப் போனால் என்ன நடக்கும்?" என்று கேட்க, "ஓர் அழகான இந்திய இளைஞன் உன்னைத் துரத்தித் துரத்திக் காதலித்து உடனடியாகக் கல்யாணம் பண்ணிக் கொள்வான் என்றேன். அவள் முகத்தில் ஒரே வெட்கம்..." என்று சிரித்தார்.

"நிறைய படிப்பேன்; ஓவியம் தீட்டுவேன். பாடுவேன். மிஸ். வோர்ல்டு பட்டம் வென்றதைத் தொடர்ந்து, சமூக சேவை அமைப்புகளுக்கு உதவி வருகிறேன். ஆதரவற்ற குழந்தைகளைத் தத்து கொடுக்கும் அமைப்புகள், மனித அவய தானம் போன்றவற்றுக்கு உதவ ஆர்வமாக உள்ளேன்."

"அப்படியென்றால், சுஷ்மிதாசென் போல, ஒரு குழந்தையைத் தத்து எடுத்து வளர்க்கலாமே!"

"அப்படி ஓர் ஆசை இருக்கிறது. இன்னும் சில வருடங்களில் அப்படி வளர்க்கத்தான் போகிறேன்."

"கல்யாணம்?"

"இப்போதுதானே இருபத்து மூன்று வயது! அதற்குள் கல்யாணமா? இன்னும் கொஞ்சம் வருடங்கள் போகட்டுமே."

"வருங்கால கணவரைத் தேர்ந்தெடுத்தாச்சா?"

"தேடிக் கொண்டிருக்கிறேன். ரொம்ப புத்திசாலியான, சாதனையாளரான, சென்சிடிவான சுபாவம் கொண்ட, நிறைய நகைச்சுவை உணர்வுள்ளவரைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன்."

— பாரதி



வாரியார்



மால்கம் ஆதிசேஷய்யா...



டாக்டர் ராதாகிருஷ்ணன்



# அறிஞர்கள் நகரம்!

**வே**லூர் ஜலகண்டேஸ்வரர் கோவில் ஸ்தலபுராணத்தை 'கஜ்ஜல்' என்ற பதினெட்டாம் நூற்றாண்டு ஓலைச் சுவடியிலிருந்து பிரதி எடுத்தவர் திருமுருக கிருபானந்த வாரியார். வேலூர் அருகேயுள்ள காங்கேயநல்லூரில் பிறந்து வளர்ந்தவர்.

**வி**.எல்.எத்திராஜ், சென்னை உயர் நீதி மன்றத்தில் புகழ்பெற்ற அரக வழக்கறிஞராக விளங்கியவர். ராஜாஜியின் உற்ற நண்ப ரான இவர், ரூபாய் பத்து லட்சம் நன்கொடை அளித்து சென்னை எழும்பூரில் எத்திராஜ் மக ளிர் கல்லூரி அமை யக் காரணமாக இருந்த கல் விக் கொடை யாளர். இவரது நூற்றாண்டு விழா 1989ல் நடந்தபோது அதில் கலந்து கொண்ட கலைஞர், 'எத்திராஜ் சாலை' என்று கல்லூரி யிருக்கும் சாலையின் பெயரை மாற்றினார். அந்தக் காலத்தில் ரோல்ஸ்ராய்ஸ், பெனட்லி, பிளைமௌத் போன்ற விலை யுயர்ந்த கார்களைப் பயன்படுத் திய பிரபலம் இவர்!

- வி.ஜே. மாதவன்

**தா**ய் நாட்டுக்காக ஐக் கிய நாடுகள் சபையில் வாதா டிய ஏ.ராமசாமி முதலியார் சிறந்த பேச்சாளர். மைசூர் திவானாகவும் விளங்கிய தோடு சுதந்திரத்துக்கு பின் கனரகத் தொழிற்சாலை தொடங்கிய பெருமைக்குரி யவர். இவரது சகோதரர் லட்சமண சாமி முதலியார் சென்னையில் புகழ் பெற்ற மருத்துவராக விளங்கியதோடு, சென்னைப் பல் கலைக் கழகத்துக்கு இருபத்து நான்கு ஆண்டு தொடர்ந்து துணைவேந்தராக இருந்த பெரு மைக்குரியவர். ராமசாமி, லட்சுமணசாமி முதலி யார்கள் இரட்டையர்கள்.

**சி**.பி.ராமசாமி ஐயர், உயர்நீதிமன் றத்தில் புகழ்பெற்ற வழக்குரைஞர். அவருக்கு நீதிபதி பதவி கொடுத்தபோது "பல வக்கீல் களின் உளறலை இத்தனை நாளும் அவர்கள் பக்கத்தில் அமர்ந்து கேட்டேன். இனி ஐந் தடி உயரத்தில் அமர்ந்து கேட்கப் போகி றேன்." என்று வேடிக்கையாகக் குறிப் பிட்டாராம்.

உயர்நீதிமன்ற தலைமை நீதிபதி யாக இருந்த பதஞ்சலி சாஸ்திரியும் வேலூர்க்காரர்தான். மறைந்த முன் னாள் குடியரசுத் தலைவர் டாக்டர் ராதா கிருஷ்ணன் கல்வி பயின்றது வேலூர் ஊரீஸ் கல்லூரியில். கல்வியாளர் மால்கம் ஆதி சேஷையா பிறந்தது, படித்தது எல்லாம் வேலூரில்தான்.

- ஜிஜி. சரவணன்,
டாக்டர் எஸ்குலசேகரன்

# காதல் சேவகம்

சாலிகிராமம் பஸ் ஸ்டாண்டில்தான் அவனைப் பார்த்தேன். "ஹலோ மாமா! என்னைத் தெரியறதா?" என்றான்.

கொஞ்சம் யோசித்துவிட்டு, "சரோஜா மாமி பிள்ளைதானே நீ? எப்படி இருக்கே கிரி! வெங்கடேசா நகர்லே நாங்க இருந்தப்போ பக்கத்து வீட்டிலே சின்னப் பையனா பார்த்தது உன்னை."

"கரெக்ட் மாமா. சின்ன திருத்தம். என் பேர் கிரி இல்லை ஹரி."

"ஸாரிப்பா... மறந்துட்டேன்... ரொம்ப வருஷமாச்சு பாரு."

"அது சரி. கிரியை நினைவிருக்கா?"

சுத்தமாக நினைவில்லை. குத்துமதிப்பாகக் கேட்டு வைத்தேன். "யாரு? உயரமா உன் கூட கிரிக்கெட் விளையாட வருவானே... அந்தப் பையனா?"

ஹரி சிரித்தான்.

"கிரி பையன் இல்லை மாமா. பெண்.. யதுகிரி. என் மாமா பெண். சின்ன வயசிலே லீவுக்கு லீவு பாம்பேலருந்து வந்து ஒரு மாசம் தங்கிட்டுப் போவாளே.... ரெண்டு பேரும் உங்காத்திலேயே வந்து ஊஞ்சல் ஆடுவோமே..."

"அதோ பாருங்கோ..."

அவன் கைகாட்டிய திசையில் கையில் பெட்டியும் தோளில் ஹேண்ட் பேக்குமாக டைட் பேண்ட், டீ-ஷர்ட்டில் மாடர்னாக நின்றாள் யதுகிரி. என்னைப் பார்த்து இலேசாக ஒரு புன்னகை.

"ஊரிலேருந்து வராளா?"

"ஆமாம். அப்பா அம்மாவுக்குத் தெரியாம ஓடி வந்துட்டா..."

"என்னடா சொல்றே?"

"ஆமா மாமா... அவ அப்பா... எங்க மாமா... அவளுக்குப் பெரிய இடத்திலே மாப்பிள்ளைப் பார்த்துட்டாராம். அவளுக்குப் பிடிக்கலை... என்னை நம்பி இங்கே வந்துட்டா... என்னைக் கைவிட்டுடாதே ஹரின்னு கண்ணாலே ஜலம் விட்டு அழறா? மனசு கேட்கலை... உடனடியா கல்யாணத்துக்கு ஏற்பாடு பண்ணிட்டேன்.

"அது சரிடா... அதுவரை அவளை எங்கே வைப்பே? உன் அப்பா அம்மா என்ன சொல்வறா? அவாளுக்குத் தெரியுமா?"

"அப்பா அம்மா ஊரிலேயே இல்லை. மதுரைக்குப் போயிருக்கா... வரதுக்குப் பத்து நாள் ஆகும். அதுவரை காத்திருக்க முடியாது மாமா... யதுகிரி கழுத்திலே தாலி ஏறிட்டா யாரும் எதுவும் பண்ண முடியாது பாருங்கோ... அதனாலே தான் அவசர கல்யாணம்... பஸ் வந்துடுத்து... நாங்க கிளம்பறோம் மாமா."

ஹரி பஸ்ஸில் ஏற, அந்தப் பெண் யதுகிரியும் என்னைப் பார்த்துத் தலையாட்டிவிட்டு ஏறிக் கொண்டது.

ஒரு வாரமாக எனக்குள் ஒரே உளைச்சல். கல்யாணம் நடந்திருக்குமா? விஷயம் கேள்விப் பட்டு ஹரியின் மாமா மும்பையிலிருந்து வந்து ருத்ரதாண்டவம் ஆடியிருப்பாரோ...? ஹரியின் பெற்றோர் இதை எப்படி ஏற்றுக் கொண்டிருப்பார்கள்?

ஒருநாள் யதேச்சையாக மாம்பலத்தில் ஹரியைப் பார்த்து, ஓட்டமும் நடையுமாகப் போய்ப் பிடித்தேன். வழக்கம் போல் சிரித்தான்.

"நானே உங்களைப் பார்க்க வரலாம்னு இருந்தேன் மாமா... கல்யாணம் நல்லவிதமா முடிஞ்சு போச்சு. மாமா மும்பையிலேலிருந்து வந்து குதிகுதின்னு குதிச்சார். யதுகிரி மேஜர் ஆச்சே... 'என் இஷ்டம்'னு சொல்லி அவர் வாயை அடைச்சுட்டா. அவர் எனக்கு ஏராளமா சாபம் விட்டுட்டுப் போயிட்டார்."

"உன் அப்பா அம்மா சைடிலே என்ன ரியாக்ஷன்?"

"அவாளுக்கும் கோபம்தான். 'உனக்கேன்டா இந்த வீண் வேலை? அவா எப்படிப் போனா உனக்கென்ன? நீ எதுக்கு இழுத்துப் போட்டுண்டு வீணா வசவு வாங்கணும்'னு என் மேலே பாய்ஞ்சா..."

எனக்குள் என்னமோ நெருடியது.

"ஒரு சந்தேகம் ஹரி... யதுகிரி கல்யாணம் பண்ணிண்டது..."

"அவகூட மும்பையிலே வேலை பார்த்த

பானுமதி ராஜகோபாலன்



ஒரு தமிழ்ப் பையனை. காதல். அப்பாவுக்குத் தெரிஞ்சதும் கண்டிச்சிருக்கார். ஒருத்தனைப் பார்த்துப் பேசி முடிச்சு, முகூர்த்தமும் வெச்சாச்சு. கிரி என்கிட்டே சொல்லி அழுதா. ஏதோ என்னாலான புண்ணியம். மாமா பெண்ணுக்கு இந்த உதவி கூட செய்ய லேன்னா எப்படி?"

– ஹரி சிரித்துக் கொண்டே தான் சொன்னான். அவன் கண்களில் தெரிந்த நீர்ப் படலம் என் கற்பனையாகக் கூட இருக்கலாம்.○

# தாகம் தீர்கிறது!

தண்ணியில்லா காடு என்று வர்ணிக்கப் படும் வேலூரில் நடந்த உண்மை நிகழ்ச்சிதான் இது. சென்னைவாசிகளை விடவும் தீராத தாகம் கொண்ட வேலூர் வாசிகளுக்கு 1991ஆம் ஆண்டு நவம்பர் மாதம் பதினாறு, பதினேழு தேதிகளை மறக்கவே முடியாது. காரணம் அந்த மூன்று நாட்களிலும் விடாது பெய்த அடை மழையால் பாலாற்றில் வெள்ளம் பெருக் கெடுத்து ஓடியது. பொங்கி வரும் வெள்ளத்தை வேடிக்கைப் பார்க்க கூட்டம் கூட்டமாய்ப் பாலாற்றங்கரையில் கூடினர்.

சத்துவாச்சேரி மலையில் உள்ள அருவியில் நீர்வீழ்ச்சி கொட்டிய அழகையும் கண் கொட்டாமல் கண்டுகளித்தனர். வேலூருக்குக் குடிநீர் தரும் ஒட்டேரியும்கூட தடுப்பு அணை நிரம்பி வழிந்தது.

பாலாறும், சத்துவாச்சேரியும் இன்று வறண்டு கிடந்தாலும், ஒட்டேரி எப்படியிருக்கிறது?

நடப்பாண்டு பெய்த மழையால் நிரம்பி யிருக்கும் ஒட்டேரிதான் இன்று வேலூர் மக் களுக்கு மூன்று நாட்களுக்கு ஒருமுறை தொண் டையை நனைத்துக் கொள்ள தண்ணீர் தரு கிறது. இன்னும் பல பகுதிகளில் வாரம் ஒரு முறைதான் குடி தண்ணீர் விநியோகம் நடக் கிறது. வேலூரின் குடிநீர் பிரச்னையைத் தீர்க்க நீண்டகால நிரந்தர திட்டம் எதுவுமில்லையா?

ஏன் இல்லை! வேலூரில் 1981ல் மாவட்ட ஆட்சியராக பதவி வகித்த கங்கப்பா, காவேரி - பாலாற்று இணைப்புத் திட்டத்தைத் இருபத்து இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு அன்றைய தமிழக ஆட்சியாளர்களிடம் சமர்ப்பித்தார். காவேரியிலிருந்து தர்மபுரி வழியாக, வாணியம்பாடியில் பாலாற் றுடன் இணைத்து, பாலாற்றிலிருந்து செம்பரம் பாக்கம் ஏரியையும் இணைத்துவிட்டால் வேலூருக்கு மட்டுமல்ல; சென்னைக்கும் குடிநீர் பிரச்னை இராது என்பதுதான் கங்கப்பாவின் திட்டம்.



• கங்கப்பா

"புதிய வீராணம், பழைய வீராணம் என்று இதுவரை ஆயிரம் கோடிகளை வீணடித்த தமிழக அரசு இந்தத் திட்டத்தை மிகக் குறைந்த செலவில் எப்போதோ நிறைவேற்றி இருக் கலாம்" என்று சொல்லும் கங்கப்பாவின் கோரிக் கையை ஜெயலலிதா செவி மடுத்துவிட்டார் என்பது வேலூர்வாசிகளுக்கு மகிழ்ச்சியான செய்தி. ஆமாம்! கடந்த ஆண்டு ஜெயலலிதா பொறுப்பேற்றதும் இந்த திட்டத்திற்கு ஒப்புதல் அளித்து ரூபாய் பத்து கோடியை முதல் கட்டமாக ஒதுக்கீடு செய்தார். மீண்டும் அவர் முதல்வரானால் காவேரி - பாலாற்று இணைப்புத் திட்டம் தீவிரமாகும் என்கிறார்கள்.








# ஜலகண்டேஸ்வரர் தரிசனம்!

**வே**லூருக்கு விஜயம் செய்துவிட்டு ஸ்ரீ ஜலகண்டேஸ்வர பெருமானைத் தரிசிக்காது திரும்புதல், தவமிருந்து விட்டு வரம் வேண்டாம் என்று சொல்வதைப் போலத்தான்! பண்டையத் தொண்டை நாடாக விளங்கிய வட தமிழ்நாட்டின் பஞ்சபூத ஸ்தலங்களில், அப்புவின் ஆட்சி நடைபெறும் வேலூரின் வரலாற்றுச் சிறப்புக்கு முன்னால் வேறு எந்த ஊர் நிற்க முடியும்! ஓராயிரம் ஆண்டுகள், ஓயாத பல போர்களைக் கண்டு, பேரரசுகள் வாழ்ந்ததும் வீழ்ந்ததும் இந்த மண்ணில்தானே!

வேலூரைச் சுற்றி நடந்த போர்கள் தமிழக வரலாற்றில், ஏன் இந்திய வரலாற்றிலேயே எத்தனை திருப்பங்களை ஏற்படுத்தின! இங்கேயிருந்த விஜயநகர, மராட்டிய, முஸ்லீம் மன்னர்களோடு, வெளிநாட்டு வணிகர்களாய் நுழைந்த வெள்ளையரும், பிரெஞ்சுக்காரரும் ஓயாத சண்டையிட்டனர். அந்தத் தருணத்தில் எழுந்ததல்லவா எழில்மிகு வேலூர் கோட்டை.

அத்தகைய கோட்டைக்குள்





வேலூர் சிறப்பிதழ்





இரண்டாவது பொம்மிநாயக்க மன்னரால் இன்றைக்கு 456 வருடங்களுக்கு முன் உருவாக்கப்பட்ட கலைக் கோவிலில் எழுந்தருளியிருக்கிறார் சிவபெருமான். படையெடுப்பாளர்கள் அவரின் லிங்க வடிவை வெளியே வீசிய போதும், நாநூறு ஆண்டுகள், ஆண்டவன் இல்லா ஆலயம் என்ற அவச் சொல்லோடு விளங்கினாலும், தாம் இருக்குமிடத்தை வெளிக்காடிய ஸ்ரீஜலகண்டேஸ்வர பெருமானை மறு பிரதிஷ்டை செய்ய கிளர்ந்தெழுந்த மக்கள் இயக்கத்தின் எழுச்சி மறக்கக்கூடியதல்லவே!

தேடி வரும் பக்தருக்கெல்லாம் தேவையான செல்வங்களை அள்ளித் தரும் ஜலகண்டேஸ்வரரைத் தரிசிக்க, கோட்டையை நோக்கி நடக்கிறோம். கோட்டைக்கு முன்பாக தொல்பொருள் ஆய்வுத் துறை பராமரித்து வரும், பரந்து விரிந்து கிடக்கும் பசுமைப் புல்வெளிப் பூங்காவின் அழகைப் பருகியபடி, கோட்டையின் கிழக்கு வாயில் வழியே நுழைய முயல்கிறோம். அதற்கு முன்பு கோட்டைச் சுவர்களில் எழிலும், மேநாட்டு ஆயுதங்களைப் பயன்படுத்தும் வசதிகள் கொண்ட அகழி மதிலும் ஆச்சர்யமூட்டுகின்றன. இடப்புறம் அகழியில் ஆளுயரக் கோரைகள் வளர்ந்து ஆக்கிரமித்திருப்பதைப் பார்க்கையில் கவலை தொற்றுகிறது. ஆயினும் அங்கிருந்து ஆலயத்தை நோக்கிப் புறப்படுகிறோம்.

உயர்ந்து நிற்கும் ராஜகோபுரத்தை நிமிர்ந்து பார்த்தபடி உள்ளே இறங்குகிறோம். ஆம்! கோட்டையின் உட்புறத் தரைப் பகுதியை விட சுமார் மூன்று மீட்டர் ஆழத்தில் அல்லவா கோவில் அமைந்திருக்கிறது!

ராஜகோபுரத்தின் கதவை ஒட்டிய வலப்புற நிலைத் தூணில், கோவிலைக் கட்டிய பொம்பி ரெட்டி, திம்மி ரெட்டி நாயக்கர்களின் சிற்பங்கள் தனித்து தெரிவதைக் கவனித்தபடியே நுழைகிறோம். உட்பிராகாரத்திற்குள் நுழைய மற்றொரு அழகிய கோபுரம் அழைக்கிறது. அதே சமயம் இடப்புறம் நாயக்க, மராட்டிய, சோழ சிற்பக் கலைகளின் கலவையாய்க் கல்லிலே கவிபாடும் கல்யாண மஹால் கண்களில் பதிகிறது. கல்யாண மஹாலுக்கு எதிரே, புதையுண்டு சமீபத்தில் கண்டுபிடிக்கப்பட்ட சிறு பொய்கையில் தாமரைகள் பூத்துச் சொரிந்து கொண்டிருக்கின்றன. அங்கிருந்து இரண்டாவது கோபுர வாயில் வழியே ஆலயத்தின் உட்பிராகாரத்தில் நுழைந்தால் முழு முதற்கடவுளாய் எதிர்படுகிறார் வலம்புரி பெரிய விநாயகர். அவரை வணங்கி விட்டு இடப்புறம் திரும்பினால் அங்கே செல்வ விநாயகர்

வீற்றிருக்கிறார். அவரையும் துதித்தபடி பிராகாரத்தின் தென்மேற்குப் பகுதியில் பிரவேசிக்கிறோம்.

அங்கே ஸ்ரீவெங்கடேசபெருமாள், வள்ளி தெய்வானை சமேதராக முருகப்பெருமான் என்று, அருள் மழை பொழிய, அடுத்து நம்மை அரவணைத்துக் கொள்வது அன்னை அகிலாண்டேஸ்வரி. அவள் எதிரிலுள்ள மண்டபத்தில் ஒளிவீசிக் கொண்டிருக்கும் நவசக்தி ஜோதியில் எத்தனை தெய்வீகம்! திருமண வரம் வேண்டி ஆடவர், பெண்டிர் என பிரார்த்தித்து வலம் வருவதைப் பார்த்தபடி ஆலயத்தின் ஈசான மூலைக்குச் செல்கிறோம்.

நவக்கிரகங்களை வலம் வந்து மேற்குதிசை நோக்கித் திரும்பினால், ஆலயத்தின் மூலவர் குடிகொண்டிருக்கும் கிழக்கு பார்த்த கருவறை கண்ணில் படுகிறது. கால்கள் அனிச்சையாய் நடக்கின்றன. ஐந்து தலை நாகங்கள் வெள்ளி நாகபூஷணத்தில் குடைபிடித்திருக்க, அய்யனின் அலங்கார லிங்கத் திருமேனியின் தெய்வீக அழகில் நம் மனம் ஒன்றுபட்டுச் சிந்தாமல் சிதறாமல் கட்டுண்டு போகிறது.

நேரம் போனதே தெரியாமல் கோட்டைபாணிக் கருவறையை ஒட்டிய தரிசன அறையில் அமர்ந்து விட்ட நம்மை உகப்புகிறார் கோவில் தலைமை குருக்கள். பிரிய மனமின்றி கர்ப்பக்கிரகத்தை வலம் வந்து வெளியேறும்போது தஞ்சை பிரகதீஷ்வரர் கோவிலில் உள்ளது போன்ற அச்சு அசலான வெண்கலக் கொடிமரம். அங்கிருந்து பைரவர், லட்சுமி, சரஸ்வதி, அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், திருஞானசம்பந்தர், சன்னதிகளை வணங்கி விட்டு இறுதியாய்த் தென்கிழக்கு மூலையில் ஆலயத்தின் முக மண்டபத்திற்கு வரும் போது அங்கே ஆடல்வல்லான் கம்பீரமாய் மனத்தை நிறைக்கிறார்.

கலையும், அருளும் கைகோத்து கிடக்கும் ஸ்ரீ ஜலகண்டேஸ்வரர் ஆலயத்தை வாழ்நாளில் ஒருமுறையேனும் பார்த்துத் தரிசித்துப் பரவசப்படுகிறவர்கள் கொடுத்து வைத்தவர்கள்!

# KALKI SHOPPING PAGE



பூ வண்ணம்
ஜொலிக்கும்
வேலூர்
மாநகரில்,
புது
வண்ணம்
மலர
விரைவில் எதிர் பாருங்கள்

## REDDY MEN'S WEAR

THE ONE OF THE
K.G.REDDY GROUP

Vellore, Phone : 232539

## இந்தியா டிரேடர்ஸ்

டீலர்ஸ் : ஹார்டுவேர்ஸ்,
பிளைவுட், மைக்கா
கண்ணாடிகள், கலர்
கண்ணாடிகள், மிரர்,
ஹார்டுபோர்டு,
நோவாப்பன் &
அலுமினியம் செக்ஷன்ஸ்

தரமான பொருட்கள் வாங்க
சிறந்த இடம்

123, லாங்கு பஜார்,
வேலூர் - 4. ☎ : 227756

## ஃபினோலெக்ஸ்

மிகச்சிறந்த மல்டிஸ்டிராண்ட்
எலெக்ட்ரிகல் ஒயர்கள்




✓ நம்பகமானது
✓ அதிகம் பாதுகாப்பானது
✓ மலிவானது

மேலும் கிடைக்கிறது [illegible]



Finolex
Cables Limited
AN ISO 9002 COMPANY
Finolex gets people together

அங்கீகாரம்
பெற்ற
விற்பனையாளர்

## பஜாஜ் பிரதர்ஸ்

429, மெயின் பஜார்,
வேலூர் - 4 போன் : 223162




**RB** யின் அக்மார்க் மசாலா பொடிகள்

மஞ்சள் பொடி, மிளகாய் பொடி, சாம்பார் பொடி, ரசப் பொடி, மல்லிப் பொடி, கறிமசாலா பொடி, இட்லி மிளகாய் பொடி, மிளகுப் பொடி, சீரகப் பொடி, சம்பா கோதுமை குருணை, கோதுமை மாவு

RBயின் அக்மார்க் மசாலா பொடி

உண்ண உண்ண சுவையூட்டும்
இன்னும் உண்ண நினைவூட்டும்

*மருக்கு லாவிய மலரணை கொதியாதே*
*வளர்த்த தாய்தமர் வசையது*
*பொழியாதே*
*கருக்கு லாவிய அயலவர் பழியாதே*
*கடப்ப மாலையை யினிவர*
*விடவேணும்*
*தருக்கு லாவிய கொடியிடை*
*மணவாளா*
*சமர்த்த னேமணி மரகத*
*மயில்வீரா*
*திருக்கு ராவடி நிழல்தனி*
*லுறைவோனே*
*திருக்கை வேல்வடி வழகிய*
*பெருமாளே*

# குராவடிக்

அருணகிரிநாதர் திருவிடைக்கழி முருகனைக் குறித்துப் பாடிய எட்டு திருப்புகழ் பாடல்களுள் மிகப் பரவலாக அறியப்படுவது மேற்படி பாடல்தான்.

காமாக்கினிக்கு வசப்படாமல், பழிச் சொல்லுக்காளாகாமல், தாய் தந்தையரைத் தூற்றாமல், வாழ்ந்து சிறக்க திருமுருகனின் கருணையை வேண்டி நிற்கிறார் அருணகிரிநாதர்.

கற்பகவிருக்ஷமான தேவ தருவின் நிழலில் வளர்ந்த கொடியிடையாளம் தேவை சேனையின் மணாளனே!

போர் புரிவதிலும் அதில் வெற்றி கண்டு தேவமங்கையின் கரம்பற்றுவதிலும் சமர்த்தனாயிருப்பவனே! மணி நிறத்தவனே! மரகத வண்ணமான பச்சைநீல மயில் மீது ஆரோகணித்து வரும் வீரனே! திருக்குராமரத்தின் நிழலில் உறைபவனே! திருக்கரத்தில் வேலாயுதம் தாங்கியவனே! என்று அழைத்து அழைத்து அருணகிரிநாதர் கேட்பது என்ன...?

*கடப்ப மாலையை யினிவர*
*விடவேணும்!*

– இந்த வரியில்தான் இருக்கிறது திருவிடைக்கழி முருகனின் வரலாறு; இந்த வரியிலும் திருக்குராவடி நிழலிலும் ஒய்யாரமாய் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறது ஒரு முருகன் கதை:

சிவபெருமானுடைய சக்தி வெளிப்பாடுதான் முருகப் பெருமான் என்பது நாம் அறிவோம்.

ஜோதி பிழம்பாக நின்ற சிவபரம் பொருள், தன்னிடமிருந்து ஆறு தீப்பொறிகளைத் தோற்றுவித்தது. அந்த ஆறு பொறிகள்தான் ஆறுமுகமும் பன்னிரு கரங்களும் கொண்ட கந்தனாக உருவாகின.

இதைத்தான் கந்தபுராணம் சொல்கிறது.

*அருவமும் உருவும் ஆகி*
*அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்*


– ஆர்.

*பிரமமாய் நின்ற சோதிப்*
*பிழம்பதோர் மேனியாகக்*
*கருணை கூர் முகங்களாறும்*
*கரங்கள் பன்னிரண்டும் கொண்டே*
*ஒருதிருமுருகன் வந்தாங்*
*குதித்தனன் உலகமுய்ய*

ஆகவே, சிவன் வேறு முருகன் வேறு அன்று. அருணகிரிநாதரும் இவ்விருவரிடையே வேறுபாடு கொள்ளாமல் வழிபட்டார்.

சிவபெருமானே முருகனைக் குறித்து பார்வதியிடம் சிலாகிப்பதாகச் சொல்கிறது கந்தபுராணம்:

"நமது சக்தி ஆறுமுகன்" என்று எடுத்துச் சொல்லி, "ஏதமில் குழவி போல்வான், யாவையும் உணர்ந்தான், சீரும் போதமும் அழிவில் வீடும், போற்றினர்க் கருளவல்லான்" என்று உறுதியளிக்கிறார்.

முருகப் பெருமான் இவ்வாறு சிவனால் அருளப்பெற்றவன் என்பதையும் சிவ ஸ்வரூபமே அவன் என்பதையும் உணர்த்துகிற திருத்தலம் திருவிடைக்கழி.

சூரபத்மனின் மகனான இரண்யாசுரனை திருவிடைக்கழியில்தான் சம்ஹாரம் செய்

# குமரன்!

குருஜி ஏ.எஸ். ராகவன்



தான் முருகன். அந்த சம்ஹார தோஷம் நீங்குவதற்காக, இத்தலத்திலுள்ள குராமரத்தின் நிழலில் சிவபெருமானுக்கு ஒரு லிங்கம் அமைத்து வழிபட்டான். சிவபெருமானும் அவனுடைய தோஷத்தை நீக்கி ஆட்கொண்டதோடு, அவ்விடத்தில் முருகன் தன்னுடைய ஸ்வரூபத்தையே பெற்று விளங்கும்படிச் செய்தாராம்! சிவஸ்வரூபமாக முருகனே இருக்கையில் தமக்கு அங்கு வேலை இல்லை என்று ஒதுங்கிக் கொண்டுவிட்டாராம்!

அதனால்தான் இந்த ஊரின் முருகன் கோயில் சிவாலய அமைப்பிலேயே இருக்கிறது. பிராகார அமைப்புகளைக் கவனித்துப் பார்த்தால் சோமாஸ்கந்தமூர்த்தி இருக்க வேண்டிய இடத்தில் வள்ளி-தேவசேனா சமேதராக முருகனே இருக்கிறார்! நடராஜர் சன்னிதி இருக்க வேண்டிய இடத்தில் – சபா மண்டபத்தில் – குமரப் பெருமான் இடது கையில் வில்லும் வலக் கரத்தில் வேலும் ஏந்தி நிற்கிறான்!

இத்தலத்தில் திருக்குராவடி நிழலில் சிவலிங்கத்தை பூஜித்தபடி காணக்கிடைக்கிறான்

முருகன். சம்ஹாரமூர்த்தியாயிருந்தபோது அணிந்த கடப்ப மாலையைக் களைந்து, குரா மலர்களாலான மாலையை முருகன் அணிந்த தலம் இது (கடப்ப மாலையை இனி விட வரவேணும்)

பிரதான மூர்த்தியாக கருவறையில் குமார சிவமாக, நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகிறான் பாலசுப்ரமணியன். அவனுக்கு முன்னே ஸ்படிக லிங்க வடிவிலும் பின் புறத்தில் லிங்க உருவமாகவும் பாபநாசப் பெருமான் என்ற பெயருடன் சிவபெருமான் கோலோச்சுகிறார்!

நாகை மாவட்டம் திருக்கடவூர் அருகே தில்லையாடி என்ற ஊர் இருக்கிறது. சுதந் தரப் போராட்ட வீராங்களை வள்ளியம் மையின் ஊர்தான்! இந்த ஊருக்கு வெகு அருகில் இருக்கிறது திருவிடைக்கழி.

மகிழாரண்யம், மகிழ்வளங்குடி என்ற மங்களமான பெயர்களும் திருவிடைக்கழிக்கு உண்டு. நாகதலம் என்பது மற்றும் ஒரு பெயர்! சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகிற குராப்பள்ளி என்ற ஊர் இவ்வூர்தான்.

தொன்மைச் சிறப்புடைய இவ்வூரில் திருமால், பிரும்மா வசிஷ்டர் தவிர முசுகுந்த சக்கரவர்த்தியும் வழிபட்டிருக்கிறார். சுமார் ஆயிரத்திருநூறு ஆண்டுகளுக்கு முன் முசுகுந்த மன்னர் பல திருப்பணிகளை இங்கு நடத்திக் காட்டியிருக்கிறார். இதற்கான ஆதாரங்கள் பிராகாரத்தில் கல்வெட்டில் காணக் கிடைக்கின்றன.

கிழக்கு நோக்கிய ஆலயம் அதை எதிர் நோக்கி ஐந்நூற்று வினாயகர் என்ற பிள்ளை யார் கோயில் இருக்கிறது.

வெளிப்பிராகாரத்தில் 'திருகாமேஸ்வரர்' என்ற பெயருடன் சிவன் இருக்கிறார்.

மூலஸ்தானத்தில் சிவ வடிவமாக நின்று அருள் செய்யும் பாலசுப்ரமண்யன் அழகுக்கு இலக்கணமாய் அமைந்து நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்கிறான். நின்ற திருக் கோலம். கிழக்கு நோக்கிய ஒரு முகம், இரு கரங்கள். வலது கரம் அபயமருளும் முத்திரை காட்ட, இடது கை இடுப்பில் பொருந்தி யிருக்கிறது. திருப்பாதங்களில் வீரக் கழல்கள் மின்ன, விபூதி காப்பணிந்த எளிய அலங் காரமாயினும் சரி, விதவித ஆபரணங்கள் பூட்டிய ராஜ அலங்காரமா யினும் சரி... 'முருகனின் மறு பெயர் அழகு' என்று நினை வூட்டி நிற் கிறான்.



பதினோரு பாடல்கள் கொண்ட திருவிசைப்பா என்னும் பதிகத் தில் சேந்தனார் என்ற புலவர், இந்த பால முரு கனை 'திருக்குரா நிழற்கீழ் நின்ற எழுங்கதிர்' என்று உதய சூரி யனின் பொலிவுடையவனாகப் பாடியிருக் கிறார்! பன்னிரு திருமுறைகளிலும் பாடப் பெற்றுள்ள தலம் திருவிடைக்கழி.

வெளிப்பிராகாரத்தில் தெற்கு நோக்கிய மண்டபத்துக்கு வருவோம். இங்கே அந்த முருகனின் க்ரியாசக்தி அம்சமான தெய்வயானை, அவன் அழகில் மயங்கி நாணத்துடன் சற்று வலப்புறம் தலை சாய்த்து அவன் திருவுருவைக் கடைக்கண் ணால் நோக்கும் பாவனையில் நிற்கிறாள்.

வசிஷ்டர் பூஜித்த வசிஷ்ட லிங்கம், சிவ

சண்டேஸ்வரர், குஹ சண்டேஸ்வரர் என்று இரு சண்டேஸ்வரர் சன்னிதிகள் ஆகியவை இக் கோயிலின் தனிச் சிறப்புகள்.

குரா மர நிழலில் உள்ள பலிபீடத்துக்குத் தினமும் அர்த்த ஜாம ஆராதனை நடை பெறுகிறது.

அண்ணாமலை பல்கலைக்கழக வேதியியல் துறையில் பேராசிரியராக இருந்தவர் திருமங்கலமுடையார். இவர் தம்மைத் திருவிடைக்கழி முருகனிடம் அர்ப்பணித்து இத்தலத்தின் பெருமை திசையெங்கும் பரவுவதற்கு நிறைய உழைத்தார். முன்னின்று நிதி திரட்டி ஏழு நிலை ராஜ கோபுரம் அமைத்தார்.

இன்றும் அடியார்கள் பலரை தன் அழகிலும் அருளிலும் கட்டிப்போட்டுக் கொண்டுதான் இருக்கிறான் முருகன். அந்த கருணையில் கட்டுண்டு எழில் தோற்றத்தில் மயங்கி நாம் அவனிடம் எதுவும் கேட்க மறந்து நிற்போம் என்பதை அறிந்துதானோ என்னவோ, அருணகிரிநாதர் என்னென்ன கேட்கலாம் என்பதை அன்றே வரிசைப் படுத்திவிட்டுப் போயிருக்கிறார்:

***பகரு முத்தமிழ்ப் பொருளு மெய்த்தவப்***
***பயனு மெப்படிப் பலவாழ்வும்***
***பழைய முத்தியிற் பதமு நட்புறப்***
***பரவு கற்பகத் தருவாழ்வும்***
***புகரில் புத்தியுற் றரசு பெற்றுறப்***
***பொலியும் அற்புதப் பெருவாழ்வும்***
***புலன கற்றிடப் பலவி தத்தினைப்***
***புகழ்ப லத்தினைத் தரவேணும்***

அற்புதப் பெருவாழ்வை வேண்டுகிறவர், தவப் பயனைத் தா என்று கேட்கிறவர் முத்தமிழின் பொருளும் வரமருளக் கேட்கிறார் என்றால் அந்தத் தமிழின் உயர்வை நாம் எத்தகையதாகக் கொள்வது! முக்தி நிலைக்கு நிகராக மொழிச் சிறப்பைச் சொல்லியிருப்பது அம் மொழியை ஆன்ம சிந்தனையின் வாகனமாக அவர் கருதுவதையே காட்டுகிறது. தமிழ்க் கடவுளுக்கும் தமிழ் மொழிக்கும் திருவிடைக்கழியில் அருணகிரிநாதர் செய்த சிறப்பை எண்ணி வியந்தபடி அந்த அழகு முருகனை வலம் வருவோம்.

(அடுத்த வாரம் : **கந்தன்குடி வேலன்**)

## அருள்வாக்கு

பகவானை ஸௌந்தர்யமும், கருணையும் ஞானமும் உள்ள மூர்த்தியாக வைத்துக் கொண்டு பக்தி செலுத்துவோம். பிறகு அவரே அவருடைய வாஸ்தவ ஸ்வரூபத்தைக் காட்டிவிட்டுப் போகிறார். அவருடைய வாஸ்தவ ஸ்வரூபத்தை அவரே தான் காட்ட முடியும். நாம் செய்யக் கூடியது, நம் மனசுக்கு அந்த ஸ்வரூபம் எப்படி வந்தால் ஆனந்தமாக இருக்கிறதோ, அப்படி நினைத்து பக்தி செலுத்துவதுதான். அதைச் செய்ய ஆரம்பிப்போம்.



பகவானே கீதையில் இப்படித்தான் சொல்லியிருக்கிறார்.

**பக்த்யா மாம் அபிஜானாதி யாவான்**
**யச்சாஸ்மி தத்வத:**
**ததோ மாம் தத்வதோ ஜ்ஞாத்வா**
**விசதேதத் அனந்தரம்!!**

"ஒருத்தன் என்னிடம் பக்தி செலுத்திக் கொண்டேயிருந்தால், நான் யார், எப்படிப் பட்டவன் என்று உள்ளபடி தெரிந்து கொள்கிறான். அம்மாதிரி என்னை உள்ளபடி தெரிந்து கொண்டபின், எனக்கு வேறாக இல்லாமல் என்னுள்ளேயே புகுந்து விடுகிறான்" என்கிறார்.

அவருக்கு வெளியிலே நாம் இருக்கிற மட்டும்தான் அவரைப் பார்த்துப் பக்தி பண்ணலாம். உள்ளேயே புகுந்து விட்டால் அப்போது அவர் வேறு, நாம் வேறு இல்லை. ஒன்றாக - அத்வைதமாக ஆகிவிடுவோம். ஆனால் இப்படி ஆவது எப்போது ஸாத்யம் என்றால், 'என்னிடம் பக்தி செய்து, உள்ளபடி, என்னைத் தெரிந்து கொண்ட பின்தான்' என்கிறார். 'ததோமாம்' என்பதில் உள்ள 'ததோ' 'தத:' என்பதற்குப் 'பின்னால்', 'அப்புறம்' என்று அர்த்தம். இப்போது பண்ணக் கூடியது பக்தி; அப்புறம் நடக்க வேண்டியது அந்தச் சமயத்தில் நடக்கட்டும்! பக்தி பண்ணிக் கொண்டேயிரு. அப்புறம் நான் உள்ளபடி எப்படியிருக்கிறேன் என்பதை நானே காட்டி, உன்னை அத்வைதமாகக் கரைத்துக் கொள்கிறேன்" என்கிறார்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை - 63. Tel & Fax: 237 6129.
E-mail: sspeetam@md3.vsnl.net.in, sspeetam@hotmail.com
Please visit our Website at: www.sspeetam.org

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர்! வணக்கம்

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 14 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய், தந்தையற்ற, திக்கற்ற 120 மாணவர்களும் 30 மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை, மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன் உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே, தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (150 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில் / வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியை பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு **Cheque / DD / MO** மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்

# சிவகாமியின் சபதம்

## பதினோராம் அத்தியாயம்

## "பயங்கொள்ளிப் பல்லவன்"

சிவகாமி நிருத்தம் ஆடியபோது சுய உணர்வுடன் இருந்தவர் ஒருவர் நல்லவேளையாக அங்கே இருந்தார். அவர் பிக்ஷு நாகநந்திதான் என்று சொல்ல வேண்டியதில்லை.

"போதும், ஆயனரே! ஆட்டத்தை நிறுத்துங்கள். இனிமேல் ஆடினால் சிவகாமியும் தாங்க மாட்டாள். உலகமும் தாங்காது" என்ற நாகநந்தியின் வார்த்தைகளைக் கேட்டு ஆயனர் சுயப்பிரக்ஞை அடைந்து தாளம் போடுவதை நிறுத்த, சிவகாமியும் ஆட்டத்தை நிறுத்தினாள்.

புத்த பிக்ஷு கூறினார்: "ஆயனரே! நீர் எத்தகைய துரோகம் செய்துகொண்டிருக்கிறீர்? இப்படிப்பட்ட தெய்வீகமான கலையை இந்த நடுக்காட்டிலே ஒளித்து வைத்துக்கொண்டிருக்கலாமா? உலோபி ஒருவன் தனக்குக் கிடைத்த மதிப்பில்லாத இரத்தினத்தைப் பெட்டிக்குள்ளே பூட்டி வைத்திருப்பது போல அல்லவா இருக்கிறது நீர் செய்யும் காரியம்! தீபத்தை ஏற்றி நடுக்கூடத்தில் வைக்க வேண்டும். அப்படியின்றி மூலை முடுக்கிலே வைத்துத் துணியைப் போட்டு மூடினால், தீபம் அணைந்து போவதுடன், துணியும் அல்லவா எரிந்து போகும்? உலகம் பார்த்துப் பிரமிக்கும்படியான கலைச் செல்வம் உமது குமாரியிடம் இருக்கிறது. அதைப் பார்த்து ஆனந்திக்க உலகமும் காத்திருக்கிறது. நான் சொல்கிறதைச் சற்றுச் செவி கொடுத்துக்

அமரர் கல்கி

கேளுங்கள். என்னுடன் கிளம்பி வாருங்கள். தில்லைப்பதிக்குப் போவோம். அங்கே பரமசிவனுக்குப் போட்டியாகப் பார்வதி ஆடியது போல் சிவகாமியும் ஆடட்டும். ஆனால் பார்வதியைப் போல் சிவகாமி நடனப் போட்டியில் தோற்க மாட்டாள். எடுத்த எடுப்பிலேயே நடராஜா தோற்றுப் போவார். அவருடைய தூக்கிய திருவடியைப் பூமியின் மேல் வைத்து இளைப்பாறுவார். தில்லையிலிருந்து நாகைப்பட்டினத்துக்குப் போகலாம். நாகைப்பட்டினத்திலே புத்த பிக்ஷுக்களின் மகா சங்கம் கூடப்போகிறது. இந்தக் கூட்டத்துக்காகக் கன்யாகுப்ஜத்திலிருந்தும், காசியிலிருந்தும், கயையிலிருந்தும், கடல்களுக்கப்பாலுள்ள சாவகத் தீவிலிருந்தும், சீன தேசத்திலிருந்தும் பௌத்தர்கள் வருகிறார்கள். உலகத்தின் நாலா பக்கங்களிலிருந்தும், சிற்பக் கலைஞர்களும், இசை வல்லார்களும், நடன சாஸ்திர மேதைகளும் நாகைப்பட்டினத்தில் கூடுகிறார்கள். அந்த மகா சங்கத்திலே உங்கள் புதல்வி நடனம் ஆடட்டும்; அவளுடைய புகழும் அவளைப் பெற்ற உம்முடைய புகழும் உலகமெல்லாம் பரவட்டும்; நாகைப்பட்டினத்திலிருந்து உறையூருக்குப் போவோம். உறையூர்ச் சோழர்கள் இன்று தாழ்வடைந்து பல்லவர்களுக்குக் கப்பம் செலுத்தும் சிற்றரசர்களாக இருக்கிறார்கள். இருந்தாலும் பூர்வீகப் பெருமையுடையவர்கள். கலைகளில் அபாரப் பற்று உடையவர்கள். பார்த்திபன் என்னும் சோழ இராஜகுமாரன் அங்கே இருக்கிறான். சித்திரக் கலையில் தேர்ந்தவன். சிவகாமியின் நடனத்தைப் பார்த்தால் அவனுடைய ஆனந்தத்துக்கு அளவே இராது. பின்னர் அங்கிருந்து கிளம்புவோம். சித்தர் வாச மலையின் சித்திர விசித்திரங்களைச் சிவகாமிக்குக் காட்டிவிட்டு மதுரை மாநகருக்குச் செல்வோம். அங்கே மாரவர்ம பாண்டியன் சமீபத்திலேதான் காலமாகி, அவன் மகன் சடையவர்மன் பட்டத்துக்கு வந்திருக்கிறான். சடையவர்மன் மகா ரஸிகன். ஆஹா! சடையவர்ம பாண்டியன் மட்டும் சிவகாமியின் நடனத்தைப் பார்த்துவிட்டால், உங்களை இந்த அரண்ய வீட்டிலே இப்படி நிர்க்கதியாக விட்டிருப்பானா? மதுரை நகரிலுள்ள மாடமாளிகைகளுக்குள்ளே மிக உன்னதமான மாளிகை எதுவோ, அதிலே அல்லவா உங்கள் இருவரையும் வைத்துப் போற்றுவான்...?"

இவ்விதமாக நாகநந்தி பேசி வருகையில் ஆயனரும் சிவகாமியும் பாம்பாட்டியின் மகுட வாத்தியத்தில் மயங்கிப் படமெடுத்தாடும் சர்ப்பத்தைப் போல், அவருடைய மொழிகளைக் கேட்டு வந்தார்கள்.

கடைசியில், "என்ன சொல்கிறீர், ஆயனரே?" என்று நாகநந்தி கூறி நிறுத்தியபோது, ஆயனருக்கு உண்மையில் இன்னது சொல்வதென்றே தோன்றவில்லை. அவருடைய மனத்தில், "சக்கரவர்த்தியின் கட்டளைக்கும் நாகநந்தியின் யோசனைக்கும் வெகு பொருத்தமாயிருக்கிறதே!" என்ற எண்ணம் தோன்றிக்கொண்டிருந்தது. இருந்தாலும் காரணம் தெரியாத ஒருவிதத் தயக்கமும் உண்டாயிற்று. எனவே, "நான் என்ன சொல்வது? சிவகாமியைத்தான் கேட்க வேண்டும்" என்று சொல்லி, சிவகாமியை நோக்கினார்.

சிவகாமிக்கோ, சிதம்பரத்தையும் நாகைப்பட்டினத்தையும் உறையூரையும் மதுரையையும் பற்றிக் கேட்டபோது, அங்கெல்லாம் அவள் போவது போலவும், பல்லாயிரக்கணக்கான மக்களின் முன்னே ஆடுவது போலவும், அவர்களுடைய பாராட்டுதலைப் பெற்று மகிழ்வது போலவும் மனக்கண் முன்னால் தோன்றிக்கொண்டே வந்தது. ஆனால் அவள் மனத்திலும் ஒரு தடை, இன்னதென்று விளங்காத ஏதோ ஒரு சந்தேகம், குறுக்கிட்டுக் கொண்டேயிருந்தது.



எனவே, ஆயனர் மேற்கண்ட வாறு கேட்டதும் சிவ காமி சற்று யோசித்து, "எனக்கு என்ன தெரியும், அப்பா? உங்களுக்கு எது உசிதமாகத் தோன்றுகிறதோ,

அப்படிச் செய்யுங்கள்'' என்றாள்.

அப்போது நாகநந்தி, ''ஆமாம் ஆயனரே, உம்முடைய காலம் எவ்விதம் போய்க்கொண்டிருக்கிறது? இங்கே புதிய நடனச் சிலை எதையும் காணோமே? நான் கடைசி முறையாக வந்து போன பிறகு, புதிதாக ஒரு சிலை கூட அமைக்கப்படவில்லையா?'' என்றார்.

ஆயனர் ஏக்கம் நிறைந்த குரலில், ''இல்லை; கல்லுளியைக் கையினால் தொட்டு வெகு காலமாயிற்று'' என்றார்.

''ஏன் அப்படி? சிற்பக் கலை என்ன பாவத்தைச் செய்தது? தென்தேசத்தின் ஒப்பற்ற மகா சிற்பி எதற்காகக் கல்லுளியைக் கையினால் தொடாமலிருக்க வேண்டும்?'' என்று பிக்ஷு கேட்டார்.

சிவகாமி அப்போது குறுக்கிட்டு, ''எல்லாம் உங்களால் வந்த வினைதான், அடிகளே! அஜந்தா வர்ண இரகசியத்தைக் கண்டுபிடிப்பதில் அப்பா முனைந்திருக்கிறார். தினம் தினம் விதவிதமான பச்சிலைகளைத் தேடிக் கொண்டு வருவதும், அரைப்பதும்தான் ஏழு மாதங்களாய் அப்பா, செய்யும் வேலை'' என்றாள்.

''ஆகா! வீண் வேலை! நான்தான் எப்படியும் உங்களுக்கு அதை அறிந்து சொல்வதாக வாக்குக் கொடுத்திருக்கிறேனே?''

ஆயனர் சிறிது பரபரப்புடன் ''வாக்குக் கொடுத்தது உண்மைதான். ஆனால், அதை நிறைவேற்றுவதாகக் காணோமே? நீங்கள் ஓலை கொடுத்தனுப்பியதுதான் உபயோகப்படவில்லையே! அந்தப் பிள்ளையாண்டான் இப்போது சைனியத்தில் சேர்ந்து பெரிய தளபதியாகிவிட்டான்; தெரியுமோ இல்லையோ?'' என்றார்.

''அப்படித்தான் நானும் கேள்விப்பட்டேன். நேற்றைக்குத்தான் அவன் காஞ்சிக்கு வந்தானாமே?''

''ஆம்! இன்று காலை அந்தப் பிள்ளையே இங்கே வந்திருந்தான். காஞ்சிக் கோட்டைக் காவலுக்காக அவனைச் சக்கரவர்த்தி அனுப்பி வைத்திருக்கிறாராம். அடேயப்பா! எட்டு மாதத்திற்குள் அவனிடம் எவ்வளவு வித்தியாசம்? அடக்க ஒடுக்கத்துடனும் நாணம் அச்சத்துடனும் அன்றைக்கு உங்களுடன் வந்தானே அந்தப் பரஞ்சோதி எங்கே? இன்று காலை காஞ்சித் தளபதியாக வந்த பரஞ்சோதி எங்கே? என்ன கர்வம்!''

''அப்பா, அவரிடம் அகம்பாவம் ஒன்றுமில்லையே! தங்களிடம் எவ்வளவோ பயபக்தியுடன்தானே நடந்து கொண்டார்? சக்கரவர்த்தியின் கட்டளையைக்கூட எவ்வளவு தயக்கத்துடன் கூறினார்?'' என்று சிவகாமி குறுக்கிட்டுச் சொன்னாள்.

''ஆயனரே, சக்கரவர்த்தியின் கட்டளை என்ன? நான் தெரிந்துகொள்ளலாமா?'' என்று புத்த பிக்ஷு கேட்டார்.

''எங்களை இந்த வீட்டை விட்டுப் போகச் சொல்லிக் கட்டளை! எப்படியிருக்கிறது கதை? இந்த மகேந்திர பல்லவர் ஒரு காலத்தில் சிற்பக் கலையில் எவ்வளவு பற்று உடையவராயிருந்தார்? அவரைப் பற்றி நான் என்னவெல்லாம் எண்ணியிருந்தேன்?'' என்று ஆயனர் எதையோ பறிகொடுத்து விட்ட குரலில் கூறினார்.

''நானும் உங்கள் சக்கரவர்த்தியைப் பற்றி என்னவெல்லாமோ எண்ணியிருந்தேன். அவருடைய சாமர்த்தியம் இப்போதுதான் தெரிகிறது. உங்கள் சக்கரவர்த்தி எப்பேர்ப்பட்ட காரியத்தைச் சாதித்திருக்கிறார் தெரியுமா, ஆயனரே? பல்லவ சைனியத்தில் ஐம்பதாயிரம் வீரர்களுக்கு மேலே இருக்க மாட்டார்கள். இந்த அற்பச் சைனியத்தை வைத்துக்கொண்டு கடல் போன்ற வாதாபி சைனியத்தை எட்டு மாதத்துக்கு மேலே வடபெண்ணைக் கரையிலேயே நிறுத்தி வைத்திருந்தார்! மகேந்திர பல்லவர் வெகு கெட்டிக்காரர். ஆயனரே! வெகு

கெட்டிக்காரர்! இருக்கட்டும்! பரஞ்சோதி தான் போன காரியத்தைப் பற்றி என்ன சொன்னான்? ஓலையை என்ன செய்தானாம்? அதைப் பற்றி நீங்கள் ஒன்றும் கேட்கவில்லையா?'' என்று புத்த பிக்ஷு வினவினார்.

"கேட்காமல் என்ன? பாவம், அந்தப் பிள்ளைக்கு வழியிலே பெரிய விபத்து நேர்ந்துவிட்டதாம். சளுக்க வீரர்கள் அவனைப் பிடித்துக்கொண்டு விட்டார்களாம். எப்படியோ பையன் சளுக்க வீரர்களிடமிருந்து தப்பித்து வந்து விட்டானாம். நல்லவேளையாகச் சிறைப் பிடிக்கப்பட்டதும் ஓலையை மலைப் பள்ளத்தாக்கில் ஓடிய அருவியிலே எறிந்து விட்டானாம்! புத்திசாலிப் பையன்!"

''புத்திசாலி! அதோடு அதிர்ஷ்டசாலி. முதன்முதலில் சாலை ஓரத்தில் அவன் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்த போது பார்த்தவுடனேயே இவன் மிக அதிர்ஷ்டசாலியாவான் என்று எனக்குத் தெரிந்துபோயிற்று. ஆனால், நான் அவனுக்கு எதிர்பார்த்த அதிர்ஷ்டம் வேறு! ஆஹா! என்ன தவறு செய்து விட்டேன்!'' என்று நாகநந்தி கூறி இலேசாக ஒரு பெருமூச்சு விட்டார்.

''அடிகளே! பரஞ்சோதிக்கு இப்போது அதிர்ஷ்டம் ஒன்றும் குறைவாகப் போய்விடவில்லையே?"

"உங்களுக்குத் தெரியாது, ஆயனரே! இன்னும் எவ்வளவோ பெரிய அதிர்ஷ்டம் அவனுக்கு வருவதற்கிருந்தது. ஏதோ ஒரு கிரகம் வந்து குறுக்கிட்டிருக்கிறது..."

"நல்லவேளை; இவ்வளவு அதிர்ஷ்டத்தோடேயே நிற்கட்டும். இன்னும் அதிகமானால், பையனுக்குத் தலைகால் தெரியாமல் போய்விடும்'' என்றார் ஆயனர். அஜந்தாவர்ண இரகசியத்தை அறிந்து கொள்ளாமல் வந்ததில் பரஞ்சோதியின் மேல் அவருக்கு மிக்க வெறுப்பு உண்டாகியிருந்தது.

சிவகாமி குறுக்கிட்டு, ''அப்பா! அப்பா! ஒரு செய்தி கேட்டீர்களா? மகேந்திர சக்கரவர்த்தி ஒருவேளை பல்லவ இராஜ்யம் மாமல்லருக்கு இல்லையென்று சொல்லிவிட்டுப் பரஞ்சோதிக்குக் கொடுத்தாலும் கொடுத்து விடுவாராம். ஜனங்கள் அப்படிப் பேசிக் கொள்வதாகச் சாரதி கண்ணபிரான் சொன்னார்'' என்று கூறிவிட்டுக் கன்னங்கள் குழியக் 'கலகல' வென்று சிரித்தாள்.

''யார், கண்ணபிரானா! அவன் கிடக்கிறான் பைத்தியக்காரன்! இப்படித்தான் ஏதாவது உளறுவான்'' என்றார் ஆயனார்.

அப்போது நாகநந்தி, ''இல்லை, ஆயனரே, இல்லை! சாரதி கண்ணபிரான் சொன்னது அப்படி ஒன்றும் உளறல் இல்லை. அவன் சொன்னபடி நடந்தால், அதில் எனக்கு வியப்பு இராது. காஞ்சி சிங்காதனத்தில் பயங்கொள்ளிப் பல்லவனை வைத்துப் பட்டம் கட்டுவதைக் காட்டிலும் பரஞ்சோதிக்கு ராஜ்யத்தைக் கொடுப்பதே வீரமகேந்திர பல்லவருக்கு உகப்பாயிருக்கும்'' என்றார்.

## பன்னிரண்டாம் அத்தியாயம்

# உள்ளப் புயல்

எதிர்பாராத நேரத்தில் வானத்திலிருந்து ஒரு மின்னல் பாய்ந்து வந்து மண்டையைப் பீறிக் கொண்டு தேகத்துக்குள் பாய்வது போன்ற உணர்ச்சி 'பயங்கொள்ளிப் பல்லவன்' என்ற சொல்லைக் கேட்டதும் சிவகாமிக்கு ஏற்பட்டது.

ஆயனரும் திடுக்கிட்டவராய், "அடிகளே! என்ன சொல்கிறீர்கள்? பயங்கொள்ளிப் பல்லவன் யார்?'' என்று கேட்டார்.

"பயங்கொள்ளிப் பல்லவனைப் பற்றி

உலகமெல்லாம் அறியுமே? நாடு நகர மெல்லாம் பேச்சாயிருக்கிறதே? உங் களுக்குத் தெரியாதா? ஆனால், நீங்கள் காட்டுக்குள்ளே இருக்கிறீர்கள்! உங் களுக்குத் தெரியாதுதான்'' என்றார் பிக்ஷு.

"என்ன தெரியாது? யாரைப் பற்றி உலகம் என்ன சொல் கிறது? மர்மமாயிருக் கிறதே!'' என்றார் ஆய னர்.

"ஒரு மர்மமும் இல்லை. உலகமெல் லாம் தெரிந்த விஷயத்தை உங்களுக்கு நான் சொன்னால்தான் என்ன? மாமல்லன் என்று பட்டப் பெயர் பெற்ற குமாரச் சக்கரவர்த்தி நர சிம்ம பல்லவனைப் பற்றித் தான் சொல்கிறேன். அவன் பெரிய கோழை, பயங் கொள்ளி என்பது உலகப் பிரசித்தமாயிற்றே? முதன் முதலில் வாதாபி சைனியம்



படையெடுத்துவிட்டது என்று கேள்விப் பட்டதுமே மாமல்லனுக்கு உடம்பெல்லாம் நடுக்கமடைந்து மயங்கி விழுந்து விட்டானாம். அதுவும் அந்தச் சமயத்தில் அவன் அரண்மனை அந்தப்புரத்து மாதர்களுக்கு மத்தியில் இருந்தானாம். சக்கரவர்த்திக்கு மானமே போய்விட்டதாம். ஆயனரே! மாமல்லனை ஏன் சக்கரவர்த்தி யுத்தகளத்துக்கு அழைத்துப் போகவில்லை என்று நீர் கேள்விப்படவில்லையா? ஏன் காஞ்சிக் கோட்டைக்கு வெளியிலே மாமல்லன் வரக்கூடாது என்று திட்டம் செய்துவிட்டு மகேந்திர பல்லவர் போர்க்களம் போனார் என்று நீர் கேள்விப்படவில்லையா?''

"ஓ, பொல்லாத பிக்ஷுவே! எப்பேர்ப்பட்ட, அவதூறு சொல்கிறீர்? எம்மாதிரி அபசாரம் பேசுகிறீர்? பதினெட்டு வயதுக்குள் தென்னாட்டிலுள்ள பிரசித்த மல்லர்களையெல்லாம் வென்று 'மகா மல்லன்' என்று பட்டம் பெற்ற மகா வீரனைப் பற்றி இவ்விதம் சொல்ல உமது நாக்குக் கூசவில்லையா?" என்று ஆயனர் சற்று ஆத்திரத்துடனேயே கேட்டார்.

''மகா சிற்பியே! தங்களுக்கு இந்த விஷயமெல்லாம் தெரியாதென்பது எனக்குத் தெரியாது. பெரிய இடத்துச் சமாசாரம். நமக்கு என்ன கவலை? ஆனாலும் என் வார்த்தையில் நீங்கள் அவ நம்பிக்கை கொள்வதால் சொல்கிறேன். அந்த 'மகா மல்லன்' பட்டமெல்லாம் வெறுங்கதை! நரசிம்மவர்மனோடு போரிட்ட மல்லர்களுக்கெல்லாம் முன்னாலேயே கட்டளையிடப்பட்டிருந்தது. சீக்கிரத்தில் தோற்றுப் போய் விடவேண்டுமென்று. இப்படியெல்லாம் செய்தாலாவது பிள்ளைக்கு வீரமும் தைரியமும் வராதா என்று சக்கரவர்த்தி பார்த்தார். பாவம்! பலிக்கவில்லை! யுத்தம் என்று வந்ததும் நடுங்கிப் போய்விட்டான். சாக்ஷாத் உத்தர குமாரனுடைய அவதாரந்தானாம். நரசிம்மவர்மன், ஊர் ஊராகப் பாரத மண்டபம் கட்டிப் பாரதம் படிக்க வேண்டுமென்று சக்கரவர்த்தி ஏற்பாடு செய்திருக்கிறாரே, எதற்காகத் தெரியுமா? முக்கியமாக, அவருடைய திருக்குமாரனை உத்தேசித்துத்தான்...!''

''அடிகளே! நிறுத்துங்கள்! குமாரச் சக்கரவர்த்தியைப் பற்றி இப்படியெல்லாம் கேட்க என் மனம் சகிக்கவில்லை'' என்றார் ஆயனர்.

''இன்னும் மிச்சமுள்ள உண்மையையும் கேட்டால் என்ன சொல்வீர்களோ, தெரியவில்லை. ஆனால், தங்கள் குமாரி இருக்கும்போது சொல்லக்கூடாது...'' என்று கூறி நாகநந்தி சிவகாமி இருந்த இடத்தை நோக்கினார்.

சிவகாமி ஏழெட்டு வயதுச் சிறுமியாயிருந்த போது ஒரு சமயம் ஒரு தேன் கூட்டில் கையை வைத்துவிட்டாள். கையிலும் உடம்பிலும் தேனீக்கள் கொட்டிவிட்டன. ஒரு நாளெல்லாம் வேதனை அனுபவித்துக்கொண்டிருந்தாள். அதைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு வேதனையை நாகநந்தி நரசிம்மவர்மரைப் பற்றி சொல்லி வந்ததைக் கேட்டுக்கொண்டிருந்தபோது சிவகாமி அனுபவித்துக் கொண்டிருந்தாள். பிக்ஷுவின் வார்த்தை ஒவ்வொன்றும் பழுக்கக் காய்ச்சிய ஈயத்துளியைப் போல் அவள் காதில் விழுந்து கொண்டேயிருந்தது.

பிக்ஷு, ''உங்கள் குமாரி இருக்கும் போது சொல்லக் கூடாத விஷயங்கள்'' என்று கூறியதும், இதுதான் சமயம் என்று சிவகாமி சட்டென்று எழுந்திருந்தாள். அவர்கள் பக்கமே பாராமல் நடந்து வீட்டின் இரண்டாங்கட்டுக்குள் பிரவேசித்தாள்.

சிவகாமியின் செம்பஞ்சு ஊட்டிய பாதங்களைக் கதவின் அடியில் இருந்த இடைவெளியிலே புத்த பிக்ஷு பார்த்து விட்டு, கொஞ்சம் உரத்த குரலில்

சொன்னார்:

"ஆயனரே! உமது குமாரி சிறந்த கலைவாணி மட்டுமல்ல; ரொம்பவும் இங்கிதம் தெரிந்தவள். எப்படிச் சட்டென்று எழுந்து போனாள் பாரும்...! நான் என்ன சொல்ல வந்தேன் என்றால், சக்கரவர்த்திக்குத் தம் புத்திரன் விஷயத்தில் இன்னொரு பெரிய கவலையாம். பல்லவ குலத்தில் இவ்வளவு இளம் வயதில் இவனைப் போல் ஸ்திரீ லோலன் ஆனவனே கிடையாதாம். ஒரு சமயம் மாமல்ல பல்லவன் ஒரு பெண்ணுக்கு எழுதிய காம விகாரம் ததும்பிய ஓலை சக்கரவர்த்தியிடம் அகப்பட்டு விட்டதாம். இதையெல்லாம் உத்தேசித்துத்தான், மாமல்லனைக் காஞ்சியிலேயே இருக்க வேண்டுமென்று சக்கரவர்த்தி திட்டம் செய்திருக்கிறாராம்...!"

இப்படி நாகநந்தி சொல்லிக் கொண்டிருந்தபோது, கதவின் அடியில் தெரிந்த பாதங்கள் மறைந்தன. நாகநந்தியும் பிறகு தமது குரலைத் தாழ்த்திக் கொண்டு பேசலானார்.



யிரம் பேய்களினால் துரத்தப்பட்டவளைப் போல் சிவகாமி வீட்டின் பின் கட்டுகளைத் தாண்டிக் கொல்லைப் பக்கம் ஓடினாள். காட்டுக்குள்ளே எங்கே போகிறோம் என்ற உத்தேசமில்லாமல் ஓடினாள். ஓடி ஓடிக் களைத்துக் கடைசியில் ஒரு மரத்தடியில் வேரின் மீது உட்கார்ந்தாள்.

சிவகாமியைப் பின்தொடர்ந்து மானும் கிளியும் பின்னால் வந்து கொண்டிருந்தன. அவற்றை அவள் கவனிக்கவேயில்லை. மரத்தடியில் உட்கார்ந்த சிறிது நேரத்துக்குப் பிறகு ரதி அருகில் வந்து மெதுவாகத் தன் முகத்தை அவள் கரத்தின் மீது வைத்தது. சிவகாமி அதை ஒரு தள்ளுத் தள்ளி, "சீ தரித்திரமே! பீடை! ஒழிந்து போ!" என்று கத்தினாள்.

சந்தர்ப்பம் தெரியாத அசட்டுச் சுகரிஷி, "மாமல்லா! மாமல்லா!" என்றது. சிவகாமி கையை ஓங்கி, 'சனியனே! மூதேவி!' என்று அதை அடிக்கப் போனாள். கிளி இறகுகளை அடித்துக் கொண்டு அவளிடம் அகப்படாமல் தப்பிச் சென்றது.

திடீரென்று தாமரைக் குளக்கரையில் மகிழமரப் பொந்தில் இருந்த ஓலைகளின் நினைவு வந்தது. அந்த ஓலைகளை உடனே எடுத்து நெருப்பிலே போட்டு எரித்துச் சாம்பராக்கிவிட வேண்டுமென்று நினைத்துத் தாமரைக் குளத்தை நோக்கி ஓடினாள். அதி சீக்கிரத்தில் குளக்கரையை அடைந்து, உட்காரும் பலகையின் மீது காலை வைத்து ஏறி மரப் பொந்திலே கையை விட்டாள்.

ஐயோ! அந்தப் பொந்திலே ஏதாவது நாகசர்ப்பம் இருந்து அவள் கரத்தைத் தீண்டிவிட்டதா என்ன? அவள் முகத்திலே ஏன் அவ்வளவு பயங்கரம்? கையை ஏன் அவ்வளவு அவசரமாய் வெளியில் எடுத்தாள்? இன்னும் கொஞ்சம் மேலே கிளம்பிப் பொந்திற்குள்ளே உற்றுப் பார்க்கிறாளே, ஏன்?

அந்தப் பொந்து வெறுமையாய், சூனியமாயிருந்ததுதான் காரணம்.

காலையில் அந்தப் பொந்தில் இருந்த ஓலைகள் எங்கே போயிருக்கும்?



வகாமி அந்த மகிழ மரத்தை ஓடி அடைந்த அதே சமயத்தில், தாமரைக் குளத்தின் எதிர்க் கரையில் இருந்த காட்டில் புத்த பிக்ஷு விரைந்து வந்துகொண்டிருந்தார். மரப்பொந்தில் அவள் கையை விட்டு வெறுங்கையை வெளியில் எடுத்ததை அவர் பார்த்தார். அப்போது சிவகாமியின் முகத்தில் தோன்றிய வியப்பும் பயமும், பிக்ஷுவுக்கும் எல்லையற்ற ஆச்சரியத்தை உண்டாக்கிற்று என்பது அவருடைய முகக் குறியினால் தெரிய வந்தது.

(தொடரும்)




# மர்மக் கடிதமும் மத்திய சிறையும்!

• நா.பாலச்சந்திரா

வேலூர் சிறப்பிதழ் என்று அறிவித்த அடுத்த வாரமே வந்து குவிந்த கடிதங்களில் 'அய்யோ! அய்யய்யோ!' என அலறியது முகமற்ற ஒரு கடிதம். பலரது முகத்திரையை விலக்கிக் காட்டவே எழுதுகிறேன் என்றது. அடுத்த சில நாட்களில் அதே பதற்றத்தோடு ஒரு மர்மத் தொலைபேசி. "அந்த கடிதத்தை எழுதியது நான்தான். என் மனசாட்சியைத் தொட்டுச் சொல்கிறேன். அதிலிருக்கும் ஒவ்வொரு வரியும் நூறு விழுக்காடு உண்மை" என்று சொல்லிவிட்டு பட்டென்று துண்டித்துக் கொண்டது குரல். அப்படி என்ன இருக்கிறது அந்தக் கடிதத்தில்? சாரம் இது தான் :

"வேலூர் மத்திய சிறையின் நிர்வாகம் சிறப்பானது. நன்கு திட்டமிடப்பட்டது என்று தேசிய மனித உரிமைக் கழகமே பாராட்டிச் சான்றளித்துள்ளது. ஆனால் அமைதிக்குப் பெயர் போன அந்தச் சிறையில், அமைதியின் பின்னணியில் நடைபெறும் சமூக விரோதச் செயல்களை நான் கண்கூடாகக் கண்டு வருபவன். நான் சிறைக் கைதியா இல்லை, சிறை ஊழியனா என்று கவலைப்படாமல் நான் சொல்வதை வாசகர்களுக்கும், அரசுக்கும் எடுத்துச் சொல்லுங்கள்; அது போதும்." என்று ஆரம்பித்த அந்தக் கடிதத்தில் சம்பந்தப்பட்ட சிறை அதிகாரிகள், கைதிகளின் பெயர்களைக் குறிப்பிட்டு எழுதியிருந்தபோதும் நாம் அவற்றை வெளியிடவில்லை."

"சிறையில் கிடைக்காத போதைப் பொருட்கள் இல்லை. கான்ஸ் எனப்படும் புகையிலையில் தொடங்கி, கஞ்சா, அபின் உட்பட விசாரணைக் கைதிகளை நிர்வகிக்கும் சிறை அலுவலர் மூலமும், ஆடர்லிகள் மூலமும் உள்ளே வருகிறது. சிறைக்குள் ரூபாய் இருபது விலைக்கு கான்ஸ் விற்கப்படுவது சர்வ சாதாரணம்.

சென்னை மத்திய சிறை ஜெயிலர் எரித்துக் கொல்லப்பட்ட வழக்கில் சம்பந்தப்பட்டதாகக் கூறப்படும் கைதிகளுக்கு, பவுடர் எனப்படும் அபின் சப்ளை செய்யப்படுகிறது. அதை அவர்கள் பொட்டலம், ரூபாய் இருபது முதல் நூறு வரை என மற்ற கைதிகளுக்குக் கூலாக விற்றுவிடுகிறார்கள். கடந்த ஜனவரி பதினேழாம் தேதி பவுடர் விற்பனையில் ஏற்பட்ட தகராறு காரணமாக மோதிக் கொண்ட இருவர் படுகாயமடைந்து, சிறை மருத்துவமனையிலேயே இன்னும் சிகிச்சை பெற்று வருகின்றனர். ஆனால் பவுடர் வியாபாரம் தூள் பறக்கிறது."

"இப்போதைய சிறைக் கண்காணிப்பாளரின் நேர்மையைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொண்டு அதிகாரிகள் பணம் சேர்க்கிறார்கள். சிறை அதிகாரிகள் அத்தனை பேரும் பயப்படுவது பிரபல தேசத் தலைவர் படுகொலையில் தண்டனை பெற்ற கைதிகளுக்குத்தான். காரணம், 'எங்கள் வக்கீல் மூலம், உள்ளே நடக்கும் தில்லுமுல்லுகளை வெளியே கொண்டு வந்து விடுவோம்' என்று பகிரங்கமாக மிரட்டுகிறார்கள். இதனால் இருபது இன்ச் கலர் டி.வி., மியூசிக் சிஸ்டம், கம்ப்யூட்டர்



1931ல் வேதாரண்யம் உப்பு சத்தியாகிரகத்தில் பங்குபெற்ற ருக்மணி லட்சுமிபதியைக் கைது செய்தது வெள்ளை அரசு. இந்திய சுதந்திரப் போராட்டத்தில் கைது செய்




இவர்களுக்கென்று சமைத்துப்போட தனி ஆர்டலிகள், என்று சுகபோக வாழ்க்கையை விதிகளை மீறி அனுபவித்து வருகிறார்கள்.

"இதையெல்லாம்விட வேலூர் சிறையில் ஓரினச் சேர்க்கைத் தொடர்புகள் சர்வ சாதாரணம். வசதிபடைத்த கைதிகள் அனைவரும் மைனர் கைதிகளை, அதிகாரிகளின் அனுமதியோடு இந்தத் தொடர்புக்குப் பயன்படுத்தி வருகிறார்கள். இன்னும் எழுதிக் கொண்டே போகலாம். ஆனால் இதற்கெல்லாம் தீர்வு யாரிடம் இருக்கிறது? ஏதேனும் மாற்றம் நிகழாதா? என்ற எதிர்பார்ப்புடன் முடிக்கிறேன்"

**ப**தில் தேடி, சிறைக் கண்காணிப்பாளர் நா.பாலச்சந்திராவைச் சந்தித்தோம். சிறிது நேர மௌனத்திற்குப் பின் பேசினார் :

"முதலில் சிறைக் கைதிகள் என்று சொல்வதையே நான் எதிர்க்கிறேன். சிறைவாசிகள் என்றே எழுதுங்கள். உணர்ச்சி வேகத்தில் குற்றங்களைப் புரிந்து, 'ஏன் இப்படிச் செய்தோம்? என்று வருந்துகிறவர்கள் தான் எண்பது விழுக்காடு சிறைவாசிகள். இவர்களால் சிறை நிர்வாகத்திற்கு எந்த சிரமமும் இல்லை. எஞ்சிய விழுக்காட்டினரில் ரவுடிகள், சமூக விரோத செயல்களில் ஈடுபட்டவர்கள் ஆகியோரில் பலரையும் நாங்கள் கட்டி மேய்க்க வேண்டியிருக்கிறது. அதற்காக அவர்களுக்கு விதிமுறையை மீறி எந்தச் சலுகையும் தரப்படுவதில்லை. ஆனால் இதுபோன்ற முரட்டு ஆத்மாக்களை சிறைவாசம் முடிந்து வெளியே அனுப்பும் போது புதிய மனிதர்களாக, சொந்தக் காலில் நிற்க தகுதி படைத்தவர்களாக வெளியே அனுப்ப எல்லா முயற்சிகளையும் எடுக்கிறோம். இங்கேயுள்ள தச்சுப் பயிற்சி, விசைத் தறிப் பயிற்சி, கைமுறைக் காகித உற்பத்தி, புக் பைண்டிங், காலணி செய்தல், தையல் கலை போன்ற ஏதாவது ஒன்றில் முழுத் திறமையாளனாக மாற்றுகிறோம். எழுத்தறிவு இல்லையா? சிறைவாசம் முடியும் போது அவனைக் குறைந்தபட்சம் எழுத்துக் கூட்டிப் படிக்க தெரிந்தவனாக ஆக்குகிறோம். பட்டம் படிக்க வேண்டுமா? அனுமதிக்கிறோம். இன்று நிலை என்பது கொடிய தண்டனைக் கூடம் என்ற கூற்று மாறி, அர்த்தமிக்க வாழ்க்கையைக் கண்டு பிடித்துக் கொள்ளும் தனிமனித மறுமலர்ச்சி கேந்திரமாக இருக்கிறது.

சிறையில் சமூக விரோத நடவடிக்கைகள் இருப்பதை என்பதை நான் அடியோடு மறுக்கிறேன். வேலூர் சிறைக்குள் பத்திரிகையாளர்களே நுழைய முடியாது என்ற நிலையை நான் அடியோடு மாற்றினேன்" என்று சொல்லும் பாலச்சந்திரா, சிறைவாசிகளோடு நடுவில் அமர்ந்து ஜாலியாக அரட்டை அடிக்கும் எளியவர். அதே நேரம் கண்டிப்புக்குப் பெயர் போனவர் என்கிறார்கள்.

**யப்பட்டு ஓராண்டு சிறைத் தண்டனை விதிக்கப்பட்ட முதல் இந்திய பெண்மணி இவர். இவருக்காக வேலூரில் உருவாக்கப்பட்டது தான் பெண்களுக்கான தனிச்சிறை.**

● லெ.நா. சிவகுமார், சென்னை - 33

? ஆப்கானிஸ்தான் விமான நிலையத்தில், அந்நாட்டுச் சுற்றுலாத் துறை அமைச்சர் அப்துல் ரஹ்மானை யாத்திரிகர்கள் அடித்துக் கொன்றிருப்பது குறித்து...?

! அடித்துக் கொன்றது யாத்திரிகர்கள் இல்லையென்றும், பல தரப்புக் கூட்டணி ஆட்சியில் அவரைப் பிடிக்காத ஒரு பிரிவினரின் சதி என்றும் பின்னர் வந்த செய்தி கூறுகிறது. சம்பவம் விசாரணையில் உள்ளது.

● இரா. சக்கரபாணி, மதுரை - 7

? நாட்டின் விடுதலைக்கு உயிர் நீத்த வீரர்களுக்காக சங்கரய்யா சிந்திய கண்ணீர் - பதவியைப் பெறுவதற்கு வாக்குப் பெட்டி நிறையச் செய்ய அரசியல்வாதிகள் சிந்தும் கண்ணீர் - ஒப்பிடுக...

! முன்னது புனிதக் கண்ணீர்; பின்னது முதலைக் கண்ணீர்!

● சி. கார்த்திகேயன், சாத்தூர்

? ஜோதிகா ரசிகர்கள் தற்போது ஸ்நேகாவுக்கு மாறி வருகிறார்களாமே...?

! ஜோதிகா ரசிகர்கள் வேண்டுமானால் சினேகாவுக்கு மாறியிருக்கலாம். ஆனால், ஜோதிகா பக்தர்கள் மாறமாட்டார்கள்.

● எஸ். ராஜமழை, சின்னமனூர்

? ஆண்டிபட்டியில் அமைச்சர்கள் குடிசை வீடுகளிலெல்லாம் குங்குமம் கொடுத்து ஆதரவு கேட்டது பற்றி..?

! சென்டிமென்ட் சோறு போடுமா என்று வாக்காளர்கள் யோசிப்பதில்லையே!

● அ. ராஜா ரஹ்மான், கம்பம் - 16

? 'தமிழகத்தில் தற்போது கட்சிகள் குறைய ஆரம்பித்திருப்பது ஜனநாயகத்துக்கு நல்ல அறிகுறியாகும்' என்று தி.மு.க. தலைவர் கருணாநிதி கூறியிருப்பது குறித்து..?

! தேர்தலுக்கு மட்டும் புதிதாய்க் கட்சி ஆரம்பித்து, பிறகு எந்த கட்சியுடனாவது இணைவது இப்போது ஃபேஷனாகிவிட்டது. அடுத்த தேர்தல் நெருங்க, மீண்டும் உதிரிக் கட்சிகள் அதிகரிக்கும்.

● கே.கே.ரவிகாந்த், காட்டுப்புத்தூர்

? 'பஞ்சதந்திரம்', திரைப்பட கூட்டமைப்

• முக்காலமும்...!

• கமல் தந்திரம்!



• புதிய...



• ... அலை..?



# ஜனநாயகத்தின் கேலிக்கூத்து எது?

புக்கு விடப்பட்ட ஒரு 'சவால்' - இது உண்மைதானா?

! ஜில்லென்று ஐஸ் வைத்து 'ஸ்பெப்ஸி'க்கு ஒரு கடிதம் எழுதி, விஷயத்தைச் சுமுகமாக முடித்துவிட்டாரே... அந்த விஷயத்தில் கமல் படு தந்திரம்!

● ஆ. முத்து, வேலூர் ★

? உண்மையைவிட பொய்யை மக்கள் அதிகமாக நம்புவதன் காரணம் என்ன..?

! அதிலிருக்கும் கற்பனை வளத்துக்காகத்தான். 'தோட்டத்துக் காய்கறிகளை விற்றுத்தான் என் பிள்ளைகளின் பள்ளிக் கட்டணம் செலுத்துகிறேன்' என்று ராப்ரி தேவி சொல்வதையெல்லாம் எவ்வளவு ஜோராக ரசிக்கலாம்!

● எம்.டி. ரவிகாந்த், காஞ்சிபுரம்

? ரஜினி - நேற்று, இன்று, நாளை...?

! நேற்று : சூப்பர் ஸ்டார்

இன்று: சலெக்ஷன் ஸ்டார்

நாளை: எலெக்ஷன் ஸ்டார் - இது 'சோ' விருப்பம்.

● மீண்டும் இழப்பு

... பார்வை ...து!

● அகக் கண்ணீர்

● கற்பனையழகு!

● க. நா. இராஜேஸ்வரன், மொரட்டுப் பாளையம்

? திருவாரூர் நாகைப் பகுதி விவசாயிகளின் நிலைமை பரிதாபகரமாய் உள்ளதே?

! இயற்கை வஞ்சித்தது போதாதென்று நெல் கொள்முதலில் ஆர்வம் காட்டாமல் அரசும் அல்லவா வஞ்சிக்கிறது.

● எம்.பாஸ்கர், திண்டுக்கல் ❐

? ஆஃப்கான் போரில் உதவி செய்ததற்கு பாகிஸ்தானுக்கு அமெரிக்கா 22,500 கோடி ரூபாய் நிதி உதவி செய்துள்ளது பற்றி...?

! காசைக் கொடுத்திருக்கிறார்கள் அல்லவா ... இனிமேல் தேனையும் கொட்டிக்கொள்வார்கள்!

● மு. இராமசாமி, வயலூர்

? கஞ்சிரா கலைஞர் ஜி.ஹரிசங்கர் மறைவு பற்றி...?

! அந்த அரிய வாத்தியத்தை அழகாகக் கையாளக்கூடிய வி. நாகராஜனை அடுத்து ஹரிசங்கரும் காலமானது கர்னாடக இசையுலகுக்குப் பேரிழப்பு!

● த. சத்தியநாராயணன், சென்னை-23

? சென்னை மியூசியத்தில் புத்தர் சிலை மாயமாக மறைந்தது குறித்து...?

! Burglar alarm போன்ற எத்தனையோ நவீன உபகரணங்கள் வந்துவிட்டன. நமது அருங்காட்சியகத்தில் பாதுகாப்பு ஏற்பாடுகள் மட்டும் அங்குள்ள புராதன காட்சிப் பொருள்களைக் காட்டிலும் புராதனமாயிருக்கின்றன.

● ஆர். இரவிகுலரகுவர்மன், கபிஸ்தலம்

? ஜனநாயகத்தின் மிகப் பெரிய கேலிக்கூத்தாக தராசு கருதுவது எதை..?

! தமிழகத்தின் ஒரு தொகுதியில் நடக்கிற ஓர் இடைத் தேர்தலுக்கு ஆயுதமும் ராணுவமும் குவிக்கப்பட வேண்டிய நிர்ப்பந்தத்தை!

● த. குணசேகரன், கவுந்தப்பாடி

? 'வாஜ்பாய் முகத்தில் எம்.ஜி.ஆர். தெரிவதைப் பார்க்கிறேன்' என்று திருநாவுக்கரசு பேசியுள்ளது பற்றி...?

! குல்லாய் மாட்டிவிட்டுவிடப் போகிறார்! வாஜ்பாய் எச்சரிக்கையாயிருக்கட்டும்!

● பா.சு.மணிவண்ணன், திருப்பூர்

? விளையாட்டு விபரீதமாகிவிட்டது என்று அரசியல்ரீதியாக விளக்கம் கூறுங்களேன்...?

! பெண் குழந்தைகளுக்கு இரும்புச் சத்து மாத்திரைகள் தரும் திட்டத்தை அரசு எப்போதும்போல் விளையாட்டாக எடுத்துக் கொள்ள, பாவம்! குழந்தைகளுக்கு வாந்தி, வயிற்றுக் கடுப்பு என்று விபரீதம் விளைந்து, இப்போது மாத்திரைகள் பரிசோதனைக்குச் சென்றுள்ளன. திட்டம் கிடப்பில் போடப்பட்டுள்ளது!

● எஸ்.பொன்னுசாமி, உடுமலை

? அறிவு, அனுபவம், ஞானம் - என்ன வித்தியாசம்?

! நெருப்பு சுடும் என்று தெரிந்திருப்பது அறிவு; தீக்குள் விரலை வைத்தல் அனுபவம்; அதைத் 'தீண்டும் இன்பமாக'க் காண்பது ஞானம்!

❐ ரூ.100 பரிசு பெறுபவர் : எம்.பாஸ்கர், ஸ்ரீசரவண பவன், 17, 18, 19 திருவள்ளுவர் சாலை, திண்டுக்கல் - 1

★ ரூ.50 பரிசு பெறுபவர் : ஆ. முத்து, 1/ஏ, வேணுகோபால் தெரு, சின்னசங்கரன்பாளையம், வேலூர் - 1

# அரிய ஆறு கலைகள்

## ( ஜோதிடம், மாந்திரீகம், ஆழ்நிலை தியானம், யோகாசனம், பூஜாவிதானம், ஆருடம் )

### ( தபால்வழி போதனாமுறை )

அரிதான ஆறு கலைகளான ஜோதிட, மாந்திரீக, ஆழ்நிலை தியான, யோகாசன, பூஜாவிதான, ஆருடம் ஆகிய கலைகளை தபால் வழியில் கற்றிட உரிய நேரம். சாஸ்திரப்படி சரியாக கற்று தேர்ந்த வம்சவழியில் வந்தவர்களால் கற்பிக்கும் நிறுவனம் இது. எனவே இவ்வரிய கலைகளை ஒருவர் கற்று உரியன அறிந்துவிடில் சகல ஞானமும் பெற்றவராய் - மனித வாழ்வில் நடக்கும் நடக்க இருக்கும் நலன் - தீதுகளை சரியாக அறிந்து அதற்குகந்த வழியில் வாழ்ந்து எதையும் வெல்லும் திறம் படைத்தவராகவும், செல்வ நிறைவு உடையவராகவும் ஆவது உறுதி.

**1.ஜோதிடம்:** வாழ்வில் நடக்கப்போகும் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் தவறாது கண்டறிந்து பலன் சொல்ல உரிய உதாரண ஜாதகங்கள் 250 கொடுத்து இதுவரை இவ்வளவு தெளிவாக எவரும் சொல்லாத வழியில் 63 பாடங்களாக்கி தரும்ஜோதிடத்தை கற்று தேர்ந்தால் ஜோதிட கலைஞர் என்ற பட்டமும் சான்றிதழும் தருகின்றோம். இதனை கற்று இந்தியா, வெளி நாட்டிலும் தேர்ந்த ஜோதிடர்களாக இருக்கின்றனர்.

**2.மாந்திரீகம்:** செய்வினை, பில்லி, சூன்யம், ஏவல் என்ற தீதுகளை முற்றிலும் நீக்கி - எவராலும் தீது எதும் செய்யமுடியா நிலை பெற்று, பிரிந்து வாழும் தம்பதியரை ஒற்றுமையாக தரும் இந்திர பூஜைகள் 32 கொண்டது கற்று மாந்திரிகத்தில் வல்லவர் ஆகலாம்.

**3.ஆழ்நிலை தியானம்:** ஆன்மீக வழியில், ராஜ யோகம், பக்தி யோகம், ஞான யோகம், கர்ம யோக ரீதியின் முழுமையான மேன்மைகளைப் பெற்று 3 வித சரீரங்கள் அவற்றின் இயக்கங்கள் அவற்றின் தன்மைகளை அறிந்து தாரணை, தியானம், சமாதி நிலை, நிர் விகல்ப சமாதி நிலை ஆகியவற்றை எங்ஙனம் பயில்வது என்ற விளக்கம் அறிந்து நோய், நொடி இன்றி வாழும் தன்மை அடைவதை அறிந்து நலம் பெறுதல்.

**4.யோகாசனம்:** எந்த வித ஊனமுற்றோரையும் சரி செய்யும் வழிகள், இளமை மாறாது வாழும் நிலை அடைதல், நீடு வாழும் முறைகளை அடைவது. எத்தனை நோய் பற்றினும் அதனை அகற்றி நலம் காணும் வழிகள் அறிவது.

**5.பூஜாவிதானம்:** ஸ்ரீதேவியின் 36 அங்கங்களை பற்றிய பூஜைகளை என்ன என்ன காரியத்திற்கு என்ன பூஜை எப்படி செய்ய வேண்டும் என்ற விளக்கம் அறிந்து அட்டியின்றி அந்தந்த காரியங்களில் வெற்றி காணும் ரகசியங்களை அறிந்து என்றும் குபேர சம்பத்துடன் வாழுதல்.

**6.ஆருடம்:** தான் எடுத்த காரியங்களில் வெற்றி தோல்வியை முன் கூட்டியே கடவுள் ஆயிரம் தடவைகள் ஆருட வழியாக அறிவிப்பதை அறியாமல் காரியத்தை செய்து அவஸ்தைபடுகின்றோம். இக்காரியத்தில் என்ன ஆகும் என்பதை ஆரம்பத்திலேயே அறியும் ஆற்றல் பெற்று தரும். ஆருடம் வாழ்வில் சரியாக வழிகாட்டியாக இருக்கும்.

**இத்தனை அரிதான கலைகளை ஆரம்ப முதல் அனைத்தும் கற்று தரும் கலைக்கூடம் தமிழகத்தில் இதுஒன்றே**

**இதனை கற்றிட விரும்புவோர் மதுபானம் செய்வதோ, புகை பிடிப்பதோ, பொடி, புகையிலை போடுவதோ கூடாது. தன்னை ஒரு மகான் ஆக்கும்ஆண்டவனின் அருள் நிலையை வர விடாமல் இந்த தீய பழக்கங்கள் தடுத்துவிடும்.**

எனவே இப்பழக்கம் இல்லாதவர்கள் மட்டும் 15-04-2002 தேதிக்குள் ஜாதகம் இருப்பின் அதனை ஒரு நகல் எடுத்து இணைத்து இதில் எக்கலை கற்றிட விரும்புகின்றீர்கள் என்பதை எழுதி அனுப்பிடுக. கடிதம் கிடைத்தவுடன் உரிய விபர படிவம் அனுப்புகின்றோம். இவ்வரிய கலை கற்று தேற எமது நல்லாசிகள்.



பிரபல ஜோதிடர், ஜோதிடஆசிரியர்

**ஸ்ரீமத் ஜெயவீர தேவா,** யோகி

இராஜயோக பயிற்சியாளர்

பிளாட்எண்:204, அண்ணாநகர் மதுரை - 625 020 தமிழ்நாடு

☎ 533412 650576

# புக்பேங்க்



**தேனுகா**

**க**லை விமர்சகர் தேனுகாவின் 'வண்ணங்கள் வடிவங்கள்' புத்தகம் மற்றும் அவரது கட்டுரைகள் பற்றி கா.நா.சு, எம்.வி வெங்கட் ராம், கரிச்சான்குஞ்சு, விட்டல்ராவ் உள்ளிட்டவர்களின் கட்டுரைகளடங்கிய தொகுப்பு. ம. மதியழகன், மு. செல்வசேகரன் தொகுத்திருக்கிறார்கள்.

***மதி நிலையம், 4/39 பிருந்தாவன் அடுக்ககம், தணிகாசலம் சாலை, தி.நகர், சென்னை - 17, விலை ரூ. 60***

**புறநானூற்றுச் சிறுகதைகள்: நா. பார்த்தசாரதி**

**ச**ம்பவங்களைச் சித்திரிக்கும் புறநானூற்றுப் பாடல்களைக் கதையாகக் கொண்ட இப்புத்தகம் இரண்டாம் பதிப்பாக வந்திருக்கிறது. பாடலுக்குப் பின் உள்ள கதைகளை இவ்வளவு விரிவாக எங்கே பிடித்தார்? என்று ஆச்சர்யப்பட வைக்கின்றன தகவல்கள்.

***தமிழ்ப்புத்தகாலயம், 63/8, மாசிலாமணி தெரு, தி.நகர், சென்னை - 17, விலை. ரூ.55***




**மாப்பஸான் சிறுகதைகள் - கோ. பரமேஸ்வரன்**

**உ**லக எழுத்தாளர்களுள் முக்கியமானவராகக் கருதப்படுபவர் பிரான்ஸின் மாப்பஸான். மனித உறவுகளில் நிலவும் போலித்தன்மை, பொய்மை மேல்தட்டு வர்க்கத்தினரின் போலி வாழ்க்கை பற்றி அதிகமாக பேசும் அவரது சிறந்த கதைகளின் மொழிபெயர்ப்பு, இந்நூல்.

***என்சிபிஹெச், 41-பி சிட்கோ இன்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை - 98, விலை ரூ.40***




**இசையில்லாத இலையில்லை - தேன்மொழி**

**த**மிழ்க் கவிதை உலகில் இதுவரைப் பதிவு செய்யப்படாத பூக்களையும் பூச்சிகளையும் பற்றி கவிதையாகச் சொல்கிறார் தேன்மொழி. மலைப் பிரதேச இனிய நினைவுகளைக் கொஞ்சம் வலியும் நிறைய இழப்பும் கலந்த ஏக்கதோடு இந்தக் கவிதைகள் பேசுகின்றன. வித்தியாசமான கவனிப்புகள்.

*குளக்கரையில்/துணி துவைக்கையில்/ துரைகளில் வானவில்/ கரைவதாய்ச் சொன்னேன்./ வெயில் காயும் முன்/ இமை துளிகளில்/ எத்தனை வானவில்லென/ எண்ணிச் சொல்லும்படி/ உனக்குள்ளிருக்கும் கவிஞனை/ எனக்கு அறிமுகப்படுத்தினாய்.*

***மதி நிலையம், பிருந்தாவன் அடுக்ககம், 4(39) தணிகாசலம் சாலை, தி.நகர், சென்னை-17, விலை ரூ. 60***

**- கார்க்கி**

**அண்டை வீட்டு வம்பு**


• எஸ்.எம். கிருஷ்ணா

# வேட்டிக்கு அனுமதியில்லையா?

பெங்களூரில் பேசப்படும் ஒரு விஷயம் 'ட்ரஸ் கோட்'. பெங்களூர் நேஷனல் லா ஸ்கூல் ஆஃப் இந்தியா யுனிவர்சிட்டியின் டைரக்டரான மோகன் கோபாலை சரியான ஃபார்மல் ட்ரஸ்ஸில் வரவில்லை என்று காரணம் காட்டி, டின்னருக்கு உள்ளே செல்ல அனுமதி மறுத்துவிட்டதாம் பெங்களூர் கிளப். முதல்வர் எஸ்.எம்.கிருஷ்ணா இது பற்றிப் பேசுகையில், "டீஸன்டாக ட்ரஸ் பண்ணினால் போதாதா? குர்தா பைஜாமா, கச்சே-பஞ்சே (பஞ்சகச்சம்) நம் நாட்டு உடைகள். எதற்கு வெஸ்டர்ன் உடைகளைக் காப்பி அடிக்க வேண்டும்? முப்பது வருடங்களுக்கு முன் நான் அந்த க்ளப்பில் மெம்பராக இருந்தபோது லஞ்சில் பியர் அருந்த வேண்டுமென்றால் கூட, 'டை' அணிந்து கொள்ள வேண்டும். அங்கேயே கூட 'டை' வாடகைக்கு கிடைக்கும். ஆனால் இப்போதெல்லாம் பாருக்கோ லாபிக்கோ நான் போவதில்லை. டென்னிஸ் விளையாட மட்டுமே போகிறேன்'' என்றார். பல பெரிய உயர் பதவிகளை வகித்துள்ள மோகன் கோபால், "நமது இந்திய உடைகளுக்கு மதிப்பளிக்கிறேன். வேட்டி அணிவது இழுக்கா? நமது பாரம்பரிய உடையான வேட்டியில் போனதற்கு, அனுமதி வழங்கவில்லை. அதனால் கிளப் உறுப்பினராக இனி இருக்க மாட்டேன்'' என்று காட்டமாக எழுதியுள்ளார். ட்ரஸ் பற்றிய சர்ச்சை கர்நாடக சட்டசபை வரை போய்விட்டது. பிறகென்ன? "தேசிய உடைகளுக்குத் தாராள அனுமதி உண்டு'' என்று இப்போது பல்டியடித்திருக்கிறது பெங்களூர் கிளப்.







எதற்குத்தான் விழா எடுப்பது என்று விவஸ்தையே இல்லாமல் போய்விட்டது பொழுது விடிந்து பொழுது போனால், சர்சர் என்று நாம் ஆத்தி குடிக்கிற காப்பிக்குச் சர்வதேச காப்பி விழா என்று ஆரம்பித்திருக்கிறார்கள்.

இனி காப்பி விழா ஒவ்வொரு வருடமும் கர்நாடகாவில் நடக்குமாம். ஃபேஷன் குரு ப்ரசாத் பிட்டப்பா, தென்னிந்திய காப்பி சர்வதேச தரம் வாய்ந்தது. இரவில் கூட குடிக்கலாம். பாதுகாப்பானது'' என்கிறார். 'காஃபி மோக்ஷா' என்ற பெயரில் டான்ஸ் பார்ட்டி வேறு நடத்த திட்டம்! இந்தத் திருவிழாவில் இத்தாலி, யு.எஸ்., ஜெர்மனி, ரஷியா போன்ற நாடுகளெல்லாம் கூட ஆஜர்.

பணம், தங்கம் மற்றும் விலை உயர்ந்த பொருட்கள் திருட்டுப் போவது சகஜம். ஆனால் குழாய்த் திருடனைப் பற்றி கேள்விப்பட்டிருக்கிறீர்களா? திலீப் சந்துலால் பட்டுக்கு அரசு மருத்துவமனைகளில் புகுந்து குழாய்களையும், டாய்லட் ஃப்ளஷ்களையும் அபேஸ் பண்ணுவது உற்சாகத்தைக் கொடுக்கிறதாம்! சமீபத்தில் டென்டல் காலேஜிலிருந்து இரண்டு டஜன் குழாய்கள், ஜெயதேவா இதயநோய் மருத்துவமனையிலிருந்து பத்தாயிரம் ரூபாய் பெருமானமுள்ள குழாய்களைச் சுடும்போது பிடிபட்டிருக்கிறான். ஏற்கெனவே இதே குற்றத்திற்காக மூன்று வருட சிறைவாசம் அனுபவித்து, சமீபத்தில் தான் வெளி வந்திருக்கிறான்!

- லதா சேகர்



# எல் ஐ சியின் ஜீவன் மித்ரா

மும்மடங்கு கூடுதல் பாதுகாப்புடன்

- பாலிசி முதிர்வுற்றதும் காப்பீடுத் தொகையுடன் கூடுதலாக போனஸ்.
- பாலிசிக்காலத்தில் மரணம் சம்பவித்தால் காப்பீடு தொகையின் மும்மடங்குடன் கூடுதலாக போனஸ்.
- பாலிசி காலத்தில் விபத்தின் மூலம் மரணம் சம்பவித்தால் காப்பீடு தொகையின் நான்கு மடங்குடன் கூடுதலாக போனஸ்.

**எல் ஐ சியின் ஜீவன் மித்ரா**
மும்மடங்கு பாதுகாப்புத் திட்டம்
(அட்டவணை எண் 133)



**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**

நாங்கள் இந்தியாவை நன்றாக அறிவோம்

Insurance is the subject matter of solicitation

Please visit us at: www.licindia.com

பத்திரிகைகளுக்கும் எழுத்தாளர்களுக்கும் கடிதம் எழுதும் வாசகர்கள் பல வகைப்பட்டவர்கள். சில எழுத்தாளர்களது எழுத்தால் உண்மையிலேயே கவரப்பட்டு, ஆத்மார்த்தமாகக் கடிதம் எழுதுபவர்கள் உண்டு. அவர்கள் கொண்டாடத்தக்கவர்கள். கடித நீர் வார்த்து, இலக்கியப் பயிரைச் செழித்து வளரச் செய்பவர்கள் அவர்கள் தான். காலந்தோறும் இத்தகைய உன்னத வாசகர்கள் பிரதிபலன் எதிர்பாராது பணி செய்து வருகிறார்கள். இவர்களில் முதுபெரும் எழுத்தாளர்களான வல்லிக்கண்ணனும் தி.க.சி.யும் கூட அடக்கம்.

வேறுசில வாசகர்கள் உண்டு. தங்கள் பெயர் பத்திரிகையில் இடம் பெற வேண்டும் என்பதைத் தவிர அவர்களுக்கு வேறு நோக்கமெதுவும் கிடையாது.

பத்திருபது வருஷங்களுக்கு முன்னால் நான் பத்திரிகைகளுக்கு வந்த சில அஞ்சலட்டைகளைப் பார்த்து அதிசயப்பட்டிருக்கிறேன். ஒரே அஞ்சலட்டை, நடுவே கோடு போட்டுப் பிரிக்கப்பட்டு இரண்டு பகுதிகளாக்கப் பட்டிருக்கும். மேல் பகுதியில் "பிரபல எழுத்தாளர் உம்மணாமூஞ்சி எழுதிய 'சீ!கம்னு கெட!' என்ற சிறுகதையை வாசித்தேன். அற்புத இலக்கியம். அமர காவியம். நடை அருமை. இப்படிக்கு எஸ்.பி. அதிமேதாவி, தகிடுதத்தம்பட்டி" என்றிருக்கும். அதே அஞ்சலட்டையின் கீழ்ப் பகுதியில் 'உம்மணாமூஞ்சி எழுதிய 'சீ! கம்னு கெட!' ஒரு கதையா! அபத்த இலக்கியம். அறுவை தாங்கவில்லை. நடை நொண்டுகிறது. இப்படிக்கு, எஸ்.பி. அதிமேதாவி, தகிடுதத்தம்பட்டி' என்று எழுதப் பட்டிருக்கும். ஒருவரே இரண்டு முற்றிலும் முரண்பட்ட அபிப்ராயங்களை ஒரே அஞ்சலட்டையில் எழுதும் தைரியத்தை என்ன சொல்ல! தன்பெயர் பத்திரிகையில் இடம் பெற வேண்டும் என்ற ஒரே ஒரு நோக்கத்தைத் தவிர இந்தக் கடிதங்களின் இலட்சியம் வேறு எதுவுமில்லை.


• அம்மா - ஜானகி

சில வருஷங்களுக்கு முன்னால் ஒரு நாளிதழ் அரசியல் ரீதியாக ஒரு நிலைப்பாட்டை எடுத்திருந்தது. துக்ளக் இதழ் அந்த நாளிதழுக்கு நேர் எதிரான நிலைப்பாட்டை எடுத்திருந்தது. வாசகர் ஒருவர் இவ்விரு இதழ்களுக்கும் அவற்றின் நிலைப்பாடுகளை வானளாவப் பாராட்டிக் கடிதம் எழுதி விட்டார். இரண்டு கடிதங்களுமே அந்தந்தப் பத்திரிகைகளில் பிரசுரமாகிவிட்டன. இதைக் கண்டுபிடித்த சோ, அந்தக் குறிப்பிட்ட வாசகரின் நேர்மையின்மையைத் தம் பத்திரிகையில் அம்பலப்படுத்தியிருந்தார்.

எழுத்தாளர்களைப் போலவே, இன்னும் சொல்லப்போனால், எழுத்தாளர்களை விடவும் அதிகமாக, வாசகர்களுக்குப் பொறுப்புணர்ச்சி


• விக்கிரமன்

இருக்க வேண்டியது அவசியம். பொறுப்புணர்ச்சியற்ற வாசகர்கள், மனச்சாட்சியின்றி சுயநலம் சார்ந்து இயங்கும் விமர்சகர்கள் ஆகியோரால் தான் எழுத்துலகம் பலவீனமடைகிறது.

தொடர்ந்து ஆவிக் கதைகளை எழுதிவந்தார் ஒரு பெண்மணி. ஜல தோஷத்திற்காக எப்போதாவது ஆவி பிடிப்பது, இட்லி, இடியாப்பம் போன்று ஆவியில் வேகவைத்தவற்றைச் சாப்பிடுவது ஆகியவற்றைத் தவிர வேறு வகை ஆவிகளோடு எனக்கு நேரடி அறிமுகம்

# என் அம்மாவுக்கு வந்த காதல் கடிதம்!

திருப்பூர் கிருஷ்ணன்



• ஜானகி

எதுவும் கிடையாது! ஆனாலும் ஆவிக் கதைகளுக்குப் பலத்த வரவேற்பிருந்ததால், அந்தப் பெண்மணியின் கதைகளைத் தொடர்ந்து வெளியிட்டு வந்தேன். கதைகள் சிறப்பாகவே இருந்தன. ஆனால் ஒவ்வொரு கதை வெளிவந்த பிறகும் தொலைபேசியில் தன் கதையின் சிறப்பைத் தானே பாராட்டி அந்தப் பெண்மணி என்னிடம் பேசுவதுதான் சிறப்பில்லாமல் இருந்தது. அது எங்கள் இருவருக்கும் இடையே நிகழும் தொலைபேசி உரையாடல் கூட அல்ல. அவர் மட்டுமே நிகழ்த்தும் தொலைபேசிச் சொற்பொழிவு! 'என் கதையைப் பாராட்டி எத்தனை கடிதங்கள் வந்தன?' என்று ஓயாமல் கேட்டுக் கொண்டிருப்பார் அவர்.

அவர் கதை பிரசுரமானபின் தவறாமல் ஏழெட்டுப் பாராட்டுக் கடிதங்கள் பத்திரிகை அலுவலகத்திற்கு வந்து சேரும். அந்தக் கடிதங்கள் எல்லாம் ஒரே கையெழுத்தில் எழுதப்பட்டிருக்கும். அந்தக் கையெழுத்து அந்த எழுத்தாளரின் கையெழுத்துச் சாயலிலேயே இருக்கும்.

ஒருமுறை அவர், 'என் கதையைப் பாராட்டி எத்தனைக் கடிதங்கள் வந்தன?' என்று தொலைபேசியில் விசாரித்தபோது எனக்குப் பொறுக்கவில்லை. 'உங்கள் கதையைத் தொடர்ந்து ஏதோ ஒரு ஆவி ஈடுபட்டு வாசிக்கிறதம்மா. ஒரே கையெழுத்தில் ஏழெட்டுக் கடிதங்களை அது எழுதி அனுப்புகிறது. அந்த ஆவிக்கு வெவ்வேறு கையெழுத்தில் எழுதவாவது நீங்கள் பயிற்சி கொடுப்பது நல்லது!' என்றேன் நான். சற்று நேரம் எதிர்த் திசையில் மௌனம். பிறகு 'மன்னிக்கவும்' என்ற வார்த்தையோடு தொலைபேசி துண்டிக்கப்பட்டது. அதன் பிறகும் அவருடைய சிறந்த ஆவிக் கதைகள் பல பிரசுரிக்கப்பட்டன. ஆனால், தொலைபேசி மூலம் நிகழ்த்தப்பட்ட 'பூசை' காரணமாக, பாராட்டுக் கடிதங்கள் எழுதும் ஆவியின் சேஷ்டை முற்றிலுமாக நீங்கியது.

பல வருஷங்கள் முன்னால் அமுதசுரபி மாத இதழ், புகைப்படக் கவிதைப் போட்டி ஒன்றை நடத்திக் கொண்டிருந்தது. பிரசுரிக்கப்படும் புகைப்படத்திற்குப் பொருத்தமாகக் கவிதை எழுதி அனுப்பும் அந்தப் போட்டியில் நானும் தொடர்ந்து பங்கு பெற்று வந்தேன். அப்போதெல்லாம் 'ஜானகி' என்ற என் அம்மா பெயரில் படைப்புகள் எழுதி வந்தேன்.

அமுதசுரபி கவிதைப் போட்டியில் அடுத்தடுத்து ஜானகியின் கவிதைகளுக்குப் பரிசுகள் கிடைத்தன. ஒரு வாசகர், 'ஜானகிக்கே தொடர்ந்து பரிசுகள் கிடைத்து வருகிறதே?' என்று ஒரு கடிதம் எழுதியிருந்தார். 'நாங்கள் கவிதையின் சிறப்பைத்தான் பார்க்கிறோம். எழுதியவர் யாரென்று பார்ப்பதில்லை. நீங்கள் கூடத் தொடர்ந்து சிறந்த கவிதைகள் எழுதினால் தொடர்ந்து பரிசு பெறலாம்' என்பதுபோல அமுதசுரபி விக்கிரமன், அந்த வாசகர் கடிதத்தைப் பிரசுரித்து, அதற்குக் கீழே ஒரு குறிப்பும் எழுதியிருந்தார். நான் பெரிதும் உற்சாகமடைந்தேன் என்பதைச் சொல்லத் தேவையில்லை.

பரிசு பெற்ற கவிதைக்குக் கீழே, எழுதியவர் பெயரோடு முழு முகவரியும் வெளி

விடப்பட்டு வந்தது. எழுத்தாளரை இயன்ற வரை அதிகம் கௌரவிக்க வேண்டும் என்ற விக்கிரமனின் ஆர்வத்தைத் தவிர, இந்த முகவரி வெளியீட்டின் நோக்கம் வேறெதுவுமில்லை. எழுத்தாளர் இருக்கும் ஊரில், அவரது வீதியில், பலர் அவரை அறிய முகவரி உதவும் என்பதும் உண்மைதான்.

ஆனால் இந்த முகவரி வெளியீட்டுக்கு விபரீதமான ஒரு விளைவும் இருக்கும் என்று யாரும் நினைத்துப் பார்த்திருக்க இயலாது. அந்த விளைவு விரைவிலேயே ஏற்பட்டது. என் அம்மா பெயரில் நான் கவிதைகள் எழுதியதால், என் தாயாருக்கு ஒரு காதல் கடிதம் வந்தது. 'கண்ணே' தொடர்ந்து பரிசு பெறுகிறாய். உன் கவிதை மணத்தால் நான் கிறங்கிப் போகிறேன். உன் காதலை யாசிக்கிறேன்..' என்று தொடங்கிப் பல அசட்டுப் பிசட்டு வரிகளோடு எழுதப்பட்டிருந்த அந்தக் கடிதம் எங்கள் குடும்பத்தில் அனைவர் முகத்திலும் முறுவலைப் படரவிட்டது. ஆறு குழந்தைகளைப் பெற்று வளர்த்த அப்போது அறுபது வயதைத் தாண்டிய மூதாட்டியான என் அம்மா, 'இந்தக் கடிதம் எழுதியவன் தலையில் விளக்குமாற்றால் நாலு போடு போட வேண்டியது தான்!' என்றார் சிரித்துக் கொண்டே. அந்தக் கடிதத்தை வாசித்த என் அப்பாவின் முகம் சிவந்தது. அது வெட்கத்தாலா, கோபத்தாலா, இல்லை பொறாமையாலா என்று இன்னமும் என்னால் அனுமானிக்க இயலவில்லை! கடிதத்தை மறுபடி மறுபடி வாசித்துப் பார்த்த அவர், இறுதியில், 'சே! எத்தனை எழுத்துப் பிழைகள்!' என்று சலித்துக் கொண்டார்!

என் தங்கை சாரதா பாலசுப்பிரமணியம கடும் சீற்றமடைந்தாள். அவள் அமுத சுரபிக்கு ஒரு கடிதம் எழுதினாள்:

'உங்கள் நோக்கம் சரிதான். ஆனால் வாசகர்களில் சிலர் பண்பாடில்லாமல் இயங்குகிறார்கள். ஆகையால் இனி எழுத்தாளர்களின் பெயரை மட்டும் வெளியிடுங்கள். முகவரியை வெளியிட வேண்டாம்.'

என் தங்கையின் கடிதத்தை வெளியிட்ட விக்கிரமன், 'இனி கவிதைப் போட்டியில் பரிசு பெற்றவர்களின் பெயர் மட்டுமே வெளியிடப்படும். முகவரி வெளியிடப் படாது!' என்று குறிப்பு எழுதியிருந்தார்.

ஆனால் பல ஆண்டுகள் வரை, அந்த 'ஜானகி' நான்தான் என்று விக்கிரமனுக்குத் தெரியாது. அண்மையில், சென்னை வானொலி முன்னாள் இயக்குனர் விஜய திருவேங்கடம் தலைமையில் நடைபெற்ற அமுதசுரபி விழா ஒன்றில் கலந்து கொண்ட போது இந்த விஷயத்தைச் சொன்ன நான், அந்த ஜானகி நான்தான் எனற ரகசியத்தையும் மேடையில் உடைத்தேன். விக்கிரமனுக்குச் சந்தோஷம் கலந்த ஆச்சரியம். 'உங்கள் அம்மா பெயரில் எழுதினேன் என்கிறீர்களே. பொதுவாக சுஜாதா, இந்திரா பார்த்தசாரதி என்று பலர் மனைவி பெயரில் தான் எழுதுகிறார்கள்!' என்றார் அவர். 'அப்போது எனக்குத் திருமணம் ஆகியிருக்கவில்லை. என்றாலும் நீங்கள் சொன்ன மரபிலேயே என் மனைவி பெயரில் நான் எழுதியதாகவும் வைத்துக் கொள்ளலாம்!' என்றேன். 'எப்படி?' எனக்கேட்டார் வியப்போடு.

'என் மனைவி பெயரும் ஜானகிதான். சாதாரணமாக மாமியாருக்கும் மருமகளுக்கும் பெயரளவில்தான் ஒற்றுமை இருக்கும். என் வீட்டில் பெயரளவிலும் ஒற்றுமை!' என்றேன் நான்.




''டி.வி. தொகுப்பாளினிகள் தமிழைச் சித்திரவதை செய்வதை நிறுத்தாவிட்டால் டி.வி. நிலையம் முன்பு தீக்குளிக்கப் போவதாக முனுசாமி என்பவர் அறிவித்துள்ளார்...!''

- உ. ராஜாஜி

# KALKI SHOPPING PAGE

## BKS TRADERS




GOLDEN JUBILEE YEAR

"தரத்திலும்-விலையிலும் நேர்மை" என்ற குறிக்கோளுடன் புதிய நூற்றாண்டில் - பொன் விழாவுடன் கைகோர்க்கிறோம்.

**B.K.S. TRADERS**

H.O. : 5/1, B.S.S. KOVIL St, VELLORE.
Ph : 233875, 232875
B.O. : 109, MUNDY St., VELLORE.
Ph : 228861, 221961

Free Door Delivery

## DVP

**D.V.P. Bakery**

Quality Cakes, Bread & Biscuits Manufacturers

Shop : 81, Long Bazaar,
Vellore - 632 004.
Phone : 220746

## பாரத் மியூசிகல் மார்ட்



சகலவிதமான இசைக் கருவிகள், சங்கீத புத்தகங்கள், கேஸட், மற்றும் கோவில்களுக்கு தேவையான மின்சார மங்கள வாத்தியங்கள் விற்பனைக்கும் ரிப்பேர் செய்யவும் சிறந்த இடம்.

**பாரத் மியூசிகல் மார்ட்**

103, லாங்கு பஜார்,
வேலூர் - 632 004.
கடை : 222135 வீடு : 217135

## நாகா ஜுவல்லரி

ஏ.சி. ஷோரூம்

எங்களது நகை சேமிப்புத் திட்டத்தில் சேர்ந்து காமாட்சி விளக்கு இலவசமாகப் பெற்றிடுங்கள்.

நெ. 46, மெயின் பஜார்,
வேலூர் - 632 004.
ஃபோன் : 232228/216716

# உழவு மாடு

ஈரக்காற்று சன்னமாய்த் தவழ்ந்தடித்தது. தொலைவில் எங்கோ 'திடுமுடு' வென்று மெலிதாய் உறுமும் சப்தம். அவனுக்கு 'முழிப்பு'த் தட்டிவிட்டது.

தூக்கக் கலக்கத்துடன் எழுந்து திண்ணையில் உட்கார்ந்தான். திண்ணையின் உள்ளீடற்ற வயிற்றுப்பகுதி - கோழிக் கூண்டில், 'வெடை'களின் வெருண்டல் சப்தம்! 'கொர்...' தாய்க் கோழியின் எச்சரிக்கைக் குரல். அவன் பதற்றத்துடன் திண்ணையை விட்டிறங்கி கூண்டின் திட்டி வாசலை நோட்டமிட்டான். சாத்துப் பலகை மூடித்தான் இருந்தது.

நேரம் என்னவென்று தெரியவில்லை. அண்ணாந்து மோக்காவெள்ளியைத் தேடினான். அகப்படவில்லை 'வண்டிமசி'யால் மெழுகியதுபோல், வானம் கன்னங்கரேல் என்றிருந்தது. மருந்துக்குக் கூட வெள்ளையைக் காணோம்! 'மழைக் கோப்பாயிருக்குமோ...?' அவனுக்கு, தூக்கச் சடவெல்லாம் சட்டென்று கலைந்து போயிற்று.

'பேயட்டும், பேயட்டும், பேயணும்!' மனசுக்குள் வேண்டுதலின் முணுமுணுப்பு. மறுபடியும் வானத்தைப் பார்த்த வேளையில் நெற்றியில் பட்டுத் தெறித்தது ஒற்றை மழைத்துளி. உடல் புல்லரித்தது. சட்டென்று ஒரு குதூகலம் உடம்பெங்கும் மின்சாரமாய்ப் பரவியது.

திண்ணையில் கம்பீரமாய் உட்கார்ந்து கொண்டான் உள்ளார்ந்த எதிர்பார்ப்புடன்!

வானத்தைத் தென்வடலாக வெட்டிப் பிளப்பது போல் மின்னல்... இராட்சஸ நெருப்புக் கோடு! காது செவிடாகிவிடும் போல் இடி முழக்கம். தெரு விளக்குகள் கண்ணை மூடிக்கொண்டன!

''போட்டும், மழை பேஞ்சா சரி!''

இருந்தாற் போல் காற்று திசை மாறி 'விரட்டி'யடித்தது.

''இதென்ன எழவு! காத்தடிக்கிற சிரப் பார்த்தா 'கோப்ப'க் கெடுத்திரும் போலுக்கே...!''

காற்றும் மழையும் - காற்றுதான் அதிகம் அடித்தது. திண்ணை விளிம்பு ஈரமாகத் தொடங்கியது.

'நனைஞ்சிருவமோ...?'

கதவைத் திறக்கச் சொல்லி உள்ளே போய் விடலாமென்று யோசித்தவன் மறு வினாடியில் எண்ணத்தை மாற்றிக் கொண்டான். 'வேணா அங்கிட்டுப் போனதும் மழை நின்னுட்டா? நனைஞ்சா நனையட்டும்!' நகர்ந்து சுவர் ஓரம் ஒடுங்கிக்கொண்டான். கோழிக் கூண்டில் இப்போது அரவமில்லை. குளிருக்கு அடக்கமாய் ஒடுங்கிக்கொண்டன போலும். திண்ணை, அவன் உட்கார்ந்திருந்த இடம் போக மீதியெல்லாம் நனைந்துவிட்டது.

'சனியம் புடிச்ச காத்து நின்னு தொலைக்க மாட்டுக்கே..' எரிச்சலுடன் பாயைச் சுருட்டி கூரை விளிம்பில் செருகிவிட்டு நின்றபடியே சுவரோடு சுவராய் ஒட்டிக்கொண்டான். முழங்கால் வரைக்கும் மழை இறைத்தது.

'மனுசப் பய நீசப் பயதாம்! வருசம் பூராம் அக்கிரமத்த (வெயில்) தாங்குவம்; செத்த நேரம் தருமத்த (மழை) தாங்க முடியாது. மொளைச்சா போயிருவமின்னு நிக்க முடியலயே...!'

காற்றின் வேகம் குறையவில்லை! ஆனால் மேகம் கலையாமல் அப்படியே தான் இருக்கிறது. எத்தனை நேரத்திற்கு?... இப்படியே காற்றடித்தால் 'அம்புட்டு'க் தான்!

அவனுக்கு மனசு விடத் தொடங்கியது. 'இதெதுக்கு? கேனத்தனம் மழையில நனைஞ்சிகிட்டு? இம்புட்டுப் பிரயாசப் பட்டும் மழை ஏமாத்திப்புட்டா? தூக்கங் கெட்டதுதான் மிச்சம். விடிஞ்சதும் நாயக்கருக்கு அருகு வெட்டப் போவணுமே...!

கோடையில் காரவிட்டு நாயக்கர் தான் அவர்களுக்குப் படியளந்து கொண்டிருந்தார். மேட்டுப் புஞ்சையில் 'அருகெடுப்பு' நெருதுளியாய் நடந்துகொண்டிருந்தது. மாடனையும் சேர்த்து நான்கு கை ஆட்களுக்குப் 'பதிவா' வேலை வாய்ப்பு! கோடைக்காலம் சம்சாரிகளுக்குரியது. பகல் பொழுது அதிகம். வேலையும் அதிகமாக வாங்கலாம். உழைப்புச் சக்தி மலிவாகக் கிடைக்கும் நேரம். பொதுவாக பஞ்ச காலத்தில்தான் வேலைகள் 'ஒழுங்காக' நடக்கும் என்பார்கள்! கரிசக் காட்டில் கோடை என்றால் பஞ்சம்தான். ஒழுங்கா வேலைகள் நடக்கும்! கட்டாத வீட்டைக் கட்டி முடிக்கலாம். வெட்டாத் கிணற்றை வெட்டி முடிக்கலாம். ஆகாதது ஒன்றுமில்லை கையில் ஓட்டமிருந்தால்!

கூலி சனங்களுக்கு...? பத்துக்கும் இருபதுக்கும் பகல் முழுவதும் உயிரைக் கொடுக்க வேண்டும். அதுவும் அருகெடுப்பு வேலை என்றால் 'நொறநாட்டியம்'தான். கொளுத்தும் வெயில் முதுகில் 'சட்டை' உரிக்கும். 'அதலபாதாளம்' வரை ஓடியிருக்கும் அருகரக்கனின் 'அடி'யைக் கண்டு பிடித்து நுனி முறியாமல் கிள்ளி எறிய இடுப்பு இற்றுப் போகும். கம்பி குத்துகிறவன் பாடு தேவலை! மம்பட்டி பிடிப்பவனுக்குத் தான் 'அத்தாவித்தி'யாகி விடும்.

இத்தனைக்கும் இடையில் உச்சி வேளையில் கருவை மரத்தடியில் கஞ்சி குடிக்கும் நேரம் சொர்க்கம்தான். கடினமான வேலைக்கு நடுவில் கிடைக்கும் சொற்பமான ஓய்வு இருக்கின்றதே, அதிலே 'இறை'யைத் தரிசிக்கலாம்!



''ஏண்டி வெளில போகும்போது எங்க போறீங்கன்னு கேட்காதேனு உன்கிட்ட எத்தனை முறை சொல்றது.''

''சரி வெளில போயிட்டு எங்க இருந்து வருவீங்க?''

— தேனி. பிரபு



அத்தனை பேரின் கலயத்திலும் வேறுபாடின்றி கம்மஞ்சோறுதான் இருக்குமென்றாலும் நீத்தண்ணி வேறு வேறு பக்குவத்திலிருக்கும் என்பதால் சுவையும் ஒவ்வொரு விதமாய்த்தான் இருக்கும். சிரட்டையில் உப்பு, சராங்கி வத்தல், துவையல் என்று நாலுவிதமாய் வெஞ்சனம்! வட்டமாய் உட்கார்ந்துகொண்டு கூட்டாஞ்சோறுபோல் ஒருவருக்கொருவர் 'நிரந்து' கஞ்சி குடித்தால் ஆகா... அந்த ருசியே அலாதிதான். குடிக்க குடிக்க தெவிட்டாது! சுவை மடங்காமலே வயிறு நிரம்பிவிடும். சுவை அனுபவிப்பதற்கு இன்னும் கொஞ்சம் வயிறு பெரிதாக இல்லையே என எண்ணத் தோன்றும்.

மரத்தடி சொர்க்கம் வரையறுக்கப் பட்டது. அரைமணிப் பொழுதில் இறுதி பெறும். பிறகுதான் இருக்கிறது சங்கதி!

குடித்த கஞ்சி தொண்டைக் குழியை விட்டுக் கீழிறங்குமுன் எழுந்து வேலையில் இறங்க வேண்டும். உண்ட மயக்கம். உடம்பு வணங்காது. குனிந்து மம்பட்டி பிடித்தால் கஞ்சி எதுக்கலிக்கும். வெயிலும் அப்போது தான் மிகவும் உக்கிரமாயிருக்கும். வியர்வை கொப்பளிக்கும். வாழ்க்கை வெறுக்கும். பெற்றவர்களை அவர்கள் செய்த 'தப்பை' பச்சையாக விமர்சித்து சபிக்கத் தோன்றும். ஒரு நாளைக்கு வீட்டில் இருந்து இளைப்பாறலாம் என்றால் வேலை பறிபோய் விடும். அதுக்குத்தான் 'நா வாரேன் வாக்கப்பட, எங்க அக்கா வாரா புள்ளையைத் தூக்க' என்று ஆட்கள் இருக்கிறார்களே!

சம்சாரிகள் தெருவில் ஏகதேசம் கெழடு கட்டைகள் மண்டையைப் போட்டால் ஒரு நாள் லீவு உண்டு. துட்டி சொல்ல, 'கட்டை' எரிக்க என்று பொழுது 'லாத்தலா' ஓடும். இரவு மயானத்தில் நின்றால் வயிறு முட்ட 'தண்ணி'யும் சாப்பாடும் உண்டு. எழவு விழுந்தால்தானே? மாடனும் அவன் 'கை'யாளும் ஊரிலுள்ள கெழடுகளை எல்லாம் கணக்கெடுத்துப் பார்த்துவிட்டுப் பெருமூச்சு விடுவார்கள். 'இப்பக்குள்ள ஒன்னும் 'சீட்டு' வாங்காது போலுக்கே...!'

மாடன் திண்ணையில் ஆந்தை போல் விழித்துக்கொண்டிருந்தான் அவன் எதிர்பார்த்தது போலவே காற்று சன்னஞ்சன்னமாய் அமர்ந்தது. மழை 'நின்னு பிடிக்க'த் தொடங்கியது. ஒரு பாட்டம் வெளுத்துக் கட்டியது! அவன் உள்ளத்தைப் போலவே

நிலமும் குளிர்ந்தது. இனி இரண்டு நாட்களுக்குக் கரிசக் காட்டில் இறங்க முடியாது. லீவுதான்! அட்னக்கால் போட்டுக் கொண்டு 'சாவடி'யில் 'பதினஞ்சாம் புலி' விளையாடலாம். ஊர்ப் பொரணி பேசலாம். சிரிப்பாணியும் கூத்தும்தான். கட்டு பீடி மடியிலிருந்தால் போதும் பொழுதுக்கும் கொண்டாட்டம்! நினைக்கும்போதே அவனுக்கு உற்சாகம் பீறிட்டது.

பழைய சாக்கை எடுத்து, திண்ணையின் ஈரத்தைத் துடைத்துவிட்டு, பாயைப் போட்டான். படுத்துக்கொண்டான் விரையல் எடுத்தது! இடுப்பு வேட்டியை அவிழ்த்து மூடிக்கொண்டான். 'இடுப்பு வேட்டியை இழுத்து மூடிக்கொண்டால் ஏழைக்கு மச்சு வீட்டில் படுத்தது போல் இருக்கும்' என்பார்கள். அவன் சுகமாய்த் தூங்கிப் போனான்!

பொழுது புலர்ந்தது. மாடன் எழுந்து திண்ணையில் உட்கார்ந்துகொண்டு, முற்றத்தில் தேங்கியிருந்த மழை நீரை வெறித்துக் கொண்டிருந்தான். மனத்தின் ஒரு மூலையில் சிறு ஊசலாட்டம் 'ரெண்டு நா வேலை போச்சே..'

மாட்டமின்னா சொன்னம்? ஏதோ மழையாப் பார்த்து, பாவம் ரொம்பத்தான் அலுத்துப் போயி கெடக்கே, ரெண்டு நாள் வீட்லயிருந்து இளைப்பாறு'ன்னு சொல்லுது. வரும்படி போக்குதாம்! அதுக்கென்ன செய்ய? ஏழைக்கு, இப்படி மழைத் தண்ணி பேஞ்சாத்தானே லீவு உண்டும்!

அவன் மனைவி உள்ளிருந்து வந்தாள்.

"விடியுமின்ன ஆம்பள முட்டக் கட்டிக்கிட்டு ஒக்காந்திட்டிருக்கிறே...!" அரை டம்ளர் 'காப்பித் தண்ணி'யைத் திண்ணையில் 'ணங்'கென்று வைத்துவிட்டு, அவனை வாயெடுக்க விடாமல் தொடர்ந்தாள்.

"வீட்ல வல்லிசா வெறவு கெடையாது! இந்த வெளிவுல வேலி மரத்த வெட்டிக் கொண்டாந்து வீடு சேர்க்கலாமில்ல? நான் சொல்லாம, நீராட்டு ஒரு வேலை செஞ்சமின்னு உண்டா...?"

அவனுக்கு விக்கலும் கக்கலுமாகி விட்டது. ஒன்றும் பேசவில்லை. மனக்கண்ணில் 'ஊர்ச்சாவடி'யும் பதினஞ்சாம் புலி ஆட்டமும் மின்னலாய்த் தோன்றி மறைந்தன. பகல்கனவு! ஏழைக்கு ஏது ஆடம்பரமும் மற்றொன்றும்...?

இரவு, மழை பெய்திருக்க வேண்டாமென்றுதான் அவனுக்குத் தோன்றியது! ○



## புன்னகைப் போட்டி; பொன்நகைப் பரிசு!

பதினைந்து மாதங்களுக்கு முன்பு இந்திய மண்ணுக்கு வந்த ஜிம்பாப்வே கிரிக்கெட் அணி, மீண்டும் இங்கு வந்திருக்கிறது. நம் அணி பற்றிதான் உங்களுக்குத் தெரியுமே? வாழ்த்துவதில் தலைமையிடம் பெற்றிருக்கும் நாம், அந்த அணியை அட்டகாசமாக வாழ்த்த வேண்டாமா? எடுங்கள் பேனாவை. தமாஷாக வாழ்த்தும் இரு வாசகங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு தலா நான்கு கிராம் தங்கம் பரிசு வழங்கப்படும். ஓகே....ரேடி....ஸ்டார்ட்!

## புன்னகைப் போட்டி - 3

### தமாஷ் வாழ்த்து

---

---

---

கூப்பன் அனுப்பும் உறையில் புன்னகைப் போட்டி - 3 என்று குறிப்பிட்டு கல்கி அலுவலகத்திற்கு அனுப்பவும். கடைசி தேதி: 11.3.2002. ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

பெயர்: ....................................

முகவரி: ....................................

....................................

....................................

....................................

# அழகாய்த் திறக்கும் அதிர்ஷ்டக் கதவு!

மறுபிறவி, புனர் ஜென்மம்... இதற்கெல்லாம் அர்த்தம் தெரிந்து கொள்ள வேண்டுமென்றால், வெள்ளி தோறும் இரவு ஒன்பது மணிக்கு ஸ்டார் ப்ளஸ்ஸில் 'குல் ஜா சிம் சிம்' மில் கலந்து கொள்வோரின் முக பாவங்களைக் கூர்ந்து கவனியுங்கள்.

'சொர்க்க வாசல் திறக்குமா? சொர்க்க போகம் கிடைக்குமா?' என்று மனம் படபடக்க, அந்த மந்திரக் கதவு மெல்லத் திறப்பதற்குள் ஒரு முறை மேலுலகத்துக்கே போய், தெரிந்த தெரியாத சாமிகளின் கதவையெல்லாம் தட்டி விட்டு வந்திருப்பார்கள். உள்ளே இருப்பது பூசணியா, வேறா என்று தெரிந்து கொள்ளு முன் அவர்கள் மடிந்து, வடிந்து, கடிந்து, பின்னர் ஒரு மாதிரியாக தெளிந்து நிற்கிறார்களே... அதற்குப் பெயர்தான் 'புனர் ஜென்மம்.'

இப்படி ஒரு ஹிட், 'தடக் தடக்' நிகழ்ச்சியைத் துணிகரமாக நடத்தி வெற்றி கண்டிருக்கும் 'ஆப்டிமிஸ்ட்டிக்ஸ்-ஸ்டார் இண்டியா' குழுவின் இயக்குனர்களான சஞ்சீவ் ஷர்மாவையும் விபுல்ஷாவையும் முதலில் சந்திப்போமா?

"வழக்கம்போல இதுவும் let's have a deal என்ற அமெரிக்க சரக்கின் இறக்குமதிதான். 'இதை இந்தியப்படுத்தி வழங்க ஸ்டார் தீர்மானித்ததும் எங்கள் கம்பெனியை (ஆப்டிமிஸ்டிக்ஸ்) நாடினார்கள். விபுல்ஷா






ஏற்கெனவே 'சல்தி கா நாம் அந்தாக்ஷரி' என்ற ப்ரோக்ராமை ஸ்டாருக்கு வழங்கிக் கொண்டிருந்தார்.

"ஒரு நிகழ்ச்சி 'க்ளிக்'காக தரமும் வெற்றியும் இணைய வேண்டும். அதற்குரிய பணத்தைச் செலவழிப்பதைப் பற்றி ஸ்டார்'காரர்கள் கவலையே படமாட்டார்கள். அதனால் ஒவ்வொரு விஷயத்திலும் எங்களால் அதீத கவனம் செலுத்த முடிந்தது" என ஆரம்பித்தார் சஞ்சீவ் ஷர்மா.

"முதலில், நிகழ்ச்சியில் கலந்து கொள்பவர்களைத் தேர்ந்தெடுக்கவென்றே தனி 'ஃபார்மாட்', பிரத்யேக 'ஸாஃப்ட்வேர்' எல்லாமே அமைத்திருந்தோம். பொது மக்கள் பூர்த்தி செய்யும் விண்ணப்பங்களைக் கம்ப்யூட்டரில்

ஃபீட் செய்து, ஒரே அலை வரிசையிலுள்ள 52 நபர்களைத் தேர்ந்தெடுப்போம். இவர்கள் பணப் பேய்களாக இருந்தாலும் பரவாயில்லை. ஆனால் உம்மணாமூஞ்சிகளாக இருக்கக்கூடாது. மகிழ்ச்சியோ, துக்கமோ, சலனமோ, அச்சமோ... எந்த உணர்வையும் பளிச்சென்று காட்ட வேண்டும்'' என்கிறார் விபுல் ஷா.

''ஐந்து லட்சம் போனாலும் கலங்காத கல் நெஞ்சக்காரர்களும், ஐந்தாயிரமே போதும் என்ற பொன் செய் மனமுடைய யதார்த்தவாதிகளும் எங்களுக்கு விருந்தினராக முடியாது. வெடித்துச் சிரிக்கவோ, துடித்துக் கதறவோ தெரிய வேண்டும். இண்டலிஜென்ட், ஸ்மார்ட் மனிதர்கள் குரோர்பதி ஷோவுக்கு ஏற்கலாம். எங்கள் ஷோவுக்கு எடுக்காது. ஒரு பெண்மணி, ஜில்லி ஜுவல்லரியின் வைர மோதிரம் கிடைக்காமல் போனதற்காக, காமிரா இயங்குவதையும் பொருட்படுத்தாமல், விசும்பி விசும்பி அழுதாரே... அந்த அம்மணிக்கு நாங்கள் 'great participant' விருது வழங்குவோம்'' என்கின்றனர் கோரஸாக இருவரும்.

"குல்ஜா..." வின் வெற்றிக்கு மற்றொரு தூண் அதன் 'ஆங்கரா'ன அமன் வர்மா. 'கியோன் கே... சாஸ்...' சீரியலில், அனுபம் கபாடியாவாக இவர் வெற்றி நடை போட்டுக் கொண்டிருந்த காலத்தில், அவரை இவர்கள் லபக்கி இருக்கிறார்கள்.

எந்த விளையாட்டுக்கு எதை பரிசளிப்பது? எந்தெந்த விளையாட்டுகளுக்கு எதுவரை ஆசை காட்டலாம்? (சிலருக்கு 50,000 வரை போகிறார்கள். சிலருக்கு 10,000யிலேயே நிறுத்தி விடுகிறார்களே?) என்பதற்கெல்லாம் முன் கூட்டியே மண்டையை உடைத்துக் கொள்ள மனீஷா இரிபாதி தலைமையிலான ஒரு குழு, சஞ்சீவ் ஷர்மாவுடன் இணைந்தியங்குமாம்.

"ஒவ்வொரு எபிசோடும் ஒரு சாதனைதான். எட்டுக் காமிராக்களை நிறுத்தி, 360 கோணத்தில் அந்த மூடிய கதவுகள் திறப்பதைப் படமெடுப்பதென்பது, டெக்னிகலாக ஒரு பெரிய வெற்றிதான்'' என்பவர்கள், சோதனைகளையும் விவரிக்கிறார்கள்.

"கதவு திறப்பதை மிக மிக நாசூக்காக செய்ய வேண்டும். முதல் முறை சற்றுத் துரிதமாகச் சுழற்றிவிட்டதால், கதவு திறந்ததும், மாடலழகி தலை குப்புற விழுந்திருக்க, அவர் கையிலிருந்த மொபைல் ஃபோன் மட்டும் மேலே தனியாக காட்சி தந்தது'' என்று சிரிக்க வைக்கிறார்கள்.

ஒவ்வொரு முறையும் யாரை ஸ்டார் விருந்தினராக அழைப்பது என்பதில் பிரச்னையே இல்லையாம். "உங்கள் மாதவன் கூட வந்திருக்கிறார்'' என்ற விபுல் ஷா, "நான் 'மின்னலே'வுக்கும், இன்னும் சில தமிழ்ப் படங்களுக்கும் வசனம் எழுதியிருக்கிறேன்'' என்றொரு ஆர்.டி.எக்ஸ். வீசினார். நல்லவேளை, நாம் மயங்கி விழுமுன், 'அதன் இந்திப் பதிப்புகளுக்கு' என்று திருத்திக்கொண்டார்.

- ஜெயஸ்ரீ ராஜ்

★ சஞ்சீவ் ஷர்மா, விபுல் ஷா

# முதலை விடுகிற கண்ணீர்!

ஆண்டிப்பட்டி அமர்க்களங்களிலிருந்து கொஞ்சம் அந்தண்டைதான் போகலாமே என்று ராஜ் டீவிக்காரர்களுக்குத் தோன்றியது போலிருக்கிறது. மக்களின் பட்டினிப் பிரச்னையை விட்டு விட்டு முதலைகளின் பட்டினியை அலசினார்கள்.

சென்னை முதலைப் பண்ணையில் இருக்கும் மூவாயிரம் முதலைகளுக்குச் சாப்பாடு போட்டுக் கட்டுப்படியாகவில்லையாம். வாரத்துக்கு இரண்டு நாள்தான் உணவு போடுகிறார்களாம். (அது கூட முழு வயிற்றுக்கோ அரை வயிற்றுக்கோ, தெரியவில்லை) ஒரு கவளம் வீசியெறியும்போது பயங்கரமாய் வாயைப் பிளக்கின்றன. அரசிடமிருந்தோ தனியாரிடமிருந்தோ நிதியுதவி கிடைக்காததால் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தை அமுல்படுத்தப் போவதாக முதலைப் பண்ணை நிர்வாகி தெரிவித்தார். அதாவது, இனப் பெருக்கத்தை நிறுத்தி விடப் போகிறார்களாம். If you plan for the worst the good will always take care of itself என்பது அவருடைய நம்பிக்கை.

பாவம், முதலைகள். அவற்றிற்கு இருந்த ஒரே சந்தோஷமும் போய் விட்டது. அவை கண்ணீர் வடிப்பதைச் செய்திப் படத்தில் காண முடிந்தது. முதலைக் கண்ணீர் அல்ல. அசல் கண்ணீர்.

ஓட்ட ஓட்டமாகப் பால்கனிக்கு வந்து அவசர அவசரமாக ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்து கொள்கிறாள் அந்தப் பெண். பக்கத்து அறையில் உள்ள தோழிக்கு, 'வா, வா! சீக்கிரம் வா!' என்று குரல் கொடுத்து விட்டு, பைனாகுலரைப் பொருத்திக் கொண்டு எதிர் வீட்டு மாடியைப் பார்க்கிறாள். ஆனந்தமும் பிரமிப்புமாக 'வாவ்!' என்று கூச்ச விட்டு நாற்காலியோடு மல்லாந்து விழுகிறாள்.

தோழியும் வேகமாக வந்து அதேபோல் பைனாகுலரில் பார்த்து, அதே போல் 'வாவ்!' என்றபடி விழுகிறாள்.

கன்னியரை அசரவைத்த காட்சி என்னவெனில், அந்த எதிர் வீட்டு வராந்தாவில் ஒரு வாலிபன் உலாத்திக்கொண்டிருக்கிறான். அந்தக் கட்டழகனின் முக்காலே மூன்று வீச நிர்வாணத் தோற்றத்தில் மயங்கிக் கிறங்கி இவர்கள் விழுகிறார்களாம். பல சேனல்களில் காட்டப்பட்டு வரும் ஒரு ஜட்டி விளம்பரம் இது.

ஒன்றுமில்லாத பிரச்னைக்கெல்லாம் கூச்சல் போடும் பெண்ணுரிமை அமைப்புக்கள் இந்த அசிங்கமான விளம்பரத்துக்கு ஏன் ஆட்சேபம் தெரிவிக்கவில்லை? Woman is at best a contradiction still என்று அலெக்ஸாண்டர் போப் பாடியது சரிதான் போலிருக்கிறது.

அரிகிரி: கச்சேரி நடந்து கொண்டிருக்கும்போது எழுந்து போகிறவர்களைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

சுதா ரகுநாதன் : சங்கடமாகத்தான் இருக்கும். நான் பாட்டில் மட்டுமே கவனம் செலுத்துவதால் அதைப் பொருட்படுத்துவதில்லை. வெளிநாடுகளில் இந்தப் பிரச்சினை கிடையாது. நிகழ்ச்சி ஆரம்பித்தவுடனே ஹாலில் எல்லாக் கதவுகளையும் மூடி விடுகிறார்கள். கச்சேரி முடிந்த பிறகுதான் திறக்கிறார்கள்.

பாடுகிறவர் சுதா ரகுநாதனாக இருக்கும்பட்சத்தில் கதவைச் சாத்தித் தாளிடத் தேவையில்லை. ஆனால் கதவை உடைத்துக் கொண்டு வெளியே பாயும்படி செய்யக்கூடிய பாடகர்களும் உண்டே? Life is good only when it is magical and musical.

பஞ்சாப்பின் பசுமைப் புரட்சி தேசப் பிரசித்தம். இந்திய மாநிலங்களிலேயே அதுதான் செழிப்பான, பணம் கொழிக்கும் பூமி. ஆனால் பஞ்சாபியர்கள் பலர் விரலுக்கு மிஞ்சிய வீக்கத்துடன் வாழ முற்பட்டு, கடனில் மூழ்கி, தோல்வியடைந்து, தற்கொலை செய்து கொள்கிறார்களாம். புள்ளி விவரங்களுடன் இந்தச் சோகக் கதையைச் சொன்னார்கள் ஸ்டார் நியூசில். If you spend money when you still have debts you are spending other people's money, என்பதை உணராதவர்கள் இவர்கள்.

'கடன் வாங்கி டிராக்டர் வாங்குகிறார்கள். பிறகு கடனை அடைப்பதற்காக டிராக்டரை அடி மாட்டு விலைக்கு விற்கிறார்கள்', என்றார் ஒரு கிராமவாசி. பஞ்சாப் பல்கலைக்கழகத்தில் பேராசிரியராகப் பணியாற்றும் கோபால் ஐயர் என்பவர், 'இது இவர்களுக்குக் கௌரவப் பிரச்னையாக இருக்கிறது. வீட்டுக் கதவில் ஜப்தி நோட்டீசை ஒட்டினாலும், பத்துப் பேர் முன்னிலையில் கடன் கொடுத்தவர் சப்தம் போட்டாலும், மானம் போய் விட்டதாகக் கருதித் தற்கொலைக்குத் துணிகிறார்கள்', என்றார்.

Experience is a good teacher, but the school fees are heavy என்றார் ஒரு ஞானி.

**வினோத்**



# ஸ்ரீ அன்னை பொன்மொழிகள்



## உள்ளே உள்ள தெய்வத்வம்

ஒருவனது கடந்த காலம் எப்படி இருந்த போதிலும் அவன் எவ்வளவுதான் தவறுகள் செய்திருந்தாலும் எவ்வளவு அஞ்ஞானத்தில் வாழ்ந்திருந்த போதிலும், அவனது உள்ளத்தின் ஆழத்தில் ஒருமிக உன்னதமான தூய்மை உள்ளது. அது அற்புதமான ஒரு சித்தியாக மலர்ந்து வெளிப்பட முடியும். தன்னுடைய கஷ்டங்கள், தடைகள், இன்னல்கள், இடையூறுகள் இவைகளைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிராமல் அந்த உன்னதத் தூய்மை மீது ஒரு முனைப்படுதல், அதைப் பற்றியே சிந்தித்தல் - இதுவே தெய்வத்வம்.

## கைவிடாத தோழன்

நீ தனியாக விடப்படவில்லை என்பதை எப்போதும் நினைவிற்கொள். இறைவன் உன்னுடன் இருக்கிறான், உனக்கு உதவிக் கொண்டும் உன்னை வழி நடத்திக் கொண்டும் இருக்கிறான். உன் அருகிலிருந்து ஆறுதலளித்துக் கொண்டும் வலுவூட்டிக் கொண்டும் இருக்கும் நண்பன் அவன். அவனிடம் நம்பிக்கை வை. அவன் உனக்கு எல்லாம் செய்வான். இவனே கைவிடாத தோழன்.

தகவல்: திருமதி ராணி, ஈக்காட்டுதாங்கல், சென்னை.

# காலம்

வடக்குச் சாலை
முக்கில் முளைத்திருந்த
முன்பின் அறியாத
செடியின் பூவில்
பார்த்திருக்கிறேன் உன்னை.

துரத்தல்களுக்குத் தப்பி
தூக்கம் கலைக்கும்
ஒற்றை ஈயாய்
தொல்லைப் படுத்தும்
உன் நினைவால்
விழித்துக் கிடக்கிறது மனது.

போவதும் வருவதும்
போவதும் வருவதுமாய்
ஓடிக் களைத்த எண்ணங்கள்
இளைப்பாற நினைத்தது
உன் மடியில்.

மனநோயாளி வரைந்த
சித்திரமாகிவிட்டது காதல்.
இடியாப்பம் கொண்டு
பொட்டலம் கட்டும்
முயற்சியாய் முடிந்தது எல்லாம்.

உதிர்ந்து விழும்
ஈசல் இறகுகளாய்
தரை நிரப்பும்
கனவுகளைப்
பொறுக்க முடியாமல்
கழிகிறது காலம்.

ரா. சுந்தரமூர்த்தி

# வேலூர் பிட்ஸ்

### வேலப்பாடி

ஐந்திணைகளுள் ஒன்றான முல்லை நிலத்து ஊர்களுள் 'பாடி' என்பது ஒரு வகை. வேல மரம் நிறைந்த காட்டில் உருவானது வேலப்பாடி. நாளடைவில் காடு நாடாயிற்று. வேலப்பாடி அருகே வேலூர் உருவாயிற்று. படிப்படியாக நகரம் என்னும் நிலையை அடைந்தது. கோட்டை கொத்தளங்கள் உருவாயின. நகரம் விரிவடைந்தது. இப்பொழுது பழைய வேலப்பாடி வேலூர்க் கோட்டைக்குத் தென்கிழக்கே ஏறத்தாழ நான்கு கி.மீ. தொலைவில் உள்ளது. வேலமரங்கள்..? அவற்றைத்தான் காணோம்.





### விடுதலைப் போருக்கு விதையூன்றிய வேலூர்.

பள்ளி, கல்லூரி வரலாற்றுப் பாடநூல்களில் முதல் சுதந்திரப் போர் 1857-ல் மீரட்டில் நடந்த சிப்பாய் கலகம் என்று இன்று குறிப்பிடப் பட்டுள்ளது. ஆனால் அதற்கு ஐம்பதியோரு ஆண்டுகளுக்கு முன்பே வேலூர் கோட்டையில் இருந்த சுதேசிப் படை வீரர்கள் 1806ஆம் ஆண்டு ஜூலை பத்தாம் நாள் இரவு வெள்ளை ராணுவ அதிகாரிகளை எதிர்த்துப் பெரும் கலகத்தில் ஈடுபட்டனர். வெள்ளையர்களைக் கொன்று குவித்து 'சதே ஐதர்' என்பவர் தான் வேலூர் அரசன் என்று அறிவித்தனர்.

- நா. தண்டபாணி, அம்பல்.

### பொய்த்த பழமொழி

அரசனில்லாக்கோட்டை, ஆண்டவனில்லா ஆலயம், நீரில்லாத ஆறு, அதிகாரம் இல்லாத போலீஸ். இது வேலூரைப் பற்றிய பழமொழி. ஆனால் இன்று, கோட்டையில் ஆட்சி அதிகாரமும், நிர்வாக அதிகாரமும் படைத்த பல அரசு அலுவலகங்கள் இயங்குகின்றன. நீரில்லாத ஆறு என்று பார்வைக்குத்தான் தெரிகிறதே தவிர வேலூருக்குக் குடிதண்ணீர் வழங்கும் ஆழ்குழாய்க் கிணறுகள் பல, பாலாற்றிலேயே போடப்பட்டுள்ளன. மழைக்காலங்களில் வெள்ளமும் வருகிறது. போலீஸ் பயிற்சிக் கல்லூரியில் பயிற்சி பெறும் காவலர்களுக்கு இப்போது அதிகாரம் உண்டு. தேர்தல் நேரம், வெள்ளம், புயல் போன்ற காலங்களிலும் பொதுமக்களைப் பாதுகாக்கிறார்கள்.

### கல்யாண மண்டபம் கடத்தல்!

வேலூர் கோட்டை ஜலகண்டேஸ்வரர் ஆலயத்தில் உள்ள கல்யாண மகாலின் சிற்ப அழகு, வெள்ளை ஆட்சியர் கண்களை உறுத்தியது. விளைவு! மண்டபத்தின் நாற்பது தூண்கள், மணமேடை, விதான வேலைப்பாடுகள் மிக்க கூரை போன்றவற்றைத் தனித்தனியே பிரித்து லண்டனில் உள்ள பிரிட்டன் காட்சியகத்திற்கு எடுத்துச் செல்ல திட்டமிட்டனர். இதற்காகத் தூண்களுக்கு எண்களைக் குறித்து வைக்க திட்டம் தீட்டினார் அன்றைய வெள்ளைத் தளபதி. ஆனால் இதற்கென்றே லண்டனிலிருந்து வரவழைக்கப்பட்ட கப்பல், வழியிலேயே மூழ்கிவிட்டது. இதனால் கல்யாண மண்டபக் கடத்தல் தோல்வியுற்றது!

- ஏ.கே.சேஷாத்ரி, வரலாற்று ஆராய்ச்சியாளர்

## விக்ரகமாய் இல்லாத விநாயகர்!

வேலூர் நகரைச் சுற்றி படவேடு, விரிஞ்சிபுரம், இரத்தினகிரி, வள்ளிமலை என பல திருத்தலங்கள் இருந்தாலும், மத்தியப் பேருந்து நிலையத்திலிருந்து சுமார் இரண்டு கி.மீ. தொலைவில் இருக்கும் சேண்பாக்கம் பிள்ளையார் கோவில் மிகப் பிரசித்தமானது.

# பொய்! பொய்!!

முப்பது வருடங்களுக்கும் மேலாக இங்கிருக்கும் இக்கோவிலில் கூரையோ, விக்ரகங்களோ கிடையாது. ஓம் என்று எழுத்து வடிவில் அமைக்கப்பட்டுள்ள மூர்த்தங்களில், பிள்ளையார் உருவம் சுயம்புவாய்த் தோன்றி வளர்வதாக ஐதீகம்.

**- தி.ராம்பாபு, சென்னை - 64**

## 'பொய்' அல்ல நிஜம்!

வேலூரிலிருந்து பெங்களூர் செல்லும் சாலையில் பேருந்தில் பயணம் செய்தால் நடத்துனர் பொய்! பொய்! என்று கத்துவார். உடனே பயணியோடு நடத்துனர் தகராறு செய்கிறார் என்று தவறாக எண்ணிவிடாதீர்கள். பொய் என்கிற கிராமத்தில் இறங்குகிறவர்கள் இருந்தால் எழுந்து வாருங்கள் என்று அர்த்தம்.

**- ஜி.ஜி.சரோ**

## ஜலவலம்!

ஒவ்வொரு தமிழ் மாதமும், முதல் தேதி அன்று காலை 6.30 மணிக்குத் தொடங்கி ஸ்ரீ ஜலகண்டேசுவரர் கோயிலில் நடைபெற்று வருகிறது ஜலவல நிகழ்ச்சி. இதன் முக்கிய நோக்கம், நாட்டில் பஞ்சமில்லாத நீர்வளம் பெருக வேண்டும்; குடி தண்ணீர் பஞ்சம் அறவே நீங்க வேண்டும் என்பது.

இந்த நிகழ்ச்சிக்காக யாரிடமும் வசூல் செய்வது கிடையாது. நிகழ்ச்சியன்று காலை 6.30 மணிக்கு கோவில் முகப்பில் அமைந்துள்ள வலம்புரி விநாயகர் முன்பு பூஜையுடன் ஆரம்பித்து, கோட்டை அகழியைச் சுற்றி வலம் வருகிறார்கள். ராஜகோபுரம் படிக்கட்டிலிருந்து வலம்புரி விநாயகர் வரை கற்பூரம் வைத்து ஜோதி தரிசனம் செய்தபின் ஜலவலம் நிறைவடைகிறது.

**- ராஜன், வேலூர்**

## வெள்ளி ரதம், தங்க ரதமானது!

வேலூர் கோட்டையிலுள்ள ஜலகண்டேசுவரர் கோவிலுக்கு ரூ.60 லட்சம் செலவில் தங்க ரதம் உருவாக்கும் பணி விறுவிறுப்பாக நடந்து வருகிறது. மைசூர் தேக்கு மரத்தைப் பயன்படுத்தி முதலில் மர ரதம் செய்யும் பணி முடிந்துவிட்டது. இனி 350 கிலோ செப்பு தகடுகள் பதிக்கப்பட்டு அதற்கு மேல் 10 கிலோ தங்க முலாம் பூசப் போகிறார்கள்.

13 1/2 அடி உயரம், 7 1/2 அடி நீளம், 5 அடி அகலத்தில் செய்யப்படும், இந்த ரதம், முதலில் வெள்ளி ரதமாகத்தான் செய்வதென்று திட்டம் தீட்டப்பட்டதாம். ஆனால் பக்தர்கள் காணிக்கைகளை வாரி வழங்க, வெள்ளி தங்கமானது.

**- முத்து ஆனந்த், வேலூர்**

## அனுமதி நஹீ!

வேலூர் கோட்டைக்குள் மொத்தம் ஐந்து சிறு அரண்மனைகள் இருக்கின்றன. இவற்றை மஹால்கள் என்று அழைக்கிறார்கள். இவற்றில் பாஷா மஹால், பேகம் மஹால் ஆகிய இரண்டும் இன்று தொல்பொருள் ஆய்வுத்துறையின் அருங்காட்சியகம் ஆகிவிட்டன. கண்டி மஹால் தற்போது பதிவாளர் அலுவலகம். ஹைதர் அலி, திப்புசுல்தான் இருவரின் பெயராலும் உள்ள மஹால்கள் இன்று திப்பு ஜெயிலாகிவிட்டது. இங்கே இன்னும் பல விடுதலைப் புலிகளைச் சிறை வைத்திருக்கிறார்கள். பத்தாண்டுகளுக்கு முன்பு சுரங்கம் தோண்டி விடுதலைப்புலிகள் தப்பித்துச் சென்றதும் இதே சிறையிலிருந்துதான். மிகுந்த கலையழகுடன் உள் அலங்காரம் செய்யப்பட்ட இந்த மஹால்கள், இன்று விடுதலைப் புலிகளின் சிறையாகச் செயல்படுவதால், பொது மக்களுக்கு அனுமதி நஹீ!

**- பி.எஸ். சுப்ரமண்யம்**



# நம் தோட்டத்திலும் மல்லிகைகள்

**வ**ழக்கத்திற்கு முரணாக மாலைப் பொழுது நிசப்தமாக இருந்தது. அந்த மௌனத்தில் நான் காப்பி ஆற்றுவதுகூட ஏதோ மழை பெய்வது போன்றதொரு ஓசையை ஏற்படுத்தியது. எப்போதும் போன்ற ஒரு மாலையாக இதுவும் இருந்திருந்தால், அசோக் என்னை வம்பிற்கு இழுப்பது, குழந்தையுடன் விளையாடுவது, ஃபோனில் தாத்தா பாட்டியுடன் அரட்டையடிப்பது, பக்கத்து வீட்டு டைகருடன் பந்து பிடித்து விளையாடுவது என வீடே கலகலப்பாக இருக்கும். கடந்த ஒரு வாரமாகவே மாலைகள் இப்படித்தான், சீக்கிரமே இருண்டு விடுவது போல அமைதியாகத் தேய்கின்றன. நந்தினி கூட 'ஏம்பா விளையாட வர மாட்டேங்கற?' என அசோக்கிடம் கேட்டுக் கேட்டு ஓய்ந்து விட்டது. எங்களுக்குள் நடக்கும் ஊமை நாடகம் அதற்கென்ன தெரியும் பாவம்!

போன வாரம் நானும் அசோக்கும் மாத சாமான்கள் வாங்க சுபிக்ஷா அலமாரிகளைக் குடைந்து கொண்டிருந்தபோதுதான் உமேஷைப் பார்த்தோம். கல்லூரி நண்பன் என்று அறிமுகப்படுத்தி வைத்தார். பரஸ்பர புன்னகைகள் பரிமாறிக்கொண்டோம். 'என்ன பண்றே? எங்கே வேலை?' என்ற கேள்வியில்தான் பிரச்னை முளைவிட்டது. படிப்பில் சுமாராக இருந்த உமேஷ், இன்று துபாயில் கைநிறைய சம்பாதிக்கிற வேலையில், அவர் குடும்பம் மொத்தமும் இந்தியாவில் இருக்க, இரண்டு வருடத்துக்கு ஒருமுறை வந்து போவாராம். அவர் குடும்பத்தையும் அறிமுகப்படுத்தி, எங்களை வீட்டிற்கு அழைத்தார். விஷயம் அதோடு நின்றிருந்தால் பரவாயில்லை.

அசோக்கின் சம்பளம், இத்யாதிகளை விசாரித்தபிறகு அவருடைய முகம் என்னவோபோல் ஆகிவிட்டது. "என்ன அசோக் இவ்வளவு திறமையை வெச்சுகிட்டு ஏன் இப்படி அடிமாட்டுச் சம்பளத்துக்கு வேலை பார்க்கறே? அங்கெல்லாம் உன்னைப் போல ஆளுங்களுக்கு என்ன டிமாண்ட் தெரியுமா? அந்தச் சம்பளம் எல்லாம் இங்க காலத்துக்கும் குப்பைக் கொட்டினாலும் கிடைக்காது" என்றார். உமேஷ் அதோடு விடாமல், "நீ மட்டும் ஓகேன்னு சொல்லு, அடுத்த தடவை எங்க கம்பெனிக்கே உன்னையும் கொத்திட்டுப் போய்டறேன்" என்றார்.

துபாய் வாழ்க்கை தரும் சொகுசை எண்ணி கனவிலேயே கரையைக் கடந்துவிட்டார் அசோக். குடும்பத்தை விட்டுவிட்டு அவர் சம்பாதிப்பதற்காகப் பிரிந்து செல்வதில் எனக்குத் துளியும் விருப்பம் இல்லை. அந்தப் பேச்சை ஆரம்பித்ததிலிருந்துதான் இருவருக்கும் வாதம், பிரச்னை. ஒரு வாரமாக சரியாகப் பேசுவதுகூட கிடையாது. திருமணம் முடிந்து இவ்வளவு வருடங்களில் இதுபோல ஒரு முறையும் நடந்ததில்லை. மௌனம் தந்த வலி மனத்தில் உறுத்தியது.

எண்ணங்களுடன் கலந்த காபியை அசோக் முன் வைத்தேன்.

வெள்ளைத்தாளில் ஏதோ கணக்குப் போட்டுக் கொண்டிருந்தார். கிட்டே பார்த்த பொழுது, ஏதோ வரவு செலவுக் கணக்கு போல பெரிய பெரிய இலக்கங்களாய் நிரம்பியிருந்த காகிதத்தை என் முன் நீட்டினார். பேசாமல் பார்த்துக்கொண்டிருந்தேன்.

"கிட்டத்தட்ட ஆறு வருஷ சம்பளம், இரண்டே வருஷத்துல தரான்" என்று அதை மொழி பெயர்த்தார்.

"அதுக்காக எங்களையும், வீட்டையும் பிரிஞ்சு இருக்கணும். அந்த கணக்கையும் போடுங்க பக்கத்துல" நிதானமாகத்தான் சொன்னேன்.

"சும்மா சும்மா பேசினதையே பேசாத லலிதா, நான் உனக்காகவும் நந்துக்காகவும் தானே போறேன். நாளைக்கு நந்தினி என்னை ஒன்றும் செய்ய ஆகாதவன்னு நினைக்கக் கூடாது. அவ ராணி மாதிரி வாழணும்."

"ஒண்ணும் நினைக்க மாட்டா. எது ராஜ வாழ்க்கை? பணத்துல இழைக்கறதா? நீங்க தினம் ஒரு மணி நேரமாவது அவளோட இருக்கீங்க பாருங்க, அவளுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்து, கதை சொல்லி, அவளை அரவணைச்சு, நல்லது கெட்டதைச் சொல்லி, அதெல்லாமே போதும், அவளே நல்ல

வாழ்க்கையை அமைச்சுக்க..." - அசோக் சமாதானமாகவில்லை.

"இப்போ என்னதான் சொல்றே கடைசியா?"

"எங்களால முடியாதுங்க. தனியா இரண்டு வருஷம் முடியவே முடியாது. நீங்க பத்து நிமிஷம் ஆபிஸிலிருந்து லேட்டா வந்தாலே நந்தினி என்னைத் துளைச்சு எடுக்கறா, அப்படி நம்மையெல்லாம் பிரிச்சு, அதிலிருந்து கிடைக்கிற பணம் நமக்கு வேண்டவே வேண்டாம்" இந்த முறை குரல் கரகரத்தது.

ஏதோ சொல்ல வாயெடுத்தார். அதற்குள் நந்தினியின் பள்ளி ரிக்ஷா ஓசை கேட்க இருவரும் தற்காலிகமாக தர்க்கத்தை நிறுத்தினோம். கல்யாணமானவுடன் இருவரும் சேர்ந்து எடுத்த பல தீர்மானங்களில் "குழந்தைக்கு எதிரில் சண்டை போடக் கூடாது" என்பதும் ஒன்று.

"உமேஷ் நம்பளை ஃபாமிலியோட வீட்டுக்கு வரச்சொல்லி மத்தியானம் ஃபோன் பண்ணினான். சொல்ல மறந்துட்டேன்" என்றார் அசோக்.

உமேஷ் வீட்டைக் கண்டுபிடிப்பது அவ்வளவு சிரமமாக இல்லை. அழைப்பு மணியை அழுத்திவிட்டு காத்திருக்க, காக்கி உடை அணிந்த ஒரு ஆசாமி கதவைத் திறந்து 'யார் வேண்டும்?' என்றான் ஹிந்தியில். சொல்லிக் கொண்டிருக்கும்போதே உமேஷ் பால்கனியிலிருந்து எட்டிப் பார்த்து "வாங்க வாங்க, உங்களைத்தான் எதிர்பார்த்துட்டிருந்தேன்" என்று வரவேற்றதும் கூர்க்கா புரிந்து கொண்டவன் போல எங்களை உள்ளே அனுமதித்தான்.

வீட்டின் உள்ளே சுவரிலும் தரையிலும் பணம் சலவைக் கற்களாய்ப் பளபளத்தன. உட்கார்ந்தவுடன் சோபா புதைகுழி கணக்காக உள்ளே இழுத்துச் சென்றது. அதில் குதிக்க முற்பட்ட நந்தினியைப் பார்வையால் அடக்கினேன்.

உமேஷின் மனைவி நகைக்கடை விளம்பரப் பெண் போல வந்து நின்றாள். பின்னால் அவள் தலைப்பில் ஒளிந்துகொண்டு ஒரு சின்னப்பெண் அழகாக குண்டு கன்னத்தோடு சிரித்தது. தலையைச் சாய்த்து அதைப் பார்க்க முயன்றேன். இன்னும் பதுங்கிக்கொண்டது. கை நீட்டி, 'வா' என்றேன்.

தயங்கித் தயங்கி வந்து நின்றது. 'உன் பேர் என்னம்மா?' என்றேன், 'வந்தனா' என்றாள் உமேஷின் மனைவி.

"என்ன க்ளாஸ் படிக்கறே வந்தனா?"

"பஸ்ட் ஸ்டாண்டர்ட்" இப்பொழுதும் அவள்தான் முந்திக்கொண்டு பதில் சொன்னாள்.

உமேஷின் மகள், நந்துவைவிட ஒரு வயது பெரியவள் என்று அசோக் சொன்னதாய் நினைவு. ஆனால் அவளைவிட குறைவாகப் படிக்கிறாள்? மேலே கேட்கப் பிடிக்கவில்லை. அவர்கள் மனம் புண்படக் கூடும். இந்தப் பேச்சை ஆரம்பித்திருக்கவே வேண்டாம்.

என் சங்கடம் அவர்களையும் தொற்றிக் கொண்டது. உமேஷ், "இவ ஒரு வருஷம் ஸ்கூலுக்கு ஒழுங்காவே போகலை. ரொம்ப ஸிக்கா இருந்தா. அதனால இன்னொரு வருஷம் படிக்கட்டும்னு அவங்க ஸ்கூல்ல ஃபீல் பண்ணாங்க அதான்" என்று இழுத்தார். சட்டென்று பேச்சை மாற்றி, "வீட்டைச் சுற்றிப் பார்க்கலாமே" என்றார் அசோக். எழுந்து கொண்டோம்.

ஒவ்வொரு அறையும் கச்சிதமாக மிக மிக அழகாக இருந்தது. நன்றாக யோசித்து, அதைவிட தாராளமாக செலவு செய்து கட்டியிருக்க வேண்டும்.

தோட்டத்திற்கு வந்ததும் மூவரும் அசந்து நின்று விட்டோம். வெவ்வேறு நிறங்களில் ரோஜா செடிகள் அழகாகப் பதியனிடப்பட்டு, பூத்துக் கொண்டிருந்தன. எனக்குப் பொதுவாகவே பூச்செடிகள் பிடிக்கும். ரோஜா என்றால், கேட்கவே வேண்டாம். "ரொம்ப அழகா இருக்கு. எங்க வாங்கினீங்க?" என்றேன் கண்கள் விரித்து.

"இது இம்போர்ட்டட் வகை. போன தடவை இவர் வந்திருந்தபோது பெங்களூர் போயிருந்தோம். அங்க வாங்கினது. இதுக்குன்னு தனி உரம், மருந்தெல்லாம் போடணும். அதுக்கே மாசம் ஐந்நூறு ரூபாய் பக்கம் ஒடிடுது" சாதாரணமாகச் சொன்னாலும், சொன்னவிதம் மனசை இலேசாக அழுத்தியது.

"எங்க வீட்லையும் ரோஜா இருக்கே" நந்தினி சொன்னாள்.

"அப்படியா என்ன வெரைட்டி?"

"அது சாதாரண நாட்டு வகை. எங்கேயோ

---



உலகிலேயே மிக உயரமான நாடான திபெத்தில் பத்திரிகைகளே வெளி வருவதில்லை. காரணம் பத்திரிகையில் வெளியிடும்படியான பரபரப்பான விஷயம் ஒன்றும் நடைபெறுவதில்லை. திபெத்தியர் ஒவ்வொருவருக்கும் பல பெயர்கள் உண்டு. காரணம் நோயுற்று குணமானதும் திபெத்தியர் தங்கள் பெயரை மாற்றிக் கொண்டு விடுவார்கள்!

- நெ. இராமன்

தெரிஞ்சவங்க வீட்டிலிருந்து ஓடிச்சிட்டு வந்தது" என்றேன் முந்திக்கொண்டு.

"நான்தான் அதுக்கு தினம் தினம் தண்ணி ஊத்துவேன். இல்லம்மா?" நந்தினி என்னைப் பார்த்தது. ஒரு புன்னகையோடு அந்தப் பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைத்தேன்.

அதன்பிறகு நந்தினியை வந்தனா தன் ரூமுக்குக் கூட்டிக்கொண்டு போய் அவளு டைய வெளிநாட்டுப் பொம்மைகளையெல்லாம் காட்டிக்கொண்டிருந்தாள். கூடத்தில் பெரி யவர்கள் பேச்சோடு கலந்தபடி ஓரக்கண்ணால் என் மகளையே கவனித்துக்கொண்டிருந்தேன். மனத்தில் கவலை மிகுந்திருந்தது.

**வீ**ட்டுக்குத் திரும்பியபோது மணி ஒன்பதுக்கு மேல் ஆகிவிட்டது. நந்தினிக்குச் சாதம் பிசைய உள்ளே சென்றேன். அப்பாவும் பெண்ணும் ஹாலில் உரக்க பேசுவது காதில் விழுந்தது.

"நந்து இப்போ நாம ஒரு அங்கிள் வீட் டுக்குப் போனோமே, அந்த வீடு உனக்குப் பிடிச்சிருக்கா?"

"ஓ!"

"அங்க இருந்த பொம்மையெல்லாம்..."

"ம்ம்ம், ரொம்ப பிடிச்சிருந்ததே, மெத்து மெத்துன்னு இருந்ததே. அந்தக் கரடி பொம் மையை எனக்குத் தரியான்னு கேட்டேன். தர மாட்டேன்னு சொல்லிட்டா வந்தனா."

நந்தினியின் முகபாவத்தை இங்கிருந்தே ஊகித்துச் சிரித்துக்கொண்டேன்.

அவர் விடாமல் இன்னும் கேட்டுக் கொண்டிருந்தார். "அந்த குஷன் சோபா பிடிச் சிருந்ததா?"

"குதிச்சா உள்ளே போகுதே அதுவா?"

"ம் அதுதான். அந்த மாதிரி நம்ம வீட் டுலயும் வாங்கலாமா?"

"ஐ! எப்போப்பா வாங்கலாம்?" சந்தோ ஷத்தில் குரல் இன்னும் உயர்கிறது.

"வாங்கலாம். அம்மாதான் வேணான்னு சொல்றாங்களே..."

"ஏன்?"

"நீயே கேளு அம்மாவை. ஏன் வேண் டாம்னு சொல்றேம்மான்னு கேளு." எனக்குப் புரிந்தது. நாங்கள் பேசினால் சண்டை வருகிறதென்று இப்போது குழந்தை வழியே பேசுகிறார். சாதத்தோடு கூடத்துக்கு வந்த என் னைப் பார்த்து நந்து. "ஏம்மா வேண்டாம்ன்னு சொன்னே? எனக்கு அது ரொம்ப பிடிச்சிருக் கும்மா, ஒண்ணே ஒண்ணு வாங்கலாம்மா, ப்ளீஸ்" என்றது.

குழந்தையை வைத்துக்கொண்டு இந்தப் பேச்சைத் தொடருவதில் எனக்குக் கொஞ் சமும் விருப்பமில்லை.

"உனக்கு அந்த வீட்டுல எல்லாமே பிடிச்

"அந்த அமைச்சர் ஏன் அந்த பிச்சைக் காரனை அடிச்சு விரட் டச் சொல்றார்?"

"அம்மா! தாயே! ஆதிபராசக்தி... அகி லா ண் டே ஸ் வ ரி தாயே...'ன்னு அவன் பிச்சை கேட்டதும், எங்கே தனக்குப் போட்டியா வந்துடு வானோன்னு பயந்துட்டாராம்!"

— சீர்காழி ரேவதி



சிருக்குதானே?" பெரிதாய்த் தலையாட்டியது குழந்தை.

"அம்மா நாளைக்கு உன்னை அங்கே கொண்டுபோய் விடறேன், இனிமே அங்கேயே இருக்கியா நீ?" என்றேன்.

"அப்பாவும் நீயும்?" என்றது உடனே.

"நாங்க எதுக்குடா? அதான் உனக்கு அங்க நிறைய டாய்ஸ் இருக்கு இல்ல. சோஃபா இருக்கு, ரோஸெல்லாம் இருக்கு. நீ பாட்டுக்கு விளையாடிட்டு இரேன்" என்றேன். நந்து 'மாட் டேன்' என்று வேகமாகத் தலை ஆட்டியது. 'நீயும் வா அப்பதான்" எனச் சிணுங்கியது.

"அம்மா வேணும்னா அங்கதான் ஒரு ஆன்ட்டி இருக்காங்க இல்ல, அவங்களை அம்மானு கூப்பிடு" என்றேன்.

"ஏம்மா" என்றது அதிர்ச்சியும், குழப்பமும் கலந்து.

"உனக்கு அங்க இருக்கிற எல்லாம் புடிச்சு இருக்கு இல்ல. அப்போ அந்த ஆன்டியை அம்மா'ன்னு கூப்பிட்டா என்னடா?" சிரித்துக் கொண்டே கேட்டேன். "அதெல்லாம் முடியாது போ" என்று தலையைப் பிடிவாத மாய் இடவலம் ஆட்டியது.

"சரி ஏன் அந்த ஆன்ட்டியை அம்மான்னு கூப்பிட மாட்டேங்கிறே, சொல்லு, நல்ல ஆன்ட்டிதானே? உனக்குச் சாக்லேட் குடுத்தாங்கதானே, அப்புறம் அம்மான்னு கூப்பிட்டா என்ன தப்பு?"

குழந்தை ஒரு நிமிடம் தாமதித்தது. என்ன சொல்லப் போகிறாள்? என்று அசோக்கும் அவளையே பார்த்துக் கொண்டிருக்கையில் மெல்லமாய்த் தயங்கித் தயங்கி, "ஏன்னா... ஏன்னா... நீதான என் அம்மா" என்று என் கழுத்தைக் கட்டிக்கொண்டது.

அவளை அப்படியே தூக்கி உச்சி முகர்ந்து, வெளியே சாதம் கொடுக்கக் கூட்டிச் சென்றேன். அசோக் அப்படியே அமர்ந் திருந்தார். ஏதோ யோசிப்பு போன்ற முகபாவம். வெளியே எங்கள் வீட்டு ரோஜாசெடி புதிதாக, மிக அழகாக முதல் மொட்டு விட்டிருந்தது. ○

"உங்கள் கல்லூரியின் ஹீரோயின் யார்?" - திருவள்ளுவர் பொறியியல் மற்றும் தொழில் நுட்பக் கல்லூரியின் நுண்கலை அமைப்பின் தலைவர் சிவபாண்டியிடமும் செயலாளர் சிவரஞ்சனியிடமும் இந்தக் கேள்வியைக் கேட்ட போது, பாய்ஸ் சற்றே பின்வாங்கினார்கள். "150க்கும் மேற்பட்ட மாணவிகள் படிக்கிறார்கள். யாரையாவது சொல்லி, அப்புறம் நாங்கள் மாட்டிக் கொண்டு முழிக்கவா?" என்று ஜகா வாங்கியவர்களை, "லுக்... ஹீரோயின் என்றால் அழகை மட்டும் வைத்துச் சொல்ல வேண்டாம்; சகல துறைகளிலும் சிறந்து விளங்கும் மாணவியைப் பற்றிச் சொல்லுங்கள்" என்று மஸ்கா போட்ட போதும் மசியவில்லை.

வந்தவாசியிலிருந்து திருவண்ணாமலை செல்லும் பாதையில் பத்தாவது கி.மீ.ல் அமைந்திருக்கிறது கல்லூரி. கான்க்ரீட் கட்டடங்களுக்குப் ப்ரேம் போட்டுவிட்டது போல் பின்னால் அழகான சிறு குன்று. அதில் ஒரு குட்டி ஜெயின் ஆலயம். கவிதை எழுதத் துடிக்கும் கைகள். கள்ளிச்செடியாக இருந்த இந்த ஏரியாவில் கல்விச் செடியை நட்டவர் அண்ணா பல்கலைக்கழகத்தின் முன்னாள் பேராசிரியர் டாக்டர். எஸ். அருணாசலம். (வார்த்தை உபயம் : வைரமுத்து.)

"எங்களில் ஒருவர் அவர்" என்கிறார்கள் மாணவர்கள். இரவில் தூங்கும் செக்யூரிட்டியை உசுப்பி விட்டு, மணலில் படுத்துக் கொண்டிருப்பாராம் சேர்மன். வருடம் முழுக்க ஏதாவது கருத்தரங்கு, கலை விழாக்கள் நடத்தி, மாணவ, மாணவிகளைப் பெண்டு கழற்றி விடுகிறார்கள்! 1200 மாணவ, மாணவிகள் ஹாஸ்டலில் இருக்க, ஒரு மினி உலகமே அங்கே இயங்கிக் கொண்டிருக்கிறது. கணிசமான அளவில் ஆந்திரதேசத்தைச் சேர்ந்தவர்களும் படித்துக் கொண்டிருக்கும் ஏரியாவில் சுந்தரத் தெலுங்கும், காற்றில் கலந்து வருகிறது.

சிவரஞ்சனும், சிவபாண்டியும், ஹீரோயினைச் சொல்லத் தயங்கினாலும் நாம் கண்டுபிடித்து விட்டோம். கம்ப்யூட்டர் சயின்ஸ் படிக்கும் யமுனா ஒரு துறுதுறு என்பது பார்த்தவுடனேயே புரிந்து விட்டது. கிளாஸிகல் டான்ஸ், வெஸ்டர்ன் என்று சகலகலா ஆட்டத்தையும் தெரிந்து வைத்துக் கொண்டு அசத்துகிறார் யமுனா. கூடவே, விளையாட்டிலும், படிப்பிலும் சக்கைபோடு போடுகிறார். மாணவிகளில் பத்து பேரில் ஐந்து பேர் பாடுவதிலும், ஆடுவதிலும் கரை கண்டவர்களாக இருக்கிறார்கள். "எங்கே உங்கள் திறமையைக் காண்பியுங்கள்?" என்றதும் காயத்ரியும் சாந்தியும் 'வசீகரா'வைப் பாட, யமுனா, அனுஷா, ஸ்ரீசுஜி ஆகியோர் அபிநயம் காட்டி அசத்தினார்கள்.

இதற்குள் நமது காதில் "முட்டை, முட்டை" என்ற வார்த்தைகள் வந்து விழ, 'அட சத்துணவில் கூட முட்டையை நிறுத்தி விட்டார்களே' என்று

ஜயோ



வியந்தபடி நாம் பார்க்க, "அது ஒன்னுமில்லை ஸார்... நம்ம மணிகண்டவாசு (கம்ப்யூட்டர் சயின்ஸ் மூன்றாவது வருடம்) முட்டை ஓடு (கூடு?)களின் மேல் அற்புதமாக பெயிண் டிங் போடுவான்" என்றார் சிவபாண்டி. இயற்கைக் காட்சிகள், தலைவர்கள் படங்கள் என்று முட்டை ஓடுகளை கான்வாஸாக மாற்றி கைவண்ணத்தைக் காண்பித்திருக்கிறார் மணிகண்டவாசு. பல கல்லூரிகளைப் பார்த்த நமக்கு ஒரு விஷயம் மட்டும் தெளிவாகப் புரிந்து விட்டது. ஒவ்வொரு கல்லூரியிலும் ஒரு பல குரல் மன்னன் இருக்கிறார். இந்தக் கல்லூரியில் முதலாண்டு படிக்கும் கார்த்திக். பொழுது போகவில்லை என்றால் கார்த்திக்கின் தொண்டைக்கு வேலை கொடுக்கிறார்கள் மாணவர்கள்.



இப்படி மாணவ, மாணவிகளிடம் நாம் வாயடி, வம்படி பண்ணிக் கொண்டிருந்த போது "தமிழை அலட்சியப்படுத்தாதீர்கள் ஐயா" என்ற குரல். திரும்பிப் பார்த்தால் தமிழ் மன்றத் தலைவரான மைக்கேல். கூடவே இவரது பெருமை: கபடி டீமின் தலைவர். வெய்ட் லிஃப்டிங் பார்ட்டி. "நமக்கு இப்படிப் பல திறமைகள் இருந்தாலும் கல்லூரி ஆணழகன் டானியல்தான் ஐயா!" என்று ஒப்புக் கொள்கிறார் மைக்கேல். மாணவர்களுக்கென்று வளாகத்தில் ஒரு ஜிம்மையே நடத்தி வருகிறது கல்லூரி. வாரத்தில் இரண்டு நாள் மட்டனும், நான்கு நாள் முட்டையும் போடும் மெஸ்ஸை நம்பி ஒரு பெரிய மாணவர் கூட்டம் தினசரி ஜிம்மை முற்றுகையிடுகிறது.








கல்லூரி வைரம்

மாதம் ஒருமுறை பௌர்ணமி அன்று திருவண்ணாமலையில் கிரிவலம் செய்யச் சிறப்பு வசதியும் செய்து கொடுத்திருக்கிறது கல்லூரி. கிரிவல கிளப்பின் எண்ணிக்கையும் மாதா, மாதம் கூடி வருகிறதாம்.

# கவிதையா..?

ஒரே சிரிப்பும், கும்மாளமுமாக இருந்த அரட்டைக் கச்சேரிக்கு நடுவில் ஒரு மாணவர் மட்டும் உம்மணாமூஞ்சியாக உட்கார்ந்து கொண்டிருந்தார். அவரின் ஜாதகத்தை அவிழ்த்து விடும்படி சிவரஞ்சனைக் கேட்ட போது, "பெயர் : அஷோக்குமார், மூன்றாம் வருடம் மெக்கானிகல் மாணவர். சிறப்புத் தகுதி : சிறந்த பெயிண்டர்" என்று பயோடேட்டாவை வாசித்தார் அவர். இன்றைய சமூகத்தின் பல்வேறு அவலங்கள், இளைஞனை எப்படிப் பாதித்து டென்ஷனை உண்டாக்கு





இன்றளை என்பதை விளக்கும் அஷோக் குமாரின் ஓவியம் பரிசை வென்றதாம். தமிழ்நாட்டில் எந்தக் கல்லூரியில் ஓவியப் போட்டி நடந்தாலும் தமது கலைப் பொக்கிஷங்களோடு அங்கே ஆஜராகி விடுகிறார் இவர்.

"எங்கள் கல்லூரியில் ஜீவித்துக்குப் போட்டியே கிடையாது'' என்றார்கள் மாணவர்கள். கல்பாக்கத்தைச் சேர்ந்த ஜீவித் நீச்சல் வீரர். அந்த பொட்டல் காட்டில் நீச்சல் பிராக்டீஸ் எப்படி? கல்லூரிக்கு எதிர்ப்புறம், கழனியைத் திருத்தி சர்வதேச தரத்துக்கு ஏற்ப நீச்சல் குளம் கட்டியிருக்கிறார்கள். மாநில அளவில் இரண்டு தங்கமும், ஒரு வெண்கலமும் தட்டி வந்திருக்கும் ஜீவித், சிறந்த வீரர்கள் வரிசையில் ஆறாம் இடத்தில் இருக்கிறாராம். இவரது இலட்சியம் ஒலிம்பிக்ஸ் சிகரத்தைத் தொட வேண்டும் என்பது தான். "Miles to go" என்பதை உணர்ந்து, தினசரி இரண்டு மணிநேரம் தண்ணீரில் தவமாய் இருக்கிறார் ஜீவித்.

இந்தக் கல்லூரி மாணவர்களின் மாலை நேரப் பொழுதுபோக்கு அருகிலுள்ள குன்றின் மீது ஏறி இறங்குவது. சாதாரணமாக பதினைந்து நிமிடங்கள் பிடிக்குமாம். இப்போது இவர்கள் நான்கு, அல்லது ஐந்து நிமிடங்களில் ஏறிச் சென்று சாதனை செய்திருக்கிறார்களாம். கல்லூரியில் பதினைந்து மாணவியர் கொண்ட 'ரங்கோலி' கோல கிளப்பும் இயங்குகிறது! பல கல்லூரிகளில் நடக்கும் 'ரங்கோலி' போட்டியில் கலந்து கொண்டு பரிசுகளை வென்று வருகிறார் இரண்டாம் ஆண்டு படிக்கும் தேவி.

கையில் பேட்டும், பந்துமாக வந்த நிவாஸ் பிரபுவை அறிமுகப்படுத்தினார்கள். "எங்க கிரிக்கெட் டீம் ஓபனிங் பேட்ஸ்மேன்... அது மட்டுமல்ல ஸார்... நன்றாகக் கவிதை எழுதுவான். பிரபு... ஒன்றை அவிழ்த்து விடு'' என்று சிவபாண்டி சொன்னதும், "ஐயா... வேண்டாமய்யா...'' என்று கெஞ்சி சென்னை பஸ்ஸைப் பிடிக்க ஜூட் விட்டோம். ஏற்கெனவே பல இடங்களில் கவிதை மழையில் நனைந்து, ஜலதோஷத்தில் அவஸ்தைப்படுவது நாமல்லவா?

கட்டுரை, படங்கள் : ஸ்ரீநிவாசன்.

# இக்கரை




பார்க் ஷெரட்டன் ஹோட்டலின் வரவேற்புப் பகுதியைச் சுற்றி ஒரு முறை நடந்தாள் ரஞ்சி. நுழைவுப் பகுதியின் பளிங்குக் குளத்துத் தாமரைகள் விட்டத்து மின்கதிரவன்களைப் பார்த்துச் சிரித்தன. வரவேற்புப் பணியாளர்களும் தொலைபேசிகளும் மென்மையாய்ச் சிணுங்கும் பின்னணி ஒலி. வர்மா இன்னும் வந்திருக்கவில்லை.

கஞ்சி முறுகிய கைத்தறிப் புடவை விசிற விசிற நடப்பதே எவ்வளவு சுகம். அதற்காகவே இன்னுமொரு சுற்று நடந்தாள் ரஞ்சி. பிறகு, வரவேற்புப் பகுதியில் ஓர் ஓரமாய் உட்கார்ந்து 'லேப்டாப்'பைத் திறந்தாள். 'சிரித்த முகங்கள்' நிறைந்த அனுகாவின் கடிதத்தை இருபதாவது முறையாகப் படித்தாள் :

"மாம்,

எனக்கு உன்னை நினைத்தால் எவ்வளவு பெருமையாக இருக்கிறது தெரியுமா? உன் புதிய பதவியில் நீ நினைக்கும் நல்ல மாறுதல்கள் நடக்க வாழ்த்துக்கள்.

"ஆலன் பற்றி அன்றைக்கு நான் உன்னிடம் நீளமாகப் பேசிவிட்டேன். உளறலாய் நீ நினைத்தாலும் சரி, என் குழப்பத்தைத் தெளிவாக உன்னிடம் பகிர்ந்து கொண்டால்

# ல்

ரஞ்சனா தாமோதரன்



நல்லது என்று தோன்றியது. என்னையும் ஒரு சராசரி ஹாலிவுட் பாணி டீனேஜராக நீ நினைத்து விடக் கூடாதே! ☺☺

"என் உணர்வைக் கொச்சைப்படுத்தாத, ஆனால் கண்டிப்பான அம்மா வாய்ப் பேசினாய். நான் பேசியது உன்னை எவ்வளவு சங்கடப்படுத்தியது என்பதை நீ சொல்லவில்லை. உன் முகம் காட்டிக் கொடுத்து விட்டது.

"வரும் சனிக்கிழமை முதியோர் இல்லச் சேவை முடிந்ததும், நண்பர்கள் எல்லாருமாய்ச் சேர்ந்து எங்காவது போகலாமென்று திட்டம். நீ கூப்பிடும் போது விவரங்கள் சொல்கிறேன். கவலைப்படாதே, சரியா? நீயும் அப்பாவும் என்னை வளர்த்த விதத்தை நம்பு. என் சூழலின் நல்லது கெட்டது எனக்குப் புரிந்தது என்பதையும் நம்பு. அப்படிப் புரியாத சமயங்களில் உன்னிடம்தான் முதலில் பேசுவேன் என்பதையும் நம்பு. நம்புவாயா, என் சிநேகிதியே?

"சில சமயங்களில் என்னை விடக் குழந்தையாக நீ எனக்குத் தெரிகிறாய், மாம். நீ வளர்ந்த காலமும் சூழலும் வேறு என்பதாலா? நீ என்னை மகளாக வளர்க்கும் அதே சமயத்தில், நானும் உன்னைத் தாயாக வளர்க்கிறேன் என்று படுகிறது. (அடிக்க வராதே, மாம்; இந்த மாதிரி 'ஃபஸ்லி-வஸ்லி-சென்டிமென்டலாக' நேரில் பேச முடியுமா? ☺☺)

"வழக்கம்போல், என்னைவிட அப்பாதான் உன்னை அதிகம் தேடுவது போலிருக்கிறது. ☺ அன்பும் முத்தங்களும், அனுகா."

அன்பு மகள். நெகிழ்வும் சிரிப்புமாய் ரஞ்சியின் நெஞ்சுக்குள் ஏதோ நிறைந்தது. பிறந்த கணத்து அனுகாவின் முகம். பிரசவ அறையின் ஐந்து மணி நேர வலியையும் இரத்தத்தையும் தாங்க முடியாமல் மூர்ச்சை போடத் தயாரான க்ரிஸ்ஸையும் மலரச் செய்த முகம். பிஞ்சு உடல் மேல் உயிர்த் திரவங்களின் வழுவழுப்பு... இன்னும் வெட்டப் படாத தொப்புள் கொடி.... இதுவரை தாயுடலின் ஒரு

பகுதியாய் இருந்த தடங்களுடன், கண்ணை இறுக்க மூடி, முகத்தைச் சுளித்து, கையைக் காலை உதறி உதைத்து அழுத முகம். துடைத்துச் சுத்தமாக்கிக் கம்பளியில் பொதிந்து தாய் நெஞ்சின் மேல் குப்புறப் போட்டவுடன், 'சட்'டென்று அமைதியாகித் தூங்கிப் போன முகம். அப்படியே அவள் நெஞ்சினுள்ளும் வேகமாய்ப் புகுந்து பதிந்து போன முகம்.

அதே முகம்தான் 'நானும் உன்னைத் தாயாக வளர்க்கிறேன்', என்று இன்று வசனம் பேசுகிறது. தன் சுய அடையாளத்தையும் உணர்வுகளையும் பற்றிக் குழம்பும் அதே சமயத்தில், தாயின் மனது புண்பட்டு விலகு கிறதோ என்றும் பயந்து நேசக்கரம் நீட்டுகிறது.

ஏதோ பிடிபட்டது போன்ற உணர்வு. அவளும் க்ரிஸ்ஸும் தொலைவிலிருந்தே அனுகாவைப் பொதிந்து அரவணைக்கும் தாயுடல் போல. தொப்புள் கொடி இனி இல்லை. 'கார்ட் லெஸ்' இணைப்புக் காலம் இது. எந்நேரமும் இணைப்பும் தொடர்பும் திறந்திருக்க வேண்டும். திறந்திருக்கும். நம்பிக்கை.

ஆழ்மன மூலையில் துளிர்க்க ஆரம்பித்திருந்ததாக நினைத்த வெறுமை மறைந்தது போல் தோன்றியது. தாயகத்தின் வழக்கமான மாயமோ!

"மன்னிக்கவும். போக்குவரத்து நெரிசலில் மாட்டிக் கொண்டேன் வர்மா." புன்னகையுடன் 'லேப்டாப்'பை மூடியவாறு ரஞ்சி எழுந்தாள்.

"இங்குள்ள 'காஃபி ஷாப்'பா அல்லது 'தக்ஷின் ரெஸ்டாராண்ட்'டா, மிஸ்டர் வர்மா?"

"காஃபி ஷாப்'பே போதுமே!"

காஃபி ஷாப்பில் அதிகக் கூட்டமில்லை. வர்மாவுக்கு 'மெனு'வைப் பார்க்க வேண்டிய தேவையே இல்லை. "சென்னைக்கு வந்தால், இட்லியும் சாம்பாரும்தான்," என்றார். அவளுக்கு இங்கு பிடித்தது இடியாப்பமும் காய்கறிக் குருமாவும். சொல்லி அனுப்பினார்கள்.

கண்ணாடிச் சுவருக்கு வெளியே தூண்களும் வளைவுகளுமாய் நீளும் தாழ்வாரம், கிராமத்துப் பூர்வீக வீட்டை ஞாபகப்படுத்தியது. இப்போது யாருமில்லாமல் பூட்டிக் கிடக்கும் வீடு. பெரியம்மா மகனும் குடும்பத்தோடு சிங்கப்பூரில் குடியேறிவிட்டான்.

"நேற்றைய விருந்து எப்படி, டாக்டர் ரஞ்சி?"

"உங்களுக்கு நான் நன்றி சொல்ல வேண்டும், மிஸ்டர் வர்மா. உங்களை முதல் முறையாகச் சந்தித்தது பற்றி மகிழ்ச்சி. நம் தொழில் முறையில் சில முக்கியமானவர்களை ஒரே இடத்தில் சந்தித்தது வசதி."

உணவு வந்ததும் பேச்சு நின்றது. இடியாப்பத்தின்மீது அவள் முழுக் கவனமும் சென்றது. வர்மா சாம்பாரை ஒரு தனிப் பதார்த்தமாகவே கரண்டியால் ரசித்துச் சாப்பிட்டார். தன் குடும்பம் பற்றிச் சொன்னார். மனைவி, கல்லூரி போகும் மகன், மகள்.

"சென்னையில்தான் இருக்கப் போகிறீர்களா? வேறெங்காவது...?"

"நம் நாட்டுக்கு வந்திருப்பது ஒரு சின்ன விடுமுறைக்காகத்தானே, மிஸ்டர் வர்மா. நானும் என் தங்கையும் நாளைக்குத் திருவனந்தபுரம் கிளம்புகிறோம். யு.எஸ்ஸிலிருந்து இங்கு வந்திருக்கும் குடும்ப நண்பர்களுடன் இரண்டு நாட்கள். பிறகு வீட்டுக்கு." ராஜி, அவள் அப்பா, விது, அருணா, அம்பிகாக்குட்டி, விதுவின் அம்மா எல்லாரையும் இங்கேயும் சந்திப்பது இனிமையான அனுபவமாய் இருக்கும்.

கால்வாய்களிலும் கழிகளிலுமாய், கேரளத்தில் சுமார் இரண்டாயிரம் மைல்கள் படகுச் சவாரி செய்வது பற்றி வர்மா பேசும்போது, காஃபி வந்தது.

"ம்ம்ம்... இந்தத் தென்னிந்தியக் காஃபிக்கு நிகரில்லை. தென்னமெரிக்கக் காஃபி பற்றி அங்கே அவர்கள் எவ்வளவு புகழ்ந்தாலும் சரி." ரஞ்சி சிரித்தாள்.

**ரிக்ஷா வண்டியைக் கண்டு பிடித்தவர் ஜப்பானில் இருந்த ரெவரெண்ட் ஜோனதன் ஸ்கோபி என்ற அமெரிக்க பாதிரியார். எழுந்து நடக்க இயலாத தன் மனைவிக்கு ஊரைச் சுற்றிக் காட்ட இந்த வண்டியை உருவாக்கினாராம். - அயன்புரம் த.சத்தியநாராயணன்**

வர்மா இரண்டாவது காஃபிக்குச் சொல்லி விட்ட பின் கேட்டார் : "நம் தென்னமெரிக்க, ஆஃப்ரிக்க, தெற்காசியக் கிளைகள் எல்லாம் எப்படி இருக்கின்றன?"

"முழுத் தேசமுமே முழுகி விடுமோ என்றிருக்கிறது ஆர்ஜென்டினாவின் அரசியல் - பொருளாதார நிலைமை. நான் போகவில்லை. போயிருந்த சில நாடுகளில் நாம் சில மாற்றங்கள் செய்ய வேண்டி வரலாம்."

வர்மா மேசை விரல் நுனிகளால் தாளம் போட்டார். "என்ன மாதிரி மாற்றங்கள்?"

"உடனடியான மாற்றங்கள் ஒன்றுமில்லை. சில கேள்விகள், மிஸ்டர் வர்மா. முதிர்ந்த பொருளாதார அமைப்புள்ள நாட்டுச் சந்தைகளிலும், அந்த அமைப்புகள் இன்னும் வலுவாகாத வளர்முக அல்லது பிற்பட்ட நாட்டுச் சந்தைகளிலும் நம் நிறுவனம் எப்படி நடக்க வேண்டும்? நம் நிறுவனம் புழங்கும் ஒவ்வொரு சமூகத்துக்கும் நம் மொத்தப் பங்களிப்பு என்ன?"

வர்மா கொஞ்சம் யோசித்தார். "கேள்விகள் புரிகின்றன. எந்த அளவுக்கு நம் பொறுப்பு என்பதுதான் புரியவில்லை."

"நாம் வர்த்தகம் செய்பவர்கள்தானே என்கிறீர்கள், மிஸ்டர் வர்மா அதிகாரமும்

பணமும் சுதந்திரமும் சேரும் இடத்தில், கூடுதலான சமூகப் பொறுப்புணர்வும் தேவை, மிஸ்டர் வர்மா. இதையுமே வெறுமே பேசிப் பயனில்லை. செய்வதில் காட்ட வேண்டும்."

"ஏ.ஜே. என்ன சொல்கிறார்?"

"நான் சொல்வதை ஒப்புக் கொள்வார்."

வர்மா அவளைக் கூர்ந்து பார்த்தார். அவளுக்குப் புரிந்தது. செய்திகள் மின்வேகத்தில் பயணிப்பவை. அவள் நிறுவனத் தலைவராகலாம் என்பது இங்குவரை பரவியிருக்கிறது. அவள் ஒன்றும் சொல்லாமல் புன்னகை செய்தாள்.

வர்மாவும் பதிலுக்குப் புன்னகைத்தார். "வாழ்த்துக்கள், டாக்டர் ரஞ்சி. நீங்கள் நம் நாட்டவர் என்பதால் பெருமை. முறையான அறிவிப்பு எப்போது?"



"உண்மையில் பொறுப்பேற்க இன்னும் சில மாதங்கள் ஆகும். அறிவிப்பு வரும் வரை இது நம் இருவருக்குள்ளேயே இருக்கட்டும், நன்றி."

வர்மா தொடர்ந்து கேள்விகள் கேட்டார். அவள் பதில்களை நிதானமாய் அசை போட்டார். தன் கருத்துக்களையும் சில திட்டங்களையும் பகிர்ந்து கொண்டார். அவள் கேள்விகளுக்குப் பொறுமையாய்ப் பதில் சொன்னார். இன்னும் தொடர்ந்து பேச வேண்டிய விஷயங்கள் பலவற்றையும் வீடியோ - கான்ஃபரன்ஸ் மூலம் பேசிக் கொள்ளலாம் என்றார்.

இறுதியில், "இலட்சியக் கனவுகள் இருபது வயது இளைஞர்களுக்கான செல்லப் பிராணிகள் என்று வைத்திருந்தேன்" என்றார் சிரித்தபடி.

ரஞ்சி புன்னகை செய்தாள். "இளமைக்கு வயதுண்டோ, வர்மாஜி?" கொஞ்ச நேர மௌனத்தின் பின் மெல்லச் சொன்னாள். "இது இலட்சியமும் இல்லை. கனவும் இல்லை. நடைமுறை அத்தியாவசியம்."

**பா**ர்க் ஷெரட்டனின் ஐந்து நட்சத்திரச் சுவருக்கு வெளியே, முற்றிலும் வித்தியாசமான இன்னொரு சென்னை. ரஞ்சி கார்ச் சன்னல் வழியே பார்த்துக் கொண்டே வந்தாள்.

காரிலிருந்து குதித்து, கூட்டத்தோடு கூட்டமாய்த் தன்னைக் கரைத்துக் கொள்ள வேண்டுமென்று ஒரு திடீர் வேகம்.

"டிரைவர் சார், அப்படி ஓரமா நிறுத்துறீங்களா?"

காரை விட்டிறங்கவும் வெயில் முகத்தில் அறைந்தது. அப்போதுதான் திறக்க ஆரம்பித்த பூக்கடைகளிலிருந்து ரோஜாவும், மல்லிகையும், சம்பங்கியும் சேர்ந்த வாசமும். "பூ வேணு மாம்மா?" ஒதுங்கி மர நிழலில் உட்கார்ந்திருந்த பூக்காரி கூப்பிட்டாள். கூடையில் மல்லிகை, பிச்சி, கதம்பப் பந்துகள், ஒரு தாமரை மொட்டு. மடியில் சின்னக் குழந்தை.

நீர் தெளித்தமல்லி அரும்புகளை ஈர நாரில் அவள் தொடுக்கும் வேகத்தை வியந்தாள் ரஞ்சி. பேசக் கொடுத்தாள். சென்னைத் தமிழ் பாதிதான் புரிந்தது. பூவில் தொடங்கிய கதை அவளையும் அவள் குழந்தையையும் விட்டுப் போன குடிகாரக் கணவன் வரை எப்படிப் போனதோ? ரஞ்சி ஒரு மல்லிகைப் பந்து, ஒரு பிச்சிப் பந்து, ஒரு தாமரை மொட்டு என்று வாங்கிக் கொண்டாள். நாளை திருவனந்தபுரம் போக வேண்டும். இவ்வளவு பூ தேவையில்லை. ஆனால், வெறுமே பணம் கொடுத்தால் அந்தப் பெண் வாங்கிக் கொள்ள மாட்டாள் என்று தோன்றியது. அடிப்படை வயிற்றுப் பிழைப்புக்காக வேலை பார்க்கும் மற்றுமொரு பெண். நீடிக்கட்டும்.

கை நிறையப் பூவுடன் நடந்தாள் ரஞ்சி. 'அமெரிக்கா எப்படி இருக்கும்?' என்று அந்தப் பூக்காரப் பெண் அப்பாவித்தனமாய்ச் சிரித்தது இன்னும் வெள்ளையாய் மனத்தில் நிறைந்திருந்தது.

ரஞ்சி நடப்பதை நிறுத்தினாள். சுற்றிலும் பார்த்தாள். நெரிசலான மக்கள் திரளும், போக்குவரத்தும், சப்தங்களும், மணங்களும், காட்சிகளும் மடியில் குழந்தையுடன் சிரிக்கும் பூக்காரப் பெண்ணின் உருவத்தின் மனப்பதிவும், தங்கநிற வெயிலில் எல்லாம் உருகிச் சேர்ந்து ஒன்றாகிப் பெரிதாய் வளர்வது போலிருந்தது. ஐம்புலன்களும் நிரம்பி வழிந்தன. நெஞ்சு மெல்ல அதிர்ந்தது.

'என் வேரடி மண்ணும் அதன் மக்களும். இதன் தொடர்ச்சியாகவே நான் கண்ட பிற நாடுகளும் அவற்றின் மக்களும். கடவுளே, என் மண்ணும் மக்களும் எப்போதும் என்னுள் இருக்கட்டும். பத்தாயிரம் மைல்களுக்கு அப்பாலிருந்து, நிறுவனத் தலைமையாக நான் எடுக்கும் ஒவ்வொரு முடிவும் இவர்களையும் ஏதாவது ஒரு வடிவில் தொடும் என்பது எனக்கு நினைவிருக்கட்டும். அந்த நினைவு, உலக அளவிலும் சரியானதைச் செய்ய எனக்கு வழி காட்டட்டும்.' ரஞ்சியின் மனம் அமைதியாக ஒரு புள்ளியில் குவிந்து நின்றது. வெளியுலகம் மங்கியிருந்தது.

பல வாகனங்களின் சக்கரங்கள் திடீர் நிறுத்தத்தினால் கிறீச்சிடுவதும் மக்களின் கூக்குரலும் அவளுக்குக் கேட்கக் கொஞ்சம் தாமதமாயிற்று. பூப்பந்துகள் கையிலிருந்து நழுவிக் கீழே மண்ணில் உருண்டன.

(தொடரும்)

"பொதுவாகவே ஒரு கடுமையான அரசியல் சூழலில் தான் இப் பொறுப்பை ஏற்கிறேன். மத மோதல்கள், ஜாதி மோதல்கள் புதிய பொருளாதார கொள்கையால் மக்கள் படும் அவதி, அதிலும் குறிப்பாக விவசாயிகளின் வேதனை, தமிழகம் முழுக்க சிறு, குறுந் தொழில்கள் மூடப்பட்ட நிலை என்று சோதனை மேகங்கள் தமிழக மக்களைச் சூழ்ந்திருக்கின்றன. இந்த நிலையில் மக்கள் ஒற்றுமை அவசியம் தேவை என்று மார்க்ஸிஸ்ட் கட்சி கருதுகிறது" என்கிறார் வரதராஜன்.

திண்டுக்கல் மாவட்டம் வேடசந்தூரைச் சேர்ந்த வரதராஜன் கிட்டத்தட்ட அறுபது ஆண்டுகளாக பொது வாழ்க்கையில் இருக்கிறார்.

ஒரு சில நோக்குகளில் மட்டும் காங்கிரஸுடன் இணைந்து செயல் படுவது குறித்து கேட்டபோது, "மதச்சார்பின்மை கொள்கையைக் கடைபிடிக்கும் காங்கிரஸுடன், மதவெறியை வளர்க்கும் பா.ஜ.க.வை எதிர்க்க இணைகிறோம். ஆனால் மன்மோகன் சிங் அறிமுகப்படுத்திய பொருளாதார கொள்கையால்தான் இன்று நாடு சிக்கலில் தவிக்கிறது. காங்கிரஸோ தவறை உணராமல் அந்தக் கொள்கைக்கு முட்டு கொடுக்கிறது. இந்த நிலையில் அனைத்து மட்டத்திலும் காங்கிரஸுடன் இணைந்து எங்களால் பணியாற்ற முடியாது" என்கிறார் வரதராஜன் உறுதியாக.

'உடல்நிலை காரணமாக முழு நேர கட்சிப் பணி ஆற்ற இயலாது' என்று எண்பத்தியொரு வயது சங்கரய்யா ஒதுங்கியதன் காரணமாக எழுபத்தி நான்கு வயதான என்.வரதராஜன் தமிழக மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மாநிலச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார்.



# "திராவிட இயக்கங்கள் தடுமாறி விட்டன!"

கம்யூனிஸ்ட் கட்சி தடை செய்யப்பட்ட போது இரண்டு வருடம் தலைமறைவு வாழ்க்கையும் அனுபவித்திருக்கிறார்.

"த.மா.கா., காங்கிரஸுடன் இணைவதை நாங்கள் விரும்பவில்லை. அது தொடர்ந்து மாநில கட்சியாகவே இயங்கி தி.மு.க.வுக்கும் அ.தி.மு.க.வுக்கும் மாற்றாக இருந்து வலிமை சேர்க்க வேண்டும்" என்று வெளிப்படையாகவே சொல்கிறார் வரதராஜன். "நாங்கள் பா.ஜ.க.வை எதிர்க்க, திராவிட இயக்கங்களை இணைத்துக் கொண்டு பணியாற்றலாம் என்று நடவடிக்கைகளை எடுத்தோம். ஆனால் இந்தக் கட்சிகள் அனைத்தும் தடுமாறிவிட்டன" என்கிறார் அவர்.

"பத்தாண்டுகளுக்கு முன்னர் சோவியத் யூனியன் மற்றும் கிழக்கு ஐரோப்பிய நாடுகளில் செல்வாக்கிழந்த கம்யூனிஸ்ட் இயக்கம் தவறுகளிலிருந்து பாடம் படித்து, மீண்டும் செல்வாக்கைப் பெற்று வருகிறது. நமது நாட்டில் பல்வேறு முனைகளில் பாதிக்கப்பட்ட மக்கள் கம்யூனிஸ்ட் இயக்கத்தில் நம்பிக்கை வைக்கத் துவங்கியுள்ளார்கள்" என்று சொல்லும் வரதராஜன், "மதவெறியைக் கடுமையாக எதிர்ப்போம். ஆனால் மத உணர்வைப் புண்படுத்த மாட்டோம்" என்கிறார்.

சந்திப்பு : கௌசி






• நெருக்கடியில் பேருந்து

# கனவாகிப்போன பஸ் நிலையம்!

**வே**லூர் நகர மக்களின் பெருங் கனவுகளில் ஒன்று புதிய பேருந்து நிலையம். ஆந்திரா, கர்நாடகா ஆகிய அண்டை மாநிலங்களின் எல்லையில் இருக்கும் இந்த நகராட்சிப் பேருந்து நிலையத்திற்குத் தினசரி வந்து போகும் பேருந்துகளின் எண்ணிக்கை எழுநூற்று ஐம்பது.

ஒரு பேருந்து புறப்படுகிறது என்றால், பேருந்து நிலைய வளாகத்திலிருந்து மெல்ல மெல்ல ஊர்ந்து வெளியே வந்து சேர இருபது நிமிடம் பிடிக்கும். அத்தனை இடப்பற்றாக்குறைக்கும் நெருக்கடிக்கும் பெயர் போன பேருந்து நிலையம். நொந்து நூலாகிப் போன உள்ளூர்வாசிகள் சாலை மறியல், உண்ணாவிரதம், முற்றுகைப் போர் என்று அனைத்துப் போராட்ட உத்திகளையும் கையாண்டதன் விளைவு! கடந்த தி.மு.க. அரசு கொஞ்சம் அசைந்து கொடுத்தது. கையோடு வேலூர் புறநகரில் புதிய பேருந்து நிலையம் அமைக்க ஒப்புக் கொண்டது.



• கண்ணன்



இதற்காக கருகாம்புத்தூரில் மூடிக் கிடக்கும் கூட்டுறவுத் துறைக்குச் சொந்தமான பழச்சாறு தொழிற்சாலை வளாகம் தேர்வு செய்யப்பட்டது. "எட்டரை ஏக்கரில் பரந்து விரிந்து கிடக்கும் இந்த இடம் நகருக்கு அருகிலேயே இருப்பது உள்ளிட்ட பல்வேறு வசதிகள் இருந்தும் என்ன பிரயோஜனம்? ஆட்சி மாறியதும் காட்சி மாறி விட்டதே! அ.இ.மு.கவும் புதிய நகரசபைத் தலைவரும் மக்களின் நலனைப் பார்க்காது, புதிய பேருந்து நிலைய பிரச்னையை அரசியலாக்குகிறார்கள்" என்கிறார் த.மா.க. கவுன்சிலர் சைதை வெங்கடேசன்.

அப்படி என்ன அரசியல்?

"பழச்சாறு தொழிற்சாலைக்கான இடம் தி.மு.க. அரசால் பரிந்துரைக்கப்பட்டு, அரசாணையும் பிறப்பிக்கப்பட்டது. அந்த இடத்திற்குப் பேருந்து நிலையம் வந்து விட்டால், தி.மு.கவுக்குப் பெயர் கிடைத்து விடும் என்று குருத் தோப்புக்கு பேருந்து நிலையத்தை மாற்ற அ.இ.மு.க. முடிவு செய்து விட்டது. குருத்தோப்பு நகரிலிருந்து நெடுந்தொலைவில் உள்ள இடம். தவிரவும் அங்கே குடிநீர் வசதி உருவாக்கவே பல கோடி செலவிட வேண்டி வரும்" என்கிறார் இன்னொரு கவுன்சிலரான கண்ணன். "இப்போதிருக்கும் பேருந்து நிலையத்தில் சிறிய தடுப்புச் சுவர் ஒன்றைக் கட்டி வருகிறார்கள். ஐம்பதாயிரம் ரூபாய் கூட தேவைப்படாத அந்தச் சுவருக்கு ஐந்து லட்சம் ஒதுக்கீடு செய்துள்ளார் அ.இ.மு.க. நகர சபைத் தலைவர் கீதா இளங்கோவன். இவரது கணவர் எல்லாவற்றிலும் தலையிடுகிறார். இது போன்ற பினாமி நகரசபைத் தலைவரைத் தேர்ந்தெடுத்த எங்களுக்குப் புதிய பேருந்து நிலையம் கடைசி வரை கனவுதான் போலும்" என்கிறார் கண்ணன்.

**இது பற்றி கீதா இளங்கோவனின் பதில் அடுத்த வாரம்!**

# ஊர்ச் சிறப்பு!

இந்திய விடுதலைக்கு அறுபது ஆண்டுகளுக்கு முன், வேலூரில் மிஷனரி நடத்தி வந்த தமது பெற்றோரைக் காண சிறுமி ஐடா அமெரிக்காவிலிருந்து விடுமுறையில் வந்திருந்தாள். வந்த இடத்தில் ஐடாவை அதிர்ச்சிக்குள்ளாக்கியது ஒரு உணர்ச்சிகரமான சம்பவம். பேறுகாலத்தில் மருத்துவ உதவி கிடைக்காததால், கண் முன்னால் இறந்து போன மூன்று பெண்களின் நிலையைக் கண்டு துடித்தார்! அதன் பிறகு அமெரிக்கா திரும்பிய ஐடா, கானெல் மருத்துவக்கல்லூரியில் படித்து மருத்துவரான முதல் பெண் என்ற பெருமையோடும் பெரிய தாகத்தோடும் வேலூர் வந்தார்!

1900ம் ஆண்டில் ஒரே ஒரு படுக்கையோடு வேலூரில் சி.எம்.சி மருத்துவமனையைத் தொடங்கினார், அடுத்த இரண்டாண்டுகளில் நாற்பது படுக்கைகள் கொண்ட மருத்துவமனையாக விரிவுபடுத்தி, மெல்ல மெல்ல வளர்த்தெடுத்த ஐடா அன்னை ஐடாவாக அழைக்கப்பட்டபோது இந்தியாவின் மிகப் பெரிய மருத்துவமனையாகவும், தொண்ணூற்று இரண்டு அங்கீகரிக்கப்பட்ட மருத்துவப் படிப்புகளை வழங்கும் மிகப் பெரிய மருத்துவக் கல்லூரியாகவும் சி.எம்.சி வளர்ந்திருந்தது. இன்று சி.எம்.சியில் கிடைக்காத சிகிச்சையே இல்லை.

உலகின் முதல் தொழுநோய் அறுவை சிகிச்சை, இந்தியாவின் முதல் வெற்றிகரமான இதய அறுவை சிகிச்சை, இந்தியாவின் முதல் மது அடிமைகள் மீட்பு மையம், இந்தியாவின் முதல் சிறுநீரக மாற்று அறுவை சிகிச்சை, இந்தியாவின் முதல் நுரையீரல் மாற்று அறுவை சிகிச்சை என்று சி.எம்.சியின் மைல் கற்களை அடுக்கிக்கொண்டே போகலாம்.

1992-ல் பத்தாயிரம் இதய அறுவை சிகிச்சைகள் செய்து சாதனை படைத்த சி.எம்.சி, அத்தனை நோய்களுக்குமான மேம்பட்ட மருத்துவத் தீர்வு தேடி பல கோடிகளை ஆராய்ச்சிக்காக செலவிடும் ஒரே தனியார் மிஷனரி மருத்துவமனை. ஏழைகளிடம் சேவைக் கட்டணம் ஏதுமின்றி பாரபட்சமற்ற மருத்துவ சிகிச்சையை வழங்கி வரும் சி.எம்.சி.யில், எல்லா மாநிலத்திலிருந்தும் வந்து கடந்த ஆண்டு சிகிச்சை பெற்றவர்கள் ஐம்பத்து நான்காயிரம் பேர்.



• அன்னை ஐடா

பதினான்கு அந்நிய நாடுகளிலிருந்து வந்து சிகிச்சை பெற்றவர்கள் ஆயிரத்து இருநூறு பேர். இங்கே இல்லாத நோயியல் பிரிவே இல்லை என்று சொல்லத்தக்க சி.எம்.சியில் பணியாற்றும் மருத்துவர்கள், பணியாளர்களின் எண்ணிக்கை ஐயாயிரத்து முப்பத்து ஏழு.

இப்போது சொல்லுங்கள், பாலாறு வேலூரின் நீர்ச் சிறப்பு என்றால், கோட்டையும், கோவிலும் பக்தி சிறப்பு என்றால், சி.எம்.சி ஊர்ச் சிறப்புதானே!

✉ ஆண்டிப்(ர)பெட்டிச் செய்தியில் போடி தொகுதியில் 1989 ஆம் ஆண்டு ஜெயலலி தாவை எதிர்த்து ஜானகி அணி சார்பாக போட்டியிட்டவர் முத்து மனோகரன் என்று குறிப்பிட்டிருந்தீர்கள். அவர் தி.மு.க. சார் பாகப் போட்டியிட்டவர். ஜானகி அணி சார்பாக போட்டியிட்டவர் நடிகை வெண்ணிற ஆடை நிர்மலா.
குடியாத்தம், ஊ.அ. அன்பு.

✉ பா. விஜய்யின் காதல் கொப்பளிக்கும் கவிதை வரிகள் திரும்பத் திரும்ப படிக்க, ரசிக்கத் தூண்டின.
திருச்சி - 1, பெரம்பலூர் செல்வம்.

✉ மயிலானந்தத்தின் வாழ்க்கை முறை, வாழ்க்கையில் முன்னேறத் துடிக்கும் இளந் தலைமுறையினருக்கு டானிக் போல உள்ளது.
மதுரை - 1, பாலா.




# வேப்பெண்ணெய் தடவிய சாக்லெட்!

✉ 'கல்கி'யின் அட்டைவளை 'அம்மா' ஏற்றுக் கொள்ளும் பட்சத்தில் மக்கள் மனத்தில் 'அம்மா' ஒரு வைரமாக ஜொலிப்பார் என்பது உறுதி. கல்கியின் அட்டைவஸ் வேப்பெண்ணெய் தடவிய சாக்லெட்!
வேலூர், லக்ஷ்மி ஷங்கர்.

✉ ஆண்டிப்பட்டியில் ஜெயலலிதா வெற்றி பெற்ற பிறகு அரசு நிர்வாகத்தில் என் னென்ன செய்ய வேண்டும் என்பதை தா. பாண்டியன், சுதர்சன நாச்சியப்பன் திருமா வளவன், பீட்டர் அல்போன்ஸ் போன்ற வர்கள் தெரிவித்த அறிவுரைகளின்படி ஜெய லலிதா முதல்வர் பணியாற்றினால் தமிழகமே சுபிட்சமாகி விடும். செய்வாரா ஜெ...?
புதுச்சத்திரம், எம். அரங்கநாதன்.

✉ ரிஷபனின் 'கடிதம்' வெகு சுகம். நளின மான கதை. காதலை இத்தனை எளிமையாய் 'sweet-nothings' பாணியில் வாசிக்க முடிந்தது அழகான வாசிப்பனுபவம்.
சென்னை - 58, எஸ். சங்கரநாராயணன்.

✉ "பிரமிக்க வைக்கிறார், பிழைக்கத் தெரி யாத மனிதர்?" என்ற கட்டுரையைப் படித் தேன். எஸ்.கே.எம். நிறுவனத்தில் 1984 லிருந்து 1987 வரை நான் பணிபுரிந்தேன். தங்கள் கட்டுரையில் எழுதியிருக்கும் ஒவ்வொரு நற்பண்பும் மயிலானந்தத்துக்கு ஆண்டவன் பிறவியிலேயே அளித்ததாகும். வருமான வரி இலாகாவுக்கு வருமான வரி சரியாகக் கட்டுவார் என்ற உண் மையுடன், வருமான வரி இலா காவுக்குக் கூடுதல் வரி கட்டுவதை விட, தம்முடைய ஊழியர்கள் அனைவருக்கும் வருட ஊதிய உயர்வு நிறைய தந்து, அவர்கள் சந்தோஷப்படுவதைக் கண்டு தாமும் சந்தோஷப்படுபவர்.
மும்பை - 37, விசாலாட்சி.

✉ சுமியின் நகைச்சுவை 'வோட்ஹவுசியன்'. அவர் ஷீ'யாக இருந்தாலும் அல்லது ஹி'யாக இருந்தாலும்...
புதுடெல்லி, சுப்புடு.

இவ்வார கல்கியில் இடம் பெற்றுள்ள வேலூர் செய்தி கள், கட்டுரைகள்:
**ஆர்.சி. ஜெயந்தன்.**
படங்கள் : **ராஜன்**

மூலிகை கேலரி
அடுத்த வாரம்

வட்டமேஜை

# வேலூர் எக்ஸ்பிரஸ்!



## நான் ரெடி! அரசாங்கம் ரெடியா?

பி.எஸ்.சி. பி.எல். படித்துவிட்டு, வழக்குரைஞராகப் பணியாற்றி வந்த எம். வேங்கடசுப்புவுக்கு, நீதிமன்றங்களில் காத்திருந்து வாய்தா வாங்கும் வக்கீல் தொழில் வெறுத்துப் போய்விட்டது. விளைவு? கறுப்பு அங்கியைத் தூக்கிப் பரணில் போட்டுவிட்டு வேலூரில் உயர்ரக உணவு விடுதி ஒன்றைத் தொடங்க.. மெகாஹிட்! அடுத்து வரிசையாக உணவு விடுதிகள் வளர... பார்த்தார் 'டார்லிங் ரெசிடென்சி' என்ற நான்கு நட்சத்திர விடுதியை உருவாக்கிவிட்டார். "வேலூருக்கு இது கொஞ்சம் அதிகம்தான். ஆனாலும் வேலூரைச் சுற்றியுள்ள தொழில் நகரங்களுக்கு வருகை தரும் தொழில்துறை பிரதிநிதிகளுக்காகவே இந்த ஹோட்டலை உருவாக்கியுள்ளோம்" என்கிறார். "கோட்டை அகழியைச் சுத்தம் செய்து படகுவிட நான் ரெடி! ஒத்துழைக்க அரசு ரெடியா?" கேட்கிறார் இந்தத் தொழில் அதிபர்.

## சக்தி அம்மா!

வேலூருக்கு வந்துவிட்டு, சக்தி அம்மாவைத் தரிசிக்காமல் போவது பெருங்குறை என்றார்கள் நாம் சந்தித்த பலரும். யார் இந்த சக்தி அம்மா? வேலூர் புறநகரான திருமலைக் கோடியில் 'ஓம் சக்தி நாராயணி சித்தர் பீடம்' என்ற ஆன்மிகத் தொண்டு நிறுவனத்தைத் தோற்றுவித்து அதன் காவலராக இருந்து, பல்வேறு சமூக சேவைகளைச் செய்து வரும் இளம் துறவி.

திருமலைக்கோடியில் எட்டுப்பட்டை என்று சொல்லக்கூடிய வடிவில் விசேஷ விமானத்துடன் ஸ்ரீ நாராயணி அம்மனுக்குக் கோவில் எழுப்பியிருக்கும் இவர், நாராயணி சேவா என்ற பெயருடன் நித்ய அன்னதானம் வழங்கி வருகிறார். இதுதவிர கோசாலா என்னும் பசுக்கள் காப்பகத்தை உருவாக்கி, அதன் மூலம் கிடைக்கும் பாலை, ஏழை எளிய மக்களுக்கு வழங்கி வருகிறார்.

வித்யா நேத்ரம் திட்டம் மூலம் பத்தாம் வகுப்பில் பள்ளிகளில் முதலிடம் பெறும் ஐந்நூறு மாணவர்களுக்குச் சைக்கிள் வழங்குதல், ஆரோக்கியா திட்டம் மூலம் உடல் ஊனமுற்றவர்களுக்கு மூன்று சக்கர சைக்கிள்கள், காதொலிக் கருவிகள் என்று தேவையறிந்து வழங்குதல், கல்யாணி திட்டம் மூலம் ஏழைகளுக்கு இலவச திருமணம், புனர் ஜென்மா திட்டம் மூலம் சிறைவாசிகளின் குழந்தைகளுக்கு உயர் கல்வி வழங்குதல், மாத்ரு கங்கா திட்டம் மூலம் பள்ளி, கல்லூரி, மருத்துவமனைகளுக்குக் குடிநீர் வசதி செய்து தருதல் என்று கலக்கிக் கொண்டிருக்கிறாராம். கடைசிவரை சக்தி அம்மாவைச் சந்திக்க முடியாமல் திரும்பினோம். காரணம், நாம் போகிற போதெல்லாம்... அவர் மக்களைச் சந்திக்கப் போய்விட்டிருந்தார். மடத்திற்குள்ளேயே தங்காத மடாதிபதி!






## உரிஞ்சும் தெருக்கள்!



வேலூர் சி.எம்.சி. மருத்துவமனைக்கு எதிரில் உள்ள பாபுராவ் தெரு, கோபி செட்டித் தெரு ஆகிய இரண்டு தெருக்களையும் வேலூர் வாசிகள் உரிஞ்சும் தெருக்கள் என்றுதான் அழைக்கிறார்கள். காரணம் வட மாநிலங்களில் இருந்து சிகிச்சைக்கு வருபவர்கள் தங்குவதற்கு வசதியாக இந்த இரண்டு தெருக்களிலும் சுமார் நாநூறு தங்கும் விடுதிகள் இருக்கின்றன. இந்த விடுதிகள், நகராட்சி குடிநீர் குழாய்களில் மோட்டர் போட்டுத் தண்ணீரை உரிஞ்சிவிடுவதால் தான் இந்தப் பட்டப் பெயர்! இந்த இரண்டு தெருக்களையும் நம்பி ஐயாயிரம் லாட்ஜ் ஊழியர்கள் பிழைத்து வருகிறார்கள். இவர்களது மாதச் சம்பளமோ ரூபாய் நானூறிலிருந்து அறுநூறு வரை மட்டும்தான். வாடகை விவகாரத்தில் எப்படியாம்? வேலூர் தங்கும் விடுதி உரிமையாளர் சங்கத் தலைவர் சி.பி. ராமகிருஷ்ணன் சொல்வதைக் கேளுங்கள். ''ஐம்பது ரூபாய் வாடகை முதல், ஏ.சி வசதி கொண்ட அறைக்கு நாநூறு ரூபாய் வரை வாடகை வசூல் செய்கிறோம். நாளுக்கு நாள் போட்டி அதிகரித்து வருவதால் முப்பது முதல் ஐம்பது சதவிகித அறைகள்தான் நிரம்புகின்றன'' என்று சொல்லும் இவர், ''உரிமை பெறாமல் சைதாப்பேட்டை லத்தீப் பாஷா தெரு, காகித பட்டறை போன்ற இடங்களில் தங்கும் விடுதிகள் இயங்குவதை நகராட்சி கண்டு கொள்வதேயில்லை... எல்லாம் கையூட்டு'' என்று குரல் கொடுக்கிறார்.

## வயித்து பொளப்புங்க!



நான்கு வருடமாக வேலூர் லாங் பஜார் மார்க்கெட்டில் கறிவேப்பிலை, கொத்தமல்லி, புதினா வியாபாரம் செய்து பிழைப்பு நடத்தி வரும் மலர், "இப்படி திங்கிற சோத்துல மண்ணைப் போடலாமா?'' என்கிறார். "அப்படி என்ன நடந்து போச்சு?" என்று பரிவுடன் விசாரித்தால், "நாளையிலேர்ந்து லாங் பஜார் வழியா பஸ் விடப் போறாங்களாம். என்னை மாதிரி இங்கே கடை போட்டுக் குடும்பத்தை ஓட்டுறவங்க கதி என்னாகும்னு நினைச்சுப் பார்த்தாங்களா? எங்ககிட்ட ஒரு வார்த்தை கேட்டாங்களா?'' என்கிறார். மலர் கடை போட்டிருப்பது பிளாட்ஃபார்மில் அல்ல; நடுரோட்டில்! லாங் பஜார், சிட்டி பஜார், மெயின் பஜார், உள்ளிட்ட முக்கிய கடைவீதிகளில் மலரைப் போல நடுரோட்டில் கடை போட்டிருப்பவர்களின் எண்ணிக்கை ஆயிரத்தைத் தொடும் என்கிறார் ஒரு நகராட்சி அலுவலர். இதனால் இந்த மூன்று தெருக்களிலும் இருபத்து நான்கு மணி நேரமும் டிராபிக் ஜாம்தான்.

## கத்தரிக்கா... கத்தரிக்கா... முள்ளு கத்தரி!



வேலூரில் முள்ளுகத்தரிக்காய் ரொம்பப் பிரபலம். இதன் சுவை ஆபாரமானது. கொஞ்சம் கசப்புத் தன்மை இருப்பதால் ரத்தக் கொதிப்பு, சர்க்கரை நோய், வயிற்றுப் புழு போன்றவற்றுக்கு இதை வத்தலாக்கிக் குழம்பு வைத்துச் சாப்பிடுவது வேலூரில் நீண்ட காலமாக நின்று நிலவும் வழக்கம். இதனால் இதற்கு மருந்து கத்தரி என்ற செல்லப் பெயரும் உண்டு. வேலூர் லாங்பஜாரில் முள்ளு கத்தரிக்காய் விற்றுக் கொண்டிருந்த அமுதாவிடம், ''கிலோ என்ன விலை?'' என்றோம். ''நல்லது பதினாறு! சொத்தை பன்னிரண்டு'' என்றார். கடவுளே! சொத்தையையும் வாங்குவார்களா? கத்தரி வத்தலுக்குச் சொத்தைதான் நல்லாயிருக்குமாம்!

## மாங்காய் மண்டி மகாத்மியம்!



ஆந்திராவின் அருகாமையில் இருக்கும் ஊர் என்பதால், வேலூர் மாங்காய் மண்டி மிகப் பிரபலம். 1863ல் தொடங்கப்பட்ட மிகப் பழைமையான இந்த மாங்காய் மண்டியிலிருந்துதான் தமிழகத்தில் வடமாவட்டங்களுக்கு மாங்காய் சப்ளை செய்யப்படுகிறது. நாம் போனபோது சாத்துக்குடி சீஸன். மண்டியின் முதல் கடையில் வியாபாரம் செய்து கொண்டிருந்தார் மகபூப் மீரான். ''மாம்பழ சீஸன்தான் எங்களுக்கு லாபத்தை அள்ளித் தரும். அதிலும் அல்பான்சோ, இமாயத்து, காதர் பாதாமி, கலாபாடு மாம்பழ வகைகளுக்கு ஆண்டு தோறும் மவுசு அதிகரிக்கிறது..'' என்கிறார்.

மாம்பழம் தவிர சாத்துக்குடி, ஆரஞ்சு, ஆப்பிள், மாதுளை சப்போட்டா, தர்பூசணி என்று சீசன் பழங்களுக்கும் இதுதான் மண்டியாம். அங்கிருந்து விடைபெற முயன்ற நம்மை மடக்கி ''எங்களையும் படம் எடுங்க'' என்று அன்புக் கட்டளையிட்டனர், அங்கே தர்பூசணி மொத்த வியாபாரம் செய்துகொண்டிருந்த சேகரும் அவர் நண்பர்களும். ஒரு டன் தர்பூசணி இரண்டாயிரம் ரூபாய். ஒரு டன்னில் இருநூறு காய்கள் இருக்குமாம்.

## வாசகர் வைரம்!

வேலூரில் தொடர்ந்து கல்கியை வாசித்து வரும் ஓர் இளம் வாசகரையும், ஒரு மூத்த வாசகரையும் சந்திக்க விரும்பி நமது முகவரிடம் முகவரி வாங்கிக் கொண்டு முதலில் இருபது வயது முரளி வீட்டுக் கதவைத் தட்டினோம். "பள்ளி நூலகத்தில்தான் எனக்குக் கல்கி அறிமுகமானது. முதலில் கல்கியில் வெளிவரும் சிறுகதைகளை விரும்பிப் படிக்க ஆரம்பித்தேன். பிறகு தராசு பதிலும், காதில் விழுந்தவையும் பிடித்துப் போக... தொடர்கதைகள் தவிர மற்ற எல்லாவற்றையும் படித்து விடுவேன். பள்ளியைவிட்டு கல்லூரிக்கு மாறியதும் கல்கியைக் கடையில் வாங்கிப் படிப்பது அனிச்சையாகிவிட்டது."



அறுபது வயது சிவப்பிரகாசம் "அமரர் கல்கியின் தொடர்களுக்காக திரும்பத் திரும்ப வாங்குகிறேன்" என்கிறார். "பதினாறு வயதிலிருந்து கல்கி வாசித்து வருகிறேன். அன்று தொடங்கி இன்று வரை புத்தகத்தை வாங்கியதும் முதலில் பிரித்துப் படிப்பது தலையங்கத்தைத்தான்" என்கிறார்.

## பாவப்பட்ட ஜனங்க!

''வேலூர் மக்கள் தொகையை விட இங்கே பன்றிகள்தான் அதிகம். நடந்து போகிற நாங்கள் இவற்றால் அடிக்கடி அடிபடுகிறோம். சைக்கிள், மோட்டார் சைக்கிளில் போவோர் பன்றிமீது மோதினால் தோஷம் என்று ஒதுங்கிப்போய், பள்ளத்தில் விழுந்து விபத்துக்குள்ளாகி காயமுறுவதும், கைகால் ஒடிவதும் சர்வ சாதாரணம்'' என்று கொசப்பேட்டையைச் சேர்ந்த சதீஷும் அவர் சகோதரியும் சொல்லிக் கொண்டிருக்கும்போதே ஒரு பன்றி அருகில் வந்து நம்மை இடித்து விட்டு கூலாகப் போனது.



''இப்போதைய அ.தி.மு.க. நகர சபைத் தலைவர் வோட்டுக் கேட்க வந்தபோது. 'எங்களுக்கு வேறு ஒன்றும் நீங்கள் செய்ய வேண்டாம். பன்றிகளைச் சுட்டுத் தள்ளுங்கள் போதும், என்றோம். ஆனால் அவர் பணம் வாங்கிக் கொண்டு பன்றிகளை வளர்க்க அனுமதிக்கிறார் என்று கேள்விப்பட்டு நொந்து போனோம்'' என்கிறார் ஆணைக் குளத்தம்மன் பகுதியைச் சேர்ந்த சண்முக ஆச்சாரி. ''நான் பலமுறை பன்றிகளின் தாக்குதலுக்கு ஆளானவன் நீங்க ஊருக்குப் புதுசு பார்த்துப் போங்க'' என்று பயம் காட்டினார். அவர் சொன்னது நிஜம் என்று அனுபவபூர்வமாக உணர்ந்தோம்.

## மாற்றான் தோட்டம்

(பிற பத்திரிகைகளில் வெளியான சில கடிதங்கள்)



குளிர்பான விளம்பரத்தில் தோன்றுவதற்கு நமது அத்தனைப் பிரபலங்களும் தயாராக இருக்கும்போது (பாட்மின்டன் சாம்பியன்) கோபிசந்த் அப்படியொரு வாய்ப்பை மறுத்ததற்காக அவருக்கு மனமார்ந்த பாராட்டுகள். சினிமா, கிரிக்கெட், டென்னிஸ் போன்று பணத்தை அள்ளித் தருவதல்ல பாட்மின்டன் விளையாட்டு. இருந்த போதிலும் இப்படியொரு பணம் கொழிக்கும் விளம்பர வாய்ப்பை அவர் மறுத்தது பெரிய விஷயம்.

தோல் அலர்ஜியில் தொடங்கிப் பலவித கெடுதல்களை உண்டாக்குகின்றன இந்தக் கோலா பானங்கள். முக்கியமாகக் குழந்தைகள் இவற்றைக் குடிப்பதற்குக் காரணமே அவர்களுக்குப் பிடித்த பிரபலங்கள் அந்தக் கோலா பான விளம்பரத்தில் நடித்திருப்பதுதான்.

*(அவுட்லுக் - கிருஷ்ணகுமார், அகமதாபாத்)*

"அயோத்தியில் ராமர் கோயில் கட்ட நினைக்கும் விஸ்வ ஹிந்து பரிஷத் இயக்கத்தைத் தடை செய்ய வேண்டும்" என்று சந்தர்ப்பவாத கம்யூனிஸ்ட்களும், ஜாதி அரசியல் நடத்தும் சமாஜ்வாடி கட்சித் தலைவரும் கூச்சல் போடுகின்றனர்.

கடந்த 33 வருடங்களுக்கு முன்னால் நிறுவப்பட்ட கண்ணகி சிலையைத் தமிழக அரசு அகற்றியபோது, அதே இடத்தில் சிலையை நிறுவ வேண்டும் என்று திராவிட கட்சிகள் போராட்டம் நடத்துவதை நியாயம் என்று கூறுகின்றனர் இவர்கள். ஆனால், ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் அன்னிய மொகலாயரால் அழிக்கப்பட்ட ராமர் கோயிலை அதே இடத்தில் கட்ட வேண்டும் என்று விஸ்வ இந்து பரிஷத் முயற்சி செய்யும்போது அந்த இயக்கத்தையே தடை செய்ய வேண்டும் என்று கூறுவது வேடிக்கையாக இருக்கிறது. பெண்களில் கண்ணகியும், சீதையும் எப்படி கற்புக்கரசிகளோ, அதேபோல ஆண்களில் ஸ்ரீராமன் மட்டும்தான் 'கற்புக்கரசன், ஏகபத்தினி விரதன்' என்பதை மறந்துவிடக் கூடாது.

இந்தத் தேசத்திற்குத் தீவிரவாதிகளால் இன்னல்கள் வரும்போது கண்ணை மூடிக் கொள்ளும் கம்யூனிஸ்ட்கள், ராமர் கோயில் பிரச்னையை மட்டும் பெரிதாக்கி, முஸ்லிம் வோட்டுக்களைப் பெற நினைப்பது பொறுப்பற்ற செயல்.

*(தினமலர் - சி. ராதாகிருஷ்ணன், கல்லடை)*

"இளைய தலைமுறையினர் அரசு ஊழியர்களாகும் விருப்பத்தைக் கை விட்டுவிடுவதே நல்லது" என்று உங்கள் நாளிதழில் குறிப்பிட்டிருக்கிறார் சவிக் சக்ரவர்த்தி. ஐ.ஏ.எஸ் போன்ற பதவிகளில் அமர்ந்தால் அரசியல்வாதிகளின் விருப்பத்துக்கெல்லாம் வளைந்து கொடுப்பதற்குத்தான் நேரம் சரியாக இருக்கும் என்றும், அதனால் தனியார் நிறுவனங்களில் சேருவதையே இளைஞர்கள் இலட்சியமாகக் கொள்ள வேண்டும் என்றும் கூறியிருக்கிறார்.

நான் 35 வருடங்கள் இந்திய அரசின் கீழ் பணியாற்றியிருக்கிறேன். எந்தச் சூழலிலும் என் மனசாட்சிக்கெதிராகச் செயல்பட்டதில்லை. எந்தப் பணியிலுமே ஒவ்வொரு சப்புக்கும் இணையாக பல இனிமையான, சவாலான தருணங்கள் இருக்கும். ஆனால் இவற்றைப் பலரும் நினைவு கொள்வதில்லை. இளைஞர்கள் சிவில் சர்வீஸ்களில் சேர்ந்து பணியாற்றி நம் நாட்டுக்குப் பெரும் வெற்றியைத் தேடித் தர வேண்டும் என்று அழைப்பு விடுக்கிறேன்.

*(எகனாமிக் டைம்ஸ் - பி.ஆர்.பாசு - ஈமெயிலில்)*

# கற்புக்கரசன்!

தொகுப்பு: ஜி.எஸ்.எஸ்

வேலூர் என்றதும் இப்போது தோலா டைக் கழிவு நீரை நிலக் குறியீடாகவே சுட்டிக் காட்டுகிறார்கள். தமிழகத்தின் தீவிர மாசுபடல் பகுதியாக மணலி, வேலூர் ஆகிய இரு பகுதிகளை மட்டும் சுட்டிக்காட்டு கிறார், மத்திய சுற்றுச் சூழல் அமைச்சர். வேலூர் நகர, மாவட்ட மக்கள் என்று படிக்காத பாமரர்கள்கூட நிலத்தடி நீரைக் குடிநீராகப் பயன்படுத்துவதை நிறுத்திவிட்டதே நிலமையின் தீவிரத்தைச் சொல்கிறது. ஆனால் இப்போதைய பிரச்னை விஷமான பாலாறும், பாழ்பட்ட குடிநீரும் மட்டு மல்ல; வேலூர் மாவட்ட தோல் தொழிற்சாலை கழிவு நீரால், தங்கள் விளை நிலங் களில் பயிரிட முடியாத நிலைக்குத் தள்ளப்பட்ட விவசாயிகளின் பரிதாப நிலைதான்.

மேற்கொள்ளப்பட்டு, கடந்த ஆண்டு மார்ச் மாதம் தீர்ப்பு வழங்கியது.

"வேலூர், ஈரோடு, காஞ்சிபுரம், திருச்சி, திண்டுக்கல் மாவட்டங்களில் பாதிக்கப்பட்ட 29,193 விவசாயிகளுக்கு இருபத்து ஏழு கோடி



• பாய்ந்து வரும் பாய்சன்



• சங்கர சிவம்



வேலூர் சிறப்பிதழ்

# என்னாச்சு நிவாரணம்?

ரூபாய் நிவாரணத் தொகையை, ஐநூற்று நாற் பத் தாறு தொழிற் சாலைகள் நஷ்ட ஈடாகக் கொடுக்க வேண்டும் என்றது அந் தத் தீர்ப்பு.

"ஆனால் இதுவரை எழுபத்து ஆறு தொழிற் சாலைகள் மட்டும் வெறும் முப் பத்து இரண்டு லட் சத்தை மாவட்ட நிர் வாகத்திடம் ஒப்படைத் துள்ளன. அந்தத் தொகை யையும் கூட இன்னும் விநி யோகிக்காம லிருக்கிறது மாவட்ட நிர்வாகம் தொழிற் சாலைகளிடமிருந்து நஷ்டயீட்டை வசூல் செய்யாமல் மாவட்ட ஆட்சியரும், மாசுக்கட்டுப்பாட்டு வாரியமும் வேடிக்கைப் பார்ப்பது ஏன்?" என்று கேள்வி எழுப்புகிறார்கள் வேலூர் மக்கள் நலக்குழு நிர்வாகிகள்.

பாழ்பட்ட ஒரு லட்சத்து இருபதாயிரம் ஏக்கர் நிலங்களை நம்பி ஜீவனம் நடத்தி வரும் முப்பத்தையாயிரம் விவசாயிகளுக்கு உரிய நிவாரணம் வழங்க வேண்டும் என்று உச்சநீதிமன்றத்தில் வேலூர் மக்கள் நல பாதுகாப்பு குழு, 1991ஆம் ஆண்டு தாக்கல் செய்த புகார் மனு மீது விசாரணை

"உச்ச நீதிமன்றத்தில் நாங்கள் ரிட் மனு தாக்கல் செய்யும் வரையில் எங்கள்

எண்ணற்ற கடிதங்களுக்குப் பதில் அளிக்காத மாசுக்கட்டுப்பாட்டு வாரியம், 1992ஆம் ஆண்டு உச்சநீதிமன்ற ஆணைக்கு இணங்கி, தமிழகத்தில் 553 தோல் தொழிற்சாலைகள் மட்டுமே இருப்பதாகப் பெரும் பொய் உரைத்து. ஆனால் நீதிமன்றத்தால் அமைக்கப்பட்ட 'தேசிய சுற்றுச்சூழல் பொறியியல் ஆய்வுக் கழகம் தனது அறிக்கையில், தமிழகத்தில் 900 மாசு உண்டாக்கும் தோல் ஆலைகள் இருப்பதை மாசுக் கட்டுப்பாட்டு வாரியமே தங்களிடம் ஒத்துக் கொண்டதாகக் கூறியது. தவிர இந்த





• நகர எல்லைக்குள்ளிருக்கும் ஒரு தோல் தொழிற்சாலை



• மக்கள் நலப் பாதிப்புக் குழுவினர்

தொழிற் சாலைகளில் ஐந்து சதவிதம் மட்டுமே கழிவு நீர் சுத்திகரிப்பு பணிகளில் கவனம் செலுத்துவதாக புட்டுப் புட்டு வைத்தது. தமது மாசுக் கட்டுப்பாட்டு வாரியம் புரையோடிய ஊழலின் மொத்த உருவமாக இருக்கும்வரை, தமிழகத்தைச் சுற்றுச் சூழல் சீர்கேட்டிலிருந்து எப்படிப் பாதுகாப்பது?" என்று கொதிக்கிறார்கள் வேலூர் மக்கள் நலபாதுகாப்புக் குழுவின் தலைவர் சங்கரசிவம், துணைத் தலைவர் பூபதி, செயலாளர் சுப்ரமண்யம், பொருளாளர் கௌளம் சிங்கி. ஆகியோர்.

வேலூர் நகரையொட்டிப் பாதிக்கப்பட்ட விவசாயிகளைச் சந்தித்தோம்... "சுத்திகரிக்கப்பட்ட கழிவு நீரைத்தான் வெளியே விடுகிறோம் என்று தொழிற்சாலைகள் வைத்திருப்போர் சொல்கிறார்கள். அது உண்மையாயின் விளைநிலம் ஏன் பாதிக்கப்படுகிறது? எனது நெற்பயிர்கள் கடந்த நான்கு ஆண்டுகளாகக் கருகி விடுவது ஏன்?

எண்பத்து ஐந்தாம் வருடம் வரை ஒரு ஏக்கரில் முப்பது மூட்டை மகசூல் கிடைத்து வந்த எனது நிலத்தில் இன்று வெறும் பன்னிரண்டு மூட்டை மட்டும் கிடைப்பது ஏன்?" என்று கேள்வி மேல் கேள்வி கேட்கும் ராஜாமணிக்கு நிவாரணம் கிடைக்கவில்லை.

"நூறு விவசாயிகள் பாதிக்கப்பட்டிருந்தால் நான்கு பேருக்கு மட்டுமே நிவாரணம் என்கிறார்கள். அதையும் எப்போது வசூலித்துக் கொடுப்பார்களோ தெரியாது. நிவாரணத்தை நம்பிக் கொண்டிருக்க முடியாது என்பதால் இந்த நச்சு நிலத்தில் விளைந்த நச்சுத்தன்மை கொண்ட அரிசியையே சாப்பிட்டு வயிற்றைக் கழுவிக் கொள்கிறோம்'' என்கிறார் கண்ணீர்ப் பெருக.

மேஷம் : உங்கள் கிரகங்கள், அனுகூலம், ஆதாரம் என இரு முறை ஆசீர்வாதம் செய்திருக்கின்றன. அரசுப் பணியாளர்கள் வளர்ச்சி அடைவார்கள். அரசியல்வாதிகள் மதிப்புயரும். கலைத்துறைக்காரர்கள் முன்னணிக்கு உயருவார்கள். வியாபாரிகளுக்கு வளர்ச்சி ராசிநாதன் செவ்வாய் ஜென்மராசியில், சனி 2ல் என்பதால், உடல் நலம் கெடலாம். உஷார்! கொடுக்கல் வாங்கலில் கவனமிருக்கட்டும். கிரக வழிபாடு மன அமைதி தரும்.

ரிஷபம் : உங்கள் காதில் சுபச் செய்திகள் வந்து விழும். அரசு விவகாரங்களில் நன்மையான திருப்பம் கிடைக்கும். திருமணமாகாதவர்களுக்குக் கெட்டிமேளம் கொட்டும். மக்கட்பேறு இல்லாதவர்களுக்கு 'ஸ்வீட் நியூஸ்' வாய்க்கும். உத்தியோகஸ்தர்கள் முன்னேற்றம் காண்பார்கள். போட்டி, பந்தயம், விளையாட்டு வினோதம் எல்லாவற்றிலும் நீங்க தான் ஜெயிப்பீங்க. செவ்வாய் 12ல் இருப்பதால், வீண் வாக்குவாதம், சண்டை, சச்சரவு என ஏதேனும் வம்பு கிளம்பும். முருகனைப் பிரார்த்தனை செய்து கொண்டு, சுகமாகச் சமாளியுங்க.





மிதுனம் : வண்டலூர் பூங்காவில் ஏதோ ஒரு மிருகம் பதுங்கியிருந்து பீதியூட்டியதே... அதுபோல, ஜென்ம ராசியில் இருக்கும் குரு, 12ல் இருக்கும் சனி ராகுவுடன் சேர்ந்து மிரட்டுவதால், பண விஷயத்தில் ஏகப்பட்ட எச்சரிக்கை தேவை. வீண் செலவு, எதிர்பாராத இழப்பு என கலங்கடிக்கும். செவ்வாய் 11ல் எக்கச்சக்க பலம் கூடித் திகழ்வதால், கவலைப்படேல். எதிரிகள் விலகுவார்கள். திறமை கூடும். சிவப்பு நிறம் இலாபம் கொண்டு வரும். மனை, நிலம், வீடு போன்ற இனங்கள் ஆதாயம் காட்டும். ஞானமார்க்கத்தில் ஈடுபடுங்கள். மனத் தெளிவு கிடைக்கும்.

கடகம் : ரயில்வே பட்ஜெட் கடுமையாக இருப்பதற்கான அறிகுறி முன்கூட்டியே தெரிய ஆரம்பித்துள்ளது போல, உங்கள் குடும்பத்தில் சிறுசிறு சலசலப்புகள் ஏற்படுவதற்கான சூழ்நிலை தெரிகிறது. இருந்தாலும், பொறுமையைக் கேடயமாகப் பூண்டு, தைரியமாகச் சமாளிப்பீர்கள். சுக்ரன், சனி, ராகு, செவ்வாய் நான்கு பேருமே ப்ரைம் ஸ்லாட்டில் இடம் பிடித்த மொகாத் தொடர்கள் போல கம்பீரமாக இருப்பதால், வசீகரம், திறமை, சாமர்த்தியம் வெளிப்படும். பயணம் அனுகூலம் தரும். உலோகம், எண்ணெய், தோல் பொருள்கள் இலாபம் கொண்டு வரும். கறுப்பு, கருநீலம் ராசியான நிறம்.

சிம்மம் : 'டைட்டானிக்' பட வசூலை முறியடித்திருக்கும் 'ஹாரிபாட்டர்' பட சாதனை போல, நீங்களும் சாதனை புரியும் காலம் வந்தாச்சு. திடீர் அதிர்ஷ்டம் பெறுவீர்கள். குடும்பத்தில் மகிழ்ச்சி இருக்கும். புதிய முயற்சிகள் கை கூடும். பேச்சாற்றல் அதிகரிக்கும். மக்களால் பாக்கியம் உண்டாகும். தெய்வப் பணிகள் நிறைவேறும். ஞான மார்க்கத்தில் மனம் ஈடுபடும். செவ்வாய் 9ல் நலம் செய்வார். 4ல் கேது, 7ல் சூரியன் இருப்பதால் அலைச்சல் அதிகரிக்கும். உடல் நலத்தில் கவனம் தேவை.





கன்னி : நடிகர் கமல்ஹாசன் கட்ட மறுத்த அபராதத் தொகையை, 'பஞ்சதந்திரம்' பட அதிபர் கட்டி, சிக்கல் தீர்த்தது போல, உங்களுக்கும் முக்கியஸ்தர்கள் மனமுவந்து உதவுவார்கள். எதிர்ப்புகளை லாகவமாகச் சமாளிப்பீர்கள். அரசு விவகாரங்கள் அனுகூலமாகும். நிர்வாகத் திறமை அதிகரிக்கும். மக்களால் அளவோடு நன்மை. வாழ்க்கைத் துணை உடல் நலனில் கவனம் தேவை. கூட்டாகத் தொழில் புரிவோர் எச்சரிக்கையுடன் இருக்கணும்.

# நடக்குமென்பார்; நடக்கும்!

**துலாம் :** 'ஜெயலலிதா பிறந்த நாளில் பிறக்கும் குழந்தைகளுக்கு, தங்க மோதிரம் பரிசு என்று அறிவித்திருக்கும் அமைச்சர் ஜெயக்குமாரின் வள்ளல் குணம்,' இந்த வாரம் உங்களுக்கும் வாய்க்கும். நிறைய தான தருமங்களில் ஈடுபடுவீர்கள். ரேஸ், பங்கு மார்க்கெட், லாட்டரி அதிர்ஷ்டம் அள்ளித் தரும். மதபோதகர்கள், ஆன்மிகவாதிகள், சட்டவல்லுனர்கள், ஆசிரியர்கள் தங்கள் நிலை உயரப் பெறுவார்கள். புதிய ஒப்பந்தங்கள் பயன் தரும். திருமணம் போன்ற சுபகாரியங்கள் நடக்கும். வாழ்த்துக்கள்.





**விருச்சிகம் :** ராசிநாதனும், சுக்ரனும் படு அனுகூலம் என்பதால், பணத்தைப் பற்றிக் கவலையேபடாதீங்க. செல்ஃபோன் விளம்பரத்தில் மணிவண்ணன் சொல்வது போல, 'உங்க கல்லா எப்பவும் ஃபுல்லா இருக்கும்!' மாணவர்கள் படிப்பில் முழு கவனம் செலுத்த வேண்டும். கணிதம், பத்திரிகை, எழுத்து ஆகிய இனங்களில் விழிப்புடன் செயல்படுவது அவசியம். குறுக்கு வழியில் போக வேண்டாம். வெளிநாட்டுத் தொடர்பால் அனுகூலமில்லை. செவ்வாய் 6ல் என்பதால், எதிர்ப்புகள் குறையும்; செயலில் வேகம் பிறக்கும். தொழிலில் அபிவிருத்தி தெரியும்.

**தனுசு :** ஆண்டிபட்டி பிரசாரத்தில் மு.க. அழகிரியும், ஸ்டாலினும் இணைந்து பிரசாரம் செய்து தொண்டர்களுக்குத் தெம்பூட்டியதுபோல, இந்த வாரம் குருவும் சுக்ரனும் இணைந்து உங்களுக்கு உற்சாகம் தருவார்கள். இதனால் குடும்பத்தில் குதூகலம் அதிகரிக்கும். கொடுக்கல் - வாங்கலில் முன்னேற்றம். பெண்கள் அபிலாஷை நிறைவேறும். கணவன் - மனைவி உறவு நிலை திருப்தி தரும். இரக வழிபாடு மூலம் நலம் பெறலாம்.


நடிகர் அம்சவர்த்தனுக்கு (விருச்சிகம்) செயலில் வேகம் பிறக்குமாம்.

**மகரம் :** பிரச்னை உண்டாக்கிய இரும்புச் சத்து மாத்திரை திட்டத்தை தமிழக அரசு நிறுத்தி வைத்தது போல, நீங்களும் அகலக் கால் வைக்கும் திட்டங்களைத் தள்ளிப் போடலாம். 5ல் சனி, ராகு 6ல் குரு உலவுவதால், மக்கள் நலனில் அக்கறை தேவை, குடும்பத்தில் அமைதி நிலவும். பெண்கள் நிலை உயரப் பெறுவார்கள். எதிர்ப்புகள் விலகும். பெரியோர், அதிருப்திக்கு ஆளாகக் கூடாது. சுபகாரியங்கள் நடக்க ஜனன கால ஜாதக பலம் அவசியமாகும். எதிலும் நிதானம் தேவை.





**கும்பம் :** 'நான் கிருஷ்ணரின் மறு அவதாரம்' என்று லல்லு பிரசாத் சொல்கிறாரல்லவா! நீங்களோ புத்திசாலித்தனத்தின் மறு உருவம். அதனால் திறமைக்கு குறைவேது? இந்த வாரம் முழுக்க மனத்தில் மகிழ்ச்சி நிறைந்திருக்கும். கேளிக்கை, உல்லாசங்களில் ஈடுபாடு அதிகரிக்கும். பொருளாதார நிலையில் பல முன்னேற்றம். மக்களால் பாக்கியம். வாழ்க்கைத் துணையால் சந்தோஷம். மனுஷனுக்கு இதைவிட என்ன தேவை? ராசியில் சூரியன் உலவுவதால், உஷ்ண சம்பந்தமான உபாதைகள் ஏற்படலாம். உஷார்.

**மீனம் :** எல்லாவற்றையும் புத்திசாலித்தனத்தோடு செய்து முடிப்பீங்க. காரணம், சுக்ரன், புதன், சனி, ராகு ஆகியோரது சஞ்சாரம்தான். உழைப்புக்குத் தகுந்த பலன் கிடைக்கும். திறமைக்கு ஏற்ற புகழ் சேரும். அப்புறம் என்ன? ஆண்டிபட்டி அரசி போல, நீங்களும் வாக்குறுதிகளை அள்ளி வீசுங்க. கணவன் - மனைவி உறவு நிலை கலகலப்பாக இருக்கும். கூட்டாகத் தொழில் செய்பவர்கள் அனுகூலம் அடைவார்கள். விவசாயம், பண்ணை வைத்திருப்பவர்கள், வருமானம் குவிக்கலாம். பெண்கள் எண்ணம் நிறைவேறும். கால், பாதம் போன்ற இடங்களில் பாதிப்பு ஏற்படலாம். உஷார்.



# சார்லி சாப்ளின்

மறுபடியும் ஒரு அசத்தல் எண்டெர்டெய்னர் தருவதில் முழு வெற்றி பெற்றிருக்கிறார் சக்தி சிதம்பரம்.

உண்மையை மறைக்க ஒரு பொய் சொல்ல நேர்ந்தால் அதை மறைக்க அடுக்கடுக்காய்ப் பொய் சொல்ல வேண்டிய அவலம் நேரும். இறுதியில் முகத்திரை கிழிந்து இக்கட்டு எனும் படிக்கட்டில் தடுக்கி விழுந்து தாடை உடையும் என்பதே கதைக்கரு. இதைக் கொஞ்சம் காதல், கொஞ்சம் சென்டிமெண்ட் கலவையோடு, தெளிவான திரைக்கதை, உதைக்காத காட்சிகள், நறுக்சுறுக் வசனங்கள் மூலம் நகைச்சுவை திருவிழா ஆக்கியிருக்கிறார்கள்.

நண்பர் லிவிங்ஸ்டன் காட்டிய வழி(?)யில் 'கால்கேர்'ளை மனைவி இல்லாத தருணத்தில் வீட்டுக்கு வரச் சொல்லிவிட்டுத் திடீரென மனைவி வந்ததும், அவளை மறைக்க படாதபாடு படும் பிரபு, பெரிய நடிகர் (உருவத்திலும்தான்) என்பதைக் காட்சிடு காட்சி பிரதிபலிக்கிறார்.

நடிப்பில் பாஸ் மார்க் வாங்கும் அறிமுக நாயகி காயத்ரி ரகுராம், நடனத்தில் கிளப்போ கிளப்பென்று தூள் கிளப்பியிருக்கிறார். நடன இயக்குனரின் மகள் என்றால் சும்மாவா?

கண்ணுக்கு இலட்சணமாய்ப் புடைவை கட்டிக் கொண்டு, கணவனைச் சந்தேகப்படும் மனைவியாக அபிராமி கச்சிதம் என்றாலும், ஒரு பாடலுக்குப் புடைவையை உருவி எறிந்து விட்டு டண்டணக்கு டண்டணக்கென்று டப்பாங்குத்து ஆடுவதைச் சகித்துக் கொள்ள முடியவில்லை.

பிரபுதேவா டைமிங் சென்ஸ் டயலாக் டெலிவரியில் அசத்தினாலும் சில சமயங்களில் அதிர்ச்சி வைத்தியம் மாதிரி உணர்ச்சிகளைக் காட்டுவது கலகலப்பூட்டுகிறது. படத்தில் தனித்துத் தெரியும் மற்றொருவர் கவர்ச்சி முத்திரை குத்தப்பட்ட மோனல்.

பரணியின் இசை தனித்துவம் மிக்கது என்பதற்கு, 'முதலாம் சந்திப்பில்' பாடல் ஒன்றே போதும்... எல்லா பாடல்களும் இனிமை ஆச்சர்யம்! படத்தின் தலைப்பை நம்பி படம் பார்க்கப் போனால் ஏமாற்றாமல் அனுப்பி வைக்கிறார்கள்!

— விஷுவல்தாசன்

• ஆவெரஜ்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publication Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 234562
Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 330/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 165/-; Overseas : Rs. 1000/- (Air Mail)



**"என் குழந்தைக்கு, சரியான அளவில், இன்றியமையாத ஊட்டச்சத்து அளிக்கப்படவேண்டும்.**

# அதனால்தான், நான் செரிலாக்கை நம்புகிறேன்."

என் குழந்தைக்கு, 4 மாதங்கள் முடிந்தவுடன், அவனுக்கு எந்த திட உணவைப் புகட்டத் தொடங்குவது என்று, உண்மையிலேயே நான் யோசிக்கலானேன். வெறுமனே திட உணவு மட்டும் போதுமானது ஆகாது. குழந்தை ஆரோக்கியமாகவும், வலுவாகவும் வளர்ச்சியடைய, சமச்சீரான அளவில் ஊட்டச்சத்துக்கள் நிறைந்த திட உணவு தேவைப்படுவதாய், என் மருத்துவர் கூறினார். எனவேதான், நான் செரிலாக்கையும் புகட்டத் தொடங்கினேன்.''



**செரிலாக் எளிதில் சீரணிக்கத்தக்க, சமச்சீரான போஷாக்கு :**

செரிலாக் தேவையான ஊட்டச் சத்துக்களை, சரியான அளவில் வழங்குகிறது. இயற்கையான புரதச்சத்துக்கள் நிறைந்த, பால் மற்றும் கோதுமை கொண்டு தயாரிக்கப்பட்ட செரிலாக்கில், கார்போஹைட்ரேட்டுகளும், கொழுப்புச் சத்துக்களும் கூட அடங்கியுள்ளன. அத்துடன், அத்தியாவசியமான விடமின்களும், தாதுப் பொருட்களும் இதில் நிரம்பியுள்ளன. இதனால் உங்கள் குழந்தைக்கு, ஒவ்வொரு முறையும் சமச்சீரான உணவு கிடைக்கிறது.

**சீரணிப்பது எளிது, விதவிதமான பல சுவை உணவுகள் :**

நெஸ்லேயின் புரட்சிகரமான 'ஜெட்-கலன் என்ஸைமேடிக் தொழில்நுட்பம், கார்போஹைட்ரேட்டுகளை எளிதில் சீரணிக்க உதவுகிறது. இதனால் மிருதுவான செரிலாக்கை, உங்கள் குழந்தை, எளிதில் சீரணிக்க முடிகிறது.

செரிலாக்கின் சுவையை, குழந்தைகள் மிகவும் விரும்புகின்றன. 4 மற்றும் 6 மாதங்களுக்கு இடையேயான காலத்தில், செரிலாக் வீட் மற்றும் செரிலாக் ரைஸ்- ஆகியவற்றிலிருந்து ஒன்றைத் தேர்ந்தெடுங்கள். பின்னர் பார்த்து மகிழுங்கள் உங்கள் குழந்தையின் மகிழ்ச்சிக் கும்மாளத்தை!




**உங்கள் குழந்தைக்கு செரிலாக் அனுகூலத்தை அளியுங்கள்.**

MPORTANT NOTICE : MOTHER'S MILK IS BEST FOR YOUR BABY. INFANT FOOD SHALL BE INTRODUCED ONLY AFTER 4 MONTHS OF AGE.

महत्वपूर्ण सूचना: माँ का दूध आपके बच्चे के लिए सर्वोत्तम है। ४ महीने के बाद ही उसे शिशु आहार देना शुरू करें।

